# பள்ளித் தோழன்

எஸ். இராமகிருஷ்ணன்

மீனாட்சி
புத்தக
நிலையம்

# பள்ளித் தோழன்

[சோவியத் ஆட்சியின் பரிசைப் பெற்ற நாவல்]



நொஸோவ்

தமிழில்

எஸ். இராமகிருஷ்ணன்

MEENAKSHI PUTHAKA NILAYAM
60, West Tower Street,
Madurai-1.

மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக்கோபுரத் தெரு, மதுரை-1

முதற்பதிப்பு : அக்டோபர் 1953
இரண்டாம் பதிப்பு : ஆகஸ்டு 1967
மீனாட்சி 77




விலை ரூ. 4-00

MEENAKSHI PUTHAKA NILAYAM
60, West Tower Street,
Madurai-1.

அச்சிட்டது :
ஸ்ரீ கலை அச்சகம்
17, நமச்சிவாய முதலி தெரு, சென்னை-5.

# முகவுரை

இது ஒரு ருஷிய நாவல். ஆனால் ருஷியப் பெயர்களைத் தாங்கிவரும் பாத்திரங்கள் நமக்கு அன்னியர்களல்ல. நாம் தினசரி பார்த்துப் பழகும் குறும்புமிக்க சிறுவர்களைத்தான் இந்த நாவலில் சந்திக்கிறோம். விகடம், விளையாட்டு, விஷமம், வைராக்கியம், படிப்பு, நடிப்பு அனைத்திலும் பாலர் உலகத்துக்குப் பொதுவான பண்புகளை ஆசிரியர் படம் பிடித்துத் தந்துவிட்டார்!

அதிசயப் பிறவிகளின் அற்புத நிகழ்ச்சிகளை தொகுத்துத் தொடுத்த மாலையல்ல இது. ஊக்கமும் உளவலியும் படைத்த உண்மைப் பாலர்களின் உயிர்ச்சித்திரம் இது. படித்து விளையாடும் பாலர்கள், சத்தியத்தையும் சமுதாய நீதியையும் அடிப்படையாகக்கொண்ட வாழ்வில் தழைத்துச் செழிப்பதைப் படித்து மகிழ்கிறோம்.

எதிர்காலச் சிற்பிகளான சிறுவர் சிறுமிகள் நாட்டின் வைப்பு நிதியமன்றோ? அந்தச் செல்வத்தை ஆசிரியை ஆல்கா நிகோலிவ்னா எப்படிப் பரிபாலிக்கிறார்! தோழமையையும் கூட்டுப் பொறுப்பையும் போதிப்பதில் பாலர் சங்கம் எத்தகைய பாத்திரம் வகிக்கிறது!

சோவியத் நாட்டின் விற்பன்னர்களில் நொஸோவ் ஒருவர்; சிறுவர் இலக்கியமேதை என்ற சிறப்புக்கு உரியவர். அவருடைய அறிவுக்கும் கற்பனை ஆற்றலுக்கும் நகைச் சுவைக்கும் எடுத்துக்காட்டாக விளங்குமிந்த நாவல், சிறுவர்களின் இதயத்தைக் கவர்ந்துவிட்டது; பள்ளிக்கூட ஆசிரியர்கள், பெற்றோர்கள், பேரறிஞர்கள் ஆகியோரின் புகழ்ச்சிக்குப் பாத்திரமாகிவிட்டது; கிடைத்தற்கரிய சோவியத் இலக்கியப் பரிசையும் பெற்றுவிட்டது.

இந்த நாவலில் நீங்கள் ஆசிரியரைப் பார்க்கமுடியாது. பதினேறு வயதுப் பையன் கதைசொல்லுவது மாதிரி கற்பனை அமைந்திருக்கிறது. இந்தக் கலையில் ஆசிரியர் அற்புதவெற்றி அடைந்துவிட்டார். பாலர் உலகத்தை அவர் அந்த அளவுக்கு அன்புடனும் அடக்கத்துடனும் படித்திருக்கிறார்!

ஆர்வத்தைத் தூண்டியபின், கதைக்கும் உங்களுக்குமிடையே நிற்கக்கூடாது; விடைபெறுகிறேன். கதையைப் படியுங்கள் வணக்கம்.

எஸ். இராமகிருஷ்ணன்

# பொருளடக்கம்

பக்கம்




# 1. பள்ளிக்கூடம் திறந்தது!

இந்த நேரம் பறந்துபோவதைப் பார்த்தால் பயங்கரமாக இல்லையா? கோடை விடுமுறை வந்தது; வருவதற்கு முன் போய்விட்டது. மின்னல் தோன்றி மறைவதைப் போல! நிலை பிடிபடுவதற்குள்ளாக, மீண்டும் 'ஸ்கூல்' திறந்து விட்டது! 'லீவ்' இருந்தவரை, 'குஷி'யாகத்தான் இருந்தது. ஆடி ஓடித்திரிவதும் கால் பந்து ஆடுவதும் தமாஷாகத்தான் இருந்தது. பாடங்களைப் பற்றியும் புத்தகங்களைப் பற்றியும் கவலையே இல்லை. ஏராளமான அருஞ்செயல் கதைகளைப் (Adventure Stories) படித்தேன் என்பது மெய்; ஆனால் பாடப் புத்தகங்களை தொட்டுக்கூடப் பார்க்கவில்லை. கணக்குப் புத்தகம் கிடக்க, ருஷிய மொழியின் இலக்கணத்தைக்கூட நான் புரட்டிப்பார்க்கவில்லை. எப்படியிருந்தாலும் ருஷிய மொழியைப்பற்றி எனக்குக் கவலை இல்லை; எப்பொழுதுமே அதில் நல்ல 'மார்க்கு' வாங்கியிருக்கிறேன். ஆனால் இந்தக் கணக்கு விஷயம் வேறு; எனக்கு எப்பொழுதுமே கணக்கைக் கண்டால் பிடிக்காது. கணக்கிலே மிகவும் பின்தங்கி இருப்பதால், ஆல்கா நிகோலிவ்னு எனக்கு விடுமுறையில் போடுவதற்கு கணக்குப் பாடப்பயிற்சிகளைக் கொடுப்பாள் போலிருந்தது! ஆனால் என்னிடம் இரக்கப்பட்டு, நான்காவதுக்கு அனுப்பிவிட்டாள். என்னைப்

போன்ற பதினேறு வயதாகப் போகிற பையன், பள்ளிக் கூடத்தில் நான்காவது ஆண்டில் படிக்கும் வகுப்பைத்தான் நான்காவது என்று குறிப்பிடுகிறேன்.

"உன் கோடை 'லீவை'க் கெடுப்பதற்கு நான் விரும்ப வில்லை; இந்தத் தடவை உன்னை 'பாஸ்' செய்துவிடுகிறேன். ஆனல் விடுமுறை நாட்களில் கணக்குப்போட்டு பழகுவதாக வாக்களிக்கவேண்டும்" என்று அவள் என்னை கேட்டுக் கொண்டாள்.

நான் வாக்குக் கொடுத்தேன்; ஆனல் பள்ளிக்கூடம் முடிந்தவுடன் கணக்கைப்பற்றி அறவே மறந்துவிட்டேன். மறுபடியும் வகுப்புத் தொடங்காவிட்டால் அதைப்பற்றிய நினைவே வந்திருக்காது. கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வில்லையே என்ற வெட்கம் என்னைப் பிடுங்கித்தின்றது. ஆனல் இனிமேல் என்ன செய்யமுடியும்?

ஆககூடி, கோடை 'லீவ்' முடிந்தது. ஒரு நாள் காலை—செப்டம்பர் முதல் தேதி—நான் வழக்கத்துக்கு முன்னலேயே எழுந்தேன்; பள்ளிக்கூடப் புத்தகங்களை பையில் போட்டுக் கொண்டு புறப்பட்டேன். அன்று காலையில், புத்தகங்களில் சொல்கிற மாதிரி, ஒரே பரபரப்பாக விருந்தது. தெருக்களில், சின்னவர்களும் பெரியவர்களுமாக ஆண்களும் பெண்களும் பள்ளிக்கூடத்துக்கு விரைந்துகொண்டிருந்தார்கள். சிலர் தனித்தனியாக நடந்தனர், சிலர் ஜதை ஜதையாக நடந்தனர், சிலர் கூட்டமாக நடந்தனர். என்னைப்போல் சிலர் மெள்ள மெள்ளச் சென்றனர்; மற்றவர்கள், எங்கோ தீப்பிடித்திருப்பதை அணைக்கப்போவது மாதிரி ஓடினர்கள். சிறுவர் சிறுமிகள் தமது வகுப்பறைகளுக்கு மலர்களை எடுத்துச் சென்றனர். பெண்கள் கீச்சென்று சத்தமிட்டார்கள், பெண்கள் மாதிரி! ஆனல் சில பையன்களும் அம்மாதிரி கூவிவிட்டுச் சிரித்தார்கள். ஒவ்வொருவரும் ஆவேச வயப் பட்டவராகத் தோன்றினர்; நானும் அப்படித்தான் இருந்தேன். என் பாலர் சங்கத் தோழர்களையும் வகுப்புப் பையன்

கள் அனைவரையும், எங்களோடு சென்ற ஆண்டு வேலை செய்தவரும் எங்களுடைய பாலர் சங்கத் தலைவருமான வாலட்யாவைவும் சந்திப்பதற்கு ஆவலாக இருந்தேன். நீண்ட பிரயாணத்திற்குப் பின், தன் வீட்டுக்கும் நண்பர் குழாத்துக்கும் திரும்பும் யாத்திரிகன் மாதிரி உணர்ச்சி வயமானேன்.

எனினும் என்னுடைய மகிழ்ச்சியில் ஒரு குறை இருந்தது. மற்றவர்களோடு, பெட்யா ரிப்கின் பள்ளிக்கூடத்தில் இருக்கமாட்டான். பெட்யா என்னுடைய ஆத்ம நண்பன். வகுப்பின் இரட்டை மேஜைகளில் ஒன்றை நாங்கள் இருவரும் பகிர்ந்து கொண்டிருந்தோம். இப்பொழுது, அவன் அவனுடைய தாய் தந்தையரோடு இன்னொரு நகருக்குப் போய்விட்டான். அவனை மீண்டும் பார்க்க முடியுமா என்பதுகூடத் தெரியாது. இன்னொரு விஷயமும் எனக்குத் துக்கத்தைத் தந்தது; ஆல்கா நிகோலிவ்னா என் கணக்கைப்பற்றிக் கேட்டால் என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. இந்த பாழாய்ப்போன கணக்கு! பள்ளிக்குப் போய் நாளாகி விட்டதால் எனக்கு உண்டாகியிருந்த ஆவலை இந்தக் கணக்கைப்பற்றிய நினைவு கெடுத்துவிட்டது!

கோடை மாதிரியே கதிரவன் காய்ந்துகொண்டிருந்தான். ஆனால் ஒரு குளிர் காற்று கிளைகளிலிருந்த மஞ்சள் இலைகளைப் பறித்துச் சுழற்றியடித்து பூமியிலே விழச் செய்தது. அதன் பிறகும் சாலையோரப் பாதை வழியாக அந்த இலைகளைக் காற்று துரத்தியடித்த பொழுது, அவையும் அவசரப் பிரயாணம் செய்வது மாதிரி இருந்தது.

பள்ளிக்கூட வாசலில் ஒரு பெரிய சிவப்பு அட்டை இருப்பதை கொஞ்ச தூரத்திலிருந்தே பார்த்தேன். அதைச் சுற்றிலும் மலர்களால் அலங்கரிப்பட்டிருந்தது. பள்ளிக்குத் திரும்பி வருவோருக்கு நல்வரவு கூறும் மணிவாசகம் அந்த அட்டைமீது வெண்மையான கொட்டை எழுத்துக்களில் பொறிக்கப்பட்டிருந்தது.

போன தடவையும் அதற்கு முன் தடவையும் புத்தாண்டு தொடங்கும்பொழுது இதைப்போன்ற நல்வரவு கோஷம் எங்களை வரவேற்றது உண்டு. அது பள்ளிக்கூடத்தில் நான் முதன் முதலில் சேர்ந்த நாளை எனக்கு நினைவூட்டியது. அப்பொழுது நான் ஒரு குழந்தையாக இருந்தேன். அந்த முதலாண்டைப்பற்றியும் சீக்கிரமாக வளர்ந்து பாலர் சங்கத்தில் சேரவேண்டுமென்று அப்பொழுது துடித்ததையும் நான் நினைவூட்டிக்கொண்டேன். பாலர் சங்கத்தில் நாங்கள் சேர்ந்தவுடன் நடந்த முதல் அணிவகுப்பையும் நாங்கள் அப்பொழுது எடுத்துக்கொண்ட புனிதமான உறுதிமொழியையும் ஞாபகப் படுத்திக்கொண்டேன். எங்களுக்கு மூத்தவரான பாலர் சங்கத் தலைதர் ஆஸ்யா ஜார்ஜ்வ்ஞ எங்களுக்கு சிவப்பு நாடாக்களை கொடுத்ததும் நாங்கள் உண்மையிலேயே பாலர் சங்க 'உறுப்பினர்களானதும் என் மனத்திரையில் காட்சியளித்தன.

இவற்றையெல்லாம் நான் நினைவுகூர்ந்தபோது, விறுவிறுப்பாகவும் உத்வேகமாகவும் இருந்தது. ஏதாவது அதிசயம் நிகழ்ந்தால் எத்தகைய உணர்ச்சிகள் ஏற்படுமோ அப்படி இருந்தது. என் பாதங்கள் தாமே துரித நடை போடத் தொடங்கின. ஓட முடியாதபொழுது வேறு என்ன செய்யமுடியும்? ஏன் ஓட முடியாதென்று கேட்கிறீர்களா? முதல் வகுப்பு குழந்தை மாதிரி நான் ஓட முடியுமா? நான் நான்காவது வகுப்பு மாணவன் அல்லவா?

விளையாட்டு மைதானம் நிறைந்து நெரிசலாக இருந்தது. ஒவ்வொரு வகுப்பும் தனிதனிக் குழுவாக நின்றுகொண்டிருந்தது. பையன்கள் என்னைப் பார்த்தவுடன் தலைகால் தெரியாத கொண்டாட்டத்தில் கூவினர்கள்; என்னை சந்திக்க ஓடிவந்தார்கள். என் முதுகில் அறைந்தார்கள்; முதுகில் விழுந்த அடிகளால் பற்கள் தந்தியடித்தன. அவர்களுக்கு என்னைக் காண்பதில் இவ்வளவு ஆனந்தம் ஏற்படுமென்று நான் நினைக்கவேயில்லை.

“பெட்யா ரிப்கின் எங்கே?” என்று கிரிஷா வாஸிலேவ் கேட்டான்.

“ஆமாம்! பெட்யா எங்கே? நீங்கள் இருவரும் இணை பிரியா இரட்டையராக இருந்தீர்களே, அவனை என்ன செய்துவிட்டாய்?” என்று பல பையன்கள் கூச்ச லிட்டார்கள்.

“பெட்யா வேறு ஊருக்குப் போய்விட்டான்; அவன் இனி நம் பள்ளிக்கு வரமாட்டான்” என்று நான் பதில் அளித்தேன்.

அவர்கள் : “ஏன்?”

நான் : “அவனுடைய தாய் தந்தையரோடு வேறு நகருக்குப் போய்விட்டான்”

“எதற்காக?”

“நீ புளுகுகிறுய்.” இது அலிக்கின் குற்றச்சாட்டு,

நான் : “நான் பொய் சொல்லவில்லை”

பையன்கள் என்னைப் பார்த்து இளித்தார்கள். நான் விளையாடுவதாக அவர்கள் எண்ணிஞர்கள்.

“வான்யாகூட இங்கு இல்லை” என்றுன் லோன்யா.

“செர்யோஷாவும் இல்லை” என்று மற்றவர்கள் கூச்சல் போட்டார்கள்.

“ஒருவேளை அவர்களும் போய்விட்டார்கள் போலிருக்கிறது. நமக்குத் தெரியவில்லை” என்றுன் டோல்யா.

அப்பொழுது வாயிற் கதவு திறந்தது. வான்யாவைத் தவிர யார் வரவேண்டும்!

'ஜேஜே' என்று நாங்கள் ஊளையிட்டோம்; வான்யா விடம் ஓடினோம்; அவன்மீது பாய்ந்தோம்.

"என்னை விடுங்கள்! இதற்கு முன் நீங்கள் ஒரு பையனை யும் பார்த்ததில்லையா" என்று கூவிக்கொண்டே எங்களிட மிருந்து தப்ப முயன்றான் வான்யா.

நாங்கள் அனைவரும் அவன் முதுகில் அடிக்க விரும் பினோம்; நானும் கூடத்தான். ஆனால் தவறிப்போய் அவன் தலையில் அடித்துவிட்டேன். வான்யாவுக்குக் கோபம் வந்து விட்டது.

"வம்புச்சண்டைக்கு வருகிறீர்களா?" என்று கத்திக் கொண்டே, எங்கள் பிடியிலிருந்து நழுவ தன்னால் முடிந்த அளவுக்குப் பாடுபட்டான். நாங்களும் அவனை விடவில்லை. அந்த நேரத்தில் செர்யோஷா வந்திருக்காவிட்டால் என்ன நடந்திருக்குமோ, தெரியாது. செர்யோஷாவைக் கண்ட வுடன், வான்யாவை விட்டு விட்டு, அவன்மீது பாய்ந்தோம்.

"நல்லது! நாம் எல்லோரும் இங்கே இருக்கிறோம்" என்றான் ஸென்யா.

"பெட்யா நீங்கலாக" என்றான் ஐகார்.

"அவன் போய்விட்டால், அவனை எப்படி கணக்கில் சேர்க்கமுடியும்?"

"ஒருவேளை அது உண்மை இல்லையென்றால்? எதற்கும் நாம் ஆல்கா நிகோலிவ்னாவைக் கேட்போம்."

"நீங்கள் நம்பினாலும் நம்பாவிட்டாலும் எனக்குக் கவலை யில்லை" என்று நான் அலட்சியமாகக் கூறினேன்.

பிறகு நாங்கள் கோடை விடுமுறையில் செய்ததைப் பற்றி அளவளாவினோம். சிலர் பாலர் சங்க முகாம்களுக்குச் சென்றிருந்தனர். மற்றவர்கள் தத்தம் தாய் தந்தையரோடு

தங்கியிருந்தனர். நாங்கள் எல்லோருமே உயர்ந்துவிட்டோம்; வெயிலில் காய்ந்துமிருந்தோம். ஆனால் கிளெப் மாதிரி எங்களில் யாரும் கன்றிப்போகவில்லை. சொக்கப் பானையில் வறுக்கப்பட்டவன் மாதிரி இருந்தான் கிளெப். அவனுடைய புருவங்களோ இதற்கு நேர்மாருக வெண்மையாயிருந்தன; விசித்திரமாயிருந்தன.

''நீ எப்படி இவ்வளவு கறுத்துவிட்டாய்? கோடை முழுவதும் முகாமில் கழித்தயா?'' என்று டோல்யா கேட்டான்.

கிளெப்: ''இல்லை. முகாமில் சில வாரங்கள் இருந்தேன். அதன் பிறகு கிரிமியாவுக்ுச் சென்றிருந்தேன்.''

''கிரிமியா?''

''ஆம். அப்பாவின் பாக்டரி அவரை அங்குள்ள ஓய்வு விடுதிக்கு அனுப்பிற்று. அம்மாவையும் என்னையும் அப்பா கூட அழைத்துச் சென்ருர்.''

''அப்போ, நீ கிரிமியா போயிருந்தாய்?''

''ஆமாம்!''

''நீ கடலைப் பார்த்தாயா?''

''ஓ கடலையும் பார்த்தேன்; மற்றவற்றையும் பார்த்தேன்.''

பையன்கள் கிளெப்பை சூழ்ந்துகொண்டனர். ஏதோ அலாதியான பையன் மாதிரி அவனை உற்று நோக்கினுர்கள்.

''அப்படியானல் சமுத்திரத்தைப் பற்றியெல்லாம் சொல்லு'' என்ருன் செர்யோஷா.

''சமுத்திரமா? அது ரொம்பப் பெரியது'' என்று கிளெப் ஆரம்பித்தான். ''சமுத்திரம் எவ்வளவு பெரியது தெரியுமா? இந்தக் கரையிலிருந்து பார்த்தால் மறுகரையைக் காண

முடியாது. ஒரு பக்கத்தில் கடற்கரை; மறுபக்கத்தில் ஒன்று மில்லை, தண்ணீர் மட்டுமே இருக்கிறது. உலகத்தில் இவ்வளவு நீர் இருக்கிறதென்று நம்பமாட்டார்கள். அங்கே வெப்பம் அதிகமாயிருப்பதால் அது என் சருமத்தை உரித்து விட்டது!''

''நல்ல கதை சொல்லுகிருய்!''

''உண்மை. நான்கூட முதலில் கொஞ்சம் பயந்து விட்டேன். ஆனல் மேல் சருமத்துக்குக் கீழே இன்னெரு சருமம் இருக்கிறது. இப்பொழுது நான் அத்துடன்தான் நடமாடுகிறேன்.''

''உன் அற்பத் தோலைப்பற்றி அழாதே; கடலைப்பற்றிச் சொல்லு.''

''சரி. கேளுங்கள். கடல்......ஓ! அது பிரம்மாண்டமானது. கணக்கு வழக்கு இல்லாமல் தண்ணீர் இருக்கிறது. சமுத்திரம் நிறைய நீர் இருக்கிறது.''

கடலைப்பற்றி கிளெப் இதற்குமேல் என்ன சொல்லியிருப்பான் என்று எனக்குத் தெரியாது. ஆனல் அதற்குள் வாலட்யா எங்களிடம் வந்துவிட்டார். அவரைக் கண்டதும் எழுந்த சப்தத்தை நீங்கள் கேட்டிருக்கவேண்டும். நாங்கள் அவரைச் சூழ்ந்துகொண்டோம்; எல்லோரும் ஏக காலத்தில் பேசினேம். இந்த ஆண்டும் அவர் எங்களுடைய பாலர் சங்கத்தலைவராக இருப்பாரா அல்லது வேறு யாராவது வருவரா என்பதை அறிய விரும்பினேம். ''உங்களை வேறு ஒருவரிடமும் நான் ஒப்படைக்கமாட்டேன். நீங்களே இதை நன்கறிவீர்கள். போன ஆண்டு மாதிரி நாம் கூட்டாகப் பணியாற்றுவோம். ஆனல் ஒருவேளை உங்களுக்கு என்னிடம் அலுப்புத் தட்டிவிட்டதா? மாறுதல் தேவையா?'' என்று வாலட்யா சிரித்துக்கொண்டே வினவினர்.

''உங்களிடம் அலுப்பா? எப்பொழுதுமில்லை. உங்களிடம் எவ்வளவு தமாஷாக இருக்கிறேம்.''

தானும் தன் நண்பர்களும் நதியில் ரப்பர்படகில் சென்று வந்ததாக வாலட்யா எங்களிடம் கூறினர். எங்களைப் பிறகு பார்ப்பதாகக் கூறிவிட்டு அவர் தன் வகுப்புத் தோழர்களைச் சந்திக்கப் போய்விட்டார். எங்களைப்போலவே அவரும் தன் நண்பர்களுடன் உரையாட விரும்பினர்.

அவர் போவதைக் கண்டு நாங்கள் வருத்தப்பட்டோம். ஆனால் அதே சமயத்தில் ஆல்கா நிகோலிவ்ன வந்துவிட்டாள். அவளைப் பார்த்ததும் எங்களுக்குக் கரைகடந்த மகிழ்ச்சி.

"காலை வணக்கம், ஆல்கா நிகோலிவ்ன"† என்று நாங்கள் கூட்டமாக இசைத்தோம்.

"காலை வாழ்த்து. கோடை விடுமுறை இன்பமாகக் கழிந்ததா?" என்று அவள் புன்முறுவலுடன் கேட்டாள்.

"உல்லாசமாகப் பொழுதுபோக்கினேம், ஆல்கா நிகோலிவ்ன."

"நல்ல ஓய்வு கிடைத்ததா?"

"ஓ!"—மாணவர்களின் பதில்.

"ஓய்ந்திருந்து அலுத்துவிட்டதா?"

"ஆம்! அலுத்துவிட்டது, ஆல்கா நிகோலிவ்ன! மாறுதலுக்காவது சில பாடங்களைப் படிக்க விரும்புகிறேம்."

"நல்லது!"

---

† மாணவர்கள் ஆசிரியர்களை பெயர்சொல்லியழைப்பது சோவியத் யூனியனில் வழக்கமாக விருக்கிறது. அது மரியாதைக் குறைவானதென்று அந்நாட்டினர் கருதவில்லை. (மொ—ர்)

அலிக் : ''ஓய்வு எடுத்து ஓய்வு எடுத்து உடல் தேய்ந்து வற்றலாகிவிட்டது. இன்னும் ஒருநாள் ஓய்வு எடுத்தால், நான் ''க்ளோஸ்'' ஆகிவிடுவேன்.''

ஆல்கா : ''அலிக்கா? எப்போதும் போல விகடக்கார ஞகத்தான் இருக்கிருய்!''

அலிக் : ''எப்போதும் போலத்தான் இருக்கிறேன், ஆல்கா நிகோலிவ்ஞ; கொஞ்சம் உயரம் கூடியிருப்பதுதான் மாற்றம்.''

ஆல்கா : (சிரித்துக்கொண்டே) ''நன்ருக உயர்ந்திருக் கிருயே.''

யூரா : ''ஆனல் சுறுசுறுப்புத்தான் கூடவில்லை.''

இதைக்கேட்டு அனைவரும் ஆரவாரமாகச் சிரித்தோம்.

''ஆல்கா நிகோலிவ்ஞ, பெட்யா இனி பள்ளிக்கூடத் துக்கு வரமாட்டான்'' என்று டிமாபாபுஷ்கின் கூறினன்.

''எனக்குத் தெரியும். அவனுடைய தாய் தந்தையருடன் மாஸ்கோ சென்றுவிட்டான்'' என்ருள் ஆல்கா நிகோலிவ்ஞ.

''ஆல்கா நிகோலிவ்ஞ, கிளெப் கிரிமீயாவுக்குப் போய் கடலைப் பார்த்துவிட்டு வந்திருக்கிருன்.''

''ரொம்ப நல்லது. கட்டுரை வகுப்பில், கிளெப் கடலைப் பற்றி எழுதலாம்.''

''ஆல்கா நிகோலிவ்ஞ, அவனுடைய சருமம் முழுவதும் உரிந்துவிட்டது.''

''யாருக்குச் சருமம் உரிந்தது?''

''கிளெப்புக்கு.''

"சரி சரி! அதைப்பற்றியெல்லாம் பிறகு பேசுவோம். இப்பொழுது வரிசையாக நில்லுங்கள். வகுப்புக்கு முறையாகச் செல்வதற்குத் தயாராகுங்கள்."

நாங்கள் வரிசையாக நின்ருேம்; இதர வகுப்புகளும் அம்மாதிரி செய்தன. டைரக்டராகவுள்ள ஐகார் அலெக்சாண்ட்ரோவிச் வெளியே வந்து, எங்களுக்கு நல்வரவு கூறினுர்; நாங்கள் படிப்பில் நல்ல வெற்றி அடையவேண்டுமென்று வாழ்த்தினுர். பிறகு, ஒவ்வொரு வகுப்பாக ஆசிரியர்கள் மாணவர்களை அழைத்துச் சென்றனர். முதலில் சின்னஞ் சிறுவர்களான முதல் வகுப்பினர், பிறகு இரண்டாவது வகுப்புனர், பிறகு மூன்ருவது வகுப்பினர், பிறகு நாங்கள் சென்ருேம். மேல் வகுப்புக்களின் மாணவர்கள் எங்களுக்குப்பின் வந்தனர்.

ஆல்கா நிகோலிவ்ன எங்களை எங்களுடைய வகுப்பறைக்கு இட்டுச்சென்ருள். முன்வகுப்பில் உபயோகித்த மேஜைகளையே இந்த வகுப்பிலும் உபயோகிப்பதென்று தீர்மானித்தோம். ஆகவே என் மேஜைக்குப் பங்காளி இல்லாமல் நான் தனியாக இருந்தேன். சென்ற ஆண்டுக்கு இந்த ஆண்டு அறையின் பரப்பு குறைந்துவிட்டமாதிரித் தோன்றியது. ஆனல் அறையின் அளவு மாறவில்லையென்றும் நாங்கள் வளர்ந்திருப்பதால்தான் அறை சிறிதாகத் தோன்றுகிறதென்றும் ஆல்கா நிகோலிவ்ன விளக்கினுள்.

அவள் சொன்னது சரிதான். இடைவேளையில் மூன்ருவது வகுப்பு அறைகளில் ஒன்றைப் போய்ப்பார்த்தேன். அது எங்கள் அறைமாதிரியே இருந்தது.

நாங்கள் நான்காவது வகுப்புக்கு வந்துவிட்டதால், புதிய பாடங்கள் இருப்பதால், முன்னைவிட அதிகமாகப் பாடுபட்டுப் பயிலவேண்டுமென்று ஆல்கா நிகோலிவ்ன கூறினுள். சென்ற ஆண்டில் படித்த ருஷியமொழி, கணக்கு முதலிய பாடங்களைத் தவிர, இந்த ஆண்டு பூகோளம், சரித்திரம், இயற்கை ஆகியவற்றையும் படிக்கவேண்டும். பின்

தங்காமலிருக்கவேண்டுமானுல், ஆரம்பத்திலிருந்தே அக் கறையுடன் படிக்கவேண்டும். எந்த நேரத்தில் எந்தப் பாடத்தை கற்றுக்கொள்ளவேண்டுமென்ற அட்டவணையை நாங்கள் எல்லோரும் எழுதிக்கொண்டோம். ஒரு சட்டாம் பிள்ளையையும் உதவிச் சட்டாம்பிள்ளையையும் தேர்ந்தெடுக் குமாறு ஆல்கா நிகோலிவ்னு எங்களிடம் கூறினுள். சட்டாம் பிள்ளைப் பொறுப்புக்கு ''கிளெப்! கிளப்!'' என்று பையன்கள் ஆரவாரம் செய்தார்கள்.

''அமைதி! அமைதி! இப்படி இரைந்து பேசக்கூடாது. தேர்தலை எப்படி நடத்துவது என்று தெரியாதா? பேசவிரும் புகிறவர் யாராயிருந்தாலும் கையைத் தூக்கவேண்டும்'' என்று ஆல்கா கூறினுள்.

அதற்குப் பிறகு நாங்கள் எங்களுடைய தேர்தல்களை முறையாக நடத்திஞேம். கிளெப் சட்டாம்பிள்ளையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டான். அவனுக்கு உதவியாக ஷுரா தேர்ந்தெடுக்கப்பட்டான்.

இரண்டாவது பாடத்துக்கு மணி அடித்தது. சென்ற ஆண்டில் நாங்கள் பயின்றதை நினைவூட்டிக்கொள்வதுடன் பாடம் தொடங்கவேண்டுமென்று ஆல்கா நிகோலிவ்னு கூறினுள். அப்பொழுதுதான் விடுமுறைக் காலத்தில் எந்த அளவுக்கு மறந்திருக்கிறேம் என்பதை அவள் அறிந்து கொள்ளமுடியும். சென்ற ஆண்டுப் பாடத்தை அவள் சுருக்கமாக எடுத்துரைத்தாள்; நான் பெருக்கல் வாய்ப் பாட்டைக்கூட மறந்துவிட்டேன் என்பதை அப்பொழுதே புரிந்துகொண்டேன். வாய்ப்பாடு பூராவையும் மறந்துவிட வில்லை; கடைசிப் பகுதியைத்தான் மறந்துவிட்டேன். 7 ஐ 7 ஆல் பெருக்கினுல் 49 என்பதை நன்கு அறிந்திருந்தேன்; ஆனுல் அதற்குப்பின் எல்லாம் குழப்பமாயிருந்தது.

''நல்லது, மாலியோவ்! கோடை முழுவதும் நீ உன் புத்தகங்களைத் தரிசனம்கூடச் செய்யவில்லை போலிருக்

கிறது!'' என்று என்னைப்பார்த்து ஆல்கா நிகோலிவ்னு கூறினுள்.

என்பெயர் வித்யா மாலியேவ். என்னிடம் கோபமாக இருக்கும்பொழுது, ஆல்கா நிகோலிவ்னு என்னை இரண்டா வது பெயரால் (மாலியேவ்) கூப்பிடுவாள். மற்ற நேரங்களில் வித்யா என்று கூப்பிடுவாள்.

என்ன காரணத்தாலோ, ஆண்டுத் தொடக்கத்தில் படிப்பது கடினமாகவிருக்கிறது. யாரோ வேண்டுமென்றே செய்ததைப்போல, வகுப்புநேரம் நீண்டுகொண்டே போகிறது. பள்ளிக்கூடங்களுக்கு அதிகாரியாக நான் இருந்தால், எல்லாப் பாடங்களும் ஒன்ருகத் தொடங்குவதை அனுமதிக்க மாட்டேன். விளையாடுவதற்குப் பதிலாக படிக்கவேண்டு மென்ற எண்ணம் பையன்களிடம் படிப்படியாக வளர்வதற்கு நான் ஒரு சந்தர்ப்பம் கொடுப்பேன். உதாரணமாக, முதல் வாரத்தில் ஒருபாடம் போதுமானது; இரண்டாவது வாரத் தில் இரண்டு பாடங்கள் போதும்; மூன்ருவது வாரத்தில் மூன்று; இவ்வாருக அதிகரித்துக்கொண்டு போகவேண்டும். இல்லாவிட்டால், முதல் வாரத்தில் உடற்பயிற்சி மாதிரி சுலப பாடங்களைப் போதிக்கவேண்டும்; இரண்டாவது வாரத்தில் இசைப் பயிற்சியை சேர்த்துக்கொள்ளலாம்; மூன்ருவது வாரத்தில் ருஷியமொழியைச் சேர்த்துக்கொள்ள லாம். இவ்வாருகப்போய், கணக்குப்பாடத்தை கடைசியில் சேர்த்துக்கொள்ளவேண்டும். நான் சோம்பேறி என்ருே, எனக்குப் பள்ளிக்கூடமே பிடிக்கவில்லை யென்ருே எவரும் எண்ணிவிடவேண்டாம்; ஏனெனில் அது உண்மையல்ல. எனக்குப் பள்ளிக்கூடத்திடம் பற்றுதல் உண்டு; ஆனுல் கோடை முழுவதும் விளையாடிவிட்டு, விருப்பம்போல் ஆட் டம்போட்டுவிட்டு, இப்போது திடீரென்று அவற்றுக்கொல் லாம் முடிவுகட்டிப் பாடங்களை முனைந்து படிக்க வேண்டு மென்ருல் அது சிரமமாகத்தான் இருக்கிறது.

மூன்ருவது பாடம் பூகோளம். அதுவும் கணக்கைப் போல மிகவும் கடினமாக இருக்குமென்று நான் எண்ணி

யிருந்தேன். ஆனால் அது சுலபமாக இருந்தது. பூகோளம் என்பது பூமியின் விஞ்ஞானமாகும்; அது மலைகளையும் நதிகளையும் கடல்களையும் மகா சமுத்திரங்களையும்பற்றி எடுத்துரைக்கிறது. பூமி, தோசை மாதிரி தட்டையாக இருக்கிறதென்று நான் நினைத்திருந்தேன். ஆனால் அது தட்டையாக இல்லையென்றும் பந்து மாதிரி உருண்டையாக இருக்கிறதென்றும் ஆல்கா நிகோலிவ்னா கூறினாள். முன்பே இதைக் கேட்டிருந்தேன்; எனினும் பொய் என்று கருதினேன். ஆனால் அது கட்டுக்கதை இல்லைபோலிருக்கிறது. பூமி ஒரு மாபெரும் பந்து என்றும் அதன் சகல பக்கங்களிலும் ஜனங்கள் வசிக்கிறார்களென்றும் விஞ்ஞானம் நிருபித்துவிட்டது. இது எப்படிச் சாத்தியம்? மனிதர்கள், விலங்குகள் முதலிய தன்மீதுள்ள அனைத்தையும் பூமி தன்னிடம் ஈர்த்துக்கொள்கிறது. பூமிக்கு இந்தக் கவர்ச்சி இருப்பதால்தான், கீழ்ப் பக்கம் வசிப்பவர்கள் விழுந்துவிடுவதில்லை. இன்னொரு விஷயம்; கீழ்ப்பக்கம் வசிப்பவர்கள் "தலைகீழாக" நடக்கிறார்கள். ஆனால் அது அவர்களுக்கே தெரியாது; நேரகத்தான் நடப்பதாக அவர்கள் நினைக்கிறார்கள். தமது தலைகளை வளைத்து பாதங்கள் நோக்கிப்பார்த்தால், பூமிமீது நிற்பதை அவர்கள் பார்க்கிறார்கள். தலைகளை உயர்த்தி மேல்பக்கம் பார்த்தால் வானத்தைப்பார்க்க அவர்களால் முடியும். ஆகவேதான் தாம் நேராக நடப்பதாக எண்ணுகிறார்கள்.

பூகோளப்பாடத்தில் எங்களுக்கு விறுவிறுப்பு ஏற்பட்டது. அடுத்த பாடத்தில் ஒரு சுவையான சம்பவம் நடந்தது. மணி அடித்து, ஆல்கா நிகோலிவ்னா அறைக்குள் வந்தவுடன், கதவு திடீரென்று திறந்தது; இதுவரை எங்களில் எவரும் பார்த்திராத ஒரு புதுப்பையன் வந்தான். என்னசெய்வதென்று தெரியாமல் திகைப்பவனாகக் கதவுக்கு அருகில் சில வினாடிகள் நின்றான். பிறகு, ஆல்கா நிகோலிவ்னா பக்கம் தலையசைத்து, வணக்கம் தெரிவித்தான். பதிலுக்கு வாழ்த்துத் தெரிவித்த ஆல்கா, 'உனக்கு என்னவேண்டும்' என்றாள்.

"ஒன்றுமில்லை" என்றான் புதுப்பையன்.

"பின் எதற்காக உள்ளே வந்தாய்?"

"நான் படிக்க வந்திருக்கிறேன். இதுதானே நான்காவது?"

"ஆம்."

"நானும் அப்படித்தான் நினைத்தேன்."

"நீதான் புதுப்பையனா?"

"ஆம் நான்தான்."

ஆல்கா நிகோலிவ்னா தன்னிடமுள்ள மாணவர் பதிவேட்டைப் பார்த்தாள்.

"சிஷ்கின் என்பது உன் பெயரா?"

"ஆம். கோஸ்ட்யா சிஷ்கின்."

"நீ ஏன் தாமதித்து வருகிறாய், கோஸ்ட்யா சிஷ்கின்? காலையிலேயே பள்ளிக்கூடம் தொடங்குவதை அறியாயா?"

"நான் காலையிலேயே வந்துவிட்டேன். முதல் பாடத்துக்குத்தான் நேரங்கழித்து வந்தேன்."

"முதல் பாடமா? இது நான்காவது பாடமாயிற்றே கடந்த இரண்டு மணி நேரமும் நீ எங்குப் போயிருந்தாய்?"

"ஐந்தாவதுக்கு"

"அங்கு என்ன செய்துகொண்டிருந்தாய்?"

"நான் பள்ளிக்கூடம் வந்தபொழுது மணி அடித்த சத்தம் கேட்டது. கூட்டமாகப் பையன்கள் வகுப்புக்குள் நுழைவதைக் கண்டு அவர்களுடன் சென்றேன். அது ஐந்தாவது வகுப்பாக இருந்தது. இடைவேளையில் "நான் புதிய பையனா?" என்று அவர்கள் கேட்டார்கள். 'ஆம்'

என்று நான் கூறிய பிறகு அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை. ஆகவே, நான் தவருன வகுப்பில் உட்கார்ந்திருப்பதைப் பிறகுதான் தெரிந்துகொண்டேன்.''

''சரி, சரி போய் உட்கார். இனிமேல் வேறு வகுப்புக் களுக்குப் போகாதே'' என்று ஆல்கா நிகோலிவ்ன கூறினுள்.

சிஷ்கின் என் மேஜைக்கு வந்தான். எனக்குப் பக்கத் தில் காலியாகவிருந்த இடத்தில் அவன் அமர்ந்தான். பாடம் நடந்தபோதே பையன்கள் அவனுக்குச் சைகை காட்டிக்கொண்டே இருந்தார்கள். ஆனல் அவன் அவர் களைக் கவனிக்கவேயில்லை. ஒன்றுமே நடந்திராதது போல நடந்துகொண்டான். அவன் முகம் வினேதமாக இருந்தது. கீழ் உதடு முன்னுக்கு வந்திருந்தது; மூக்கு நுனி மேலே பார்த்துக்கொண்டிருந்தது. ஆகக்கூடி, அவன் துடுக்கான வனுகவும் அகம்பாவம் நிறைந்தவனுகவும் தோன்றினுன். பாடம் முடிந்தவுடன் பையன்கள் அவனைச் சூழ்ந்துகொண் டார்கள்.

''நீ எப்படி ஐந்தாவது வகுப்புக்குப் போனுய்? ஆசிரியர் வருகைப் பதிவேட்டுப் பெயர்களைப் படித்தா ரல்லவா?'' என்று ஸ்லாவா அவனைக் கேட்டான்.

''ஒரு வேளை முதல் பாடத்திலேயே அவள் வாசித்திருப் பாள். நான் இரண்டாவது பாடம் தொடங்குவதற்கு முன் அங்கு போகவில்லை.''

''இரண்டாவது பாடத்தில் அவள் எப்படி உன்னை கவனிக்காமல் இருந்தாள்?''

''எப்படியென்ருல் இரண்டாவது பாடத்துக்கு வேறு ஆசிரியர் வந்திருந்தார். 5-வது வகுப்பு 4-வது வகுப்பு மாதிரியல்ல. அவர்களுக்கு ஒவ்வொரு பாடத்துக்கும் தனித் தனி ஆசிரியர் உண்டு; ஆகவே ஆசிரியருக்கு எல்லாப்

பையன்களும் பழக்கமாகும் வரையில், குழப்பம் ஏற்பட முடியும்.''

''வேறு யாருக்கும் குழப்பம் ஏற்படவில்லை. ஒவ்வொரு மாணவனும் தன் வகுப்பைத் தெரிந்துகொண்டிருக்கிறான்'' என்றான் கிளெப்.

''அவன் புதுப்பையனாக இருந்தால்?'' என்றான் சிஷ்கின்.

''புதிய பையன் நேரத்தில் வரவேண்டும். தவிர, உனக்கு பேசத் தெரியாதா? ஏன் கேட்கவில்லை?''

''அதற்கு நேரமில்லை. பையன்கள் வகுப்புக்கு ஓடு வதைப் பார்த்து நானும் அவர்களுடன் ஓடினேன்.''

''அம்மாதிரி பத்தாவது வகுப்புக்குக்கூட போயிருக்க லாம்.''

சிஷ்கின் இளித்துக்கொண்டே சொன்னான் :

''எனக்கு அந்த அளவுக்கு மதி கெட்டுவிடவில்லை; பத்தாவது மாணவர்கள் என்னைவிட மிகவும் பெரிய பையன் கள்.''

நான் என்னுடைய புத்தகங்களை எடுத்துக்கொண்டு வீட்டுக்குக் கிளம்பினேன், வெளியே தாழ்வாரத்தில், நான் ஆல்கா நிகோலிவ்னாவை சந்தித்தேன்.

''வித்யா, இந்த ஆண்டும் பாடுபட்டுப் படிக்கப் போகிறாயா, இல்லையா?'' என்று அவள் என்னைக்கேட்டாள். ''நிச்சயமாக, நீ முயற்சி எடுத்துப் படிக்கவேண்டும். கணி தத்தில் தனிக் கவனம் செலுத்தவேண்டும். சென்ற ஆண்டி லும் நீ கணிதத்தில் மிகவும் பலவீனமாக விருந்தாய். பெருக் கல் வாய்பாடுகளைக்கூடத் தெரிந்துகொள்ளவில்லையென்றால், உனக்கே வெட்கமாக இல்லையா? இரண்டாவது வகுப்புச் சிறுவர்களுக்குக்கூட பெருக்கல் வாய்பாடு தெரியுமே''

"கடைசிப் பகுதியில்தான் கொஞ்சம் மறந்துவிட்டேன்"

"ஆரம்பத்திலிருந்து முடிவுவரை பெருக்கல் வாய்பாடுகளை நன்ருக மனப்பாடம் செய்திருக்கவேண்டும். இல்லாவிட்டால், உன்ஞல் நான்காவது வகுப்பில் பெயரெடுக்க முடியாது. நாளைக்குள் அவற்றைக் கற்றுக்கொண்டுவிடு!"

# 2. விளையாட்டும் வீட்டுக்கணக்கும்

எல்லாப் பெண்களுமே தாங்கள் சமர்த்தர்களென்று எண்ணிக்கொள்கிறார்கள். இவர்கள் ஏன் இப்படிப் 'பிகு' செய்துகொள்ளவேண்டுமென்பதுதான் எனக்குப் புரியவில்லை. என் தங்கை லிக்காவையே பாருங்கள். அவள் மூன்றாவதுக்கு வந்துவிட்டதால் இனி நான் சொல்வதைக் கேட்கத் தேவையில்லையென்று நினைக்கிறாள். யாராவது பார்த்தால், நான் அவளுக்கு அண்ணன் இல்லையென்றும் எனக்கு அதிகாரம் கிடையாதென்றும் நினைக்கக் கூடும். பள்ளிக்கூடத்திலிருந்து வந்தவுடனே பாடங்களைப் படிக்கக் கூடாதென்று அவளுக்கு எத்தனை தடவைகள் எடுத்துச் சொல்லியிருக்கிறேன்! அப்படிச் செய்வது நல்லதல்ல; எல்லோருக்கும் தெரிந்த விஷயம் இது. பள்ளிக்கூடத்தில் படிப்பதால் மூளை களைப்படைந்துவிடுகிறது. ஆகவே மூளைக்கு ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் ஓய்வு கொடுத்த பிறகுதான், வீட்டுப் பாடம் படிக்கவேண்டும். ஆனால் லிக்காவுடன் பேசுவது சுவரோடு பேசுவது மாதிரி!

இன்றும் நான் வந்தவுடன் கண்ட காட்சி என்ன? மேஜை முழுவதும் புத்தகங்களைப் பரப்பிக்கொண்டு, லிக்கா தன் பாடங்களைப் படித்துக்கொண்டிருந்தாள்.

"தங்கச்சி! இதோபார்! என்ன செய்கிறாய்? பள்ளிக்கூடப் படிப்புக்குப்பின், மூளைக்கு ஓய்வு தரவேண்டுமென்று தெரியாதா?"

"தெரியும். ஆனால் முடியவில்லையே, வித்யா. முதலில் வீட்டு வேலையை முடித்துவிடவேண்டுமென்று தோன்றுகிறது. அதன் பிறகு இஷ்டப்படி பொழுதுபோக்கலாம், பார்!"

"அறிவில்லாதவளே! மீண்டும் வாக்குவாதமா? பெரியவர்கள் சொல்வதை ஏன் கேட்கக் கூடாது? சரிசரி! நீ மட்டியாக வளர்ந்தால் அதற்கு நான் பொறுப்பு இல்லை."

"ஆனால் நான் என்ன செய்யமுடியும்? வீட்டு வேலையை முடிக்கும்வரை என்னால் ஓய்வெடுக்க முடியவில்லை"

"முடியாது என்று ஒன்றும் கிடையாது. பாடங்களைப் பிறகு படித்துக்கொள்ளலாம்."

"முதலில் பாடங்களைப் படித்துவிட்டு பிறகு ஓய்ந்திருப்பதுதான் எனக்குப் பிடிக்கிறது. மேலும் என் வீட்டு வேலை சுலபம். நான்காவது படிக்கும் உன்னுடையது மாதிரியல்ல."

"அது எப்படியிருக்கும்? நான்காவதுக்கு வந்தபின் பார்! எவ்வளவு கடினமாயிருக்குமென்பதைத் தெரிந்து கொள்வாய்."

"உனக்கு இன்று என்ன வீட்டு வேலை?" என்று அவள் கேட்டுவிட்டாள்.

"ஓ! உனக்கு அதெல்லாம் புரியாது" என்றேன் நான்.

நான் பெருக்கல் வாய்ப்பாடுகளை மனப்பாடம் செய்ய வேண்டுமென்று அவளிடம் கூற முடியுமா?

புதிய வகுப்பில் நல்ல முறையில் பயிற்சியைத் தொடங்க வேண்டுமென்றும் அதற்காக ஆரம்பத்திலிருந்தே அக்கறையுடன் படிக்கவேண்டுமென்றும் உறுதி செய்துகொண்டேன். ஆகவே, பெருக்கல் வாய்ப்பாடுகளைப் படிக்க உடனே உட்கார்ந்துவிட்டேன். லிக்கா இருக்கும்பொழுது உரக்கப் படிக்கமுடியாது. ஆனால் அவள் விரைவாகத் தன் வேலையை முடித்துவிட்டு, நண்பர்களோடு விளையாடுவதற்குப் போய் விட்டாள். அவள் போனபிறகு, வாய்ப்பாடுகளை இரைந்து படித்து மனப்பாடம் செய்தேன். நள்ளிரவிலே நல்ல உறக்கத்திலிருந்து என்னை எழுப்பி, ஏழு மடங்கு ஏழு என்ன

வென்று கேட்டால்கூடப் பிழையில்லாமல் பதில் கூறும் அளவுக்கு நான் கற்றுக்கொண்டுவிட்டேன்.

அடுத்த தினமே ஆல்கா நிகோலிவ்னு என்னை வகுப்பில் வாய்ப்பாடுகளைச் சொல்லச் செய்தாள்.

“நீ முயற்சி செய்தால் நன்ருய் சாதிப்பதைப் பார்த்தாயா? உனக்கு நல்ல திறமை இருக்கிறது; நீ அதைப் பயன் படுத்தவேண்டும்” என்று அவள் கூறினுள்.

ஆல்கா நிகோலிவ்னு பெருக்கல் வாய்ப்பாடுகளைக் கேட்டதோடு நின்றிருந்தால் எல்லாம் நன்ருக இருந்திருக்கும். ஆனுல் நான் கரும்பலகைக்குச் சென்று ஒரு கணக்குப் போடவேண்டுமென்று கூறிவிட்டாள். அது தான் கேடாகமுடிந்தது.

நான் கரும்பலகையிடம் சென்றேன். ஒரு வீட்டைக் கட்டும் சில மரத் தச்சர்களைப்பற்றி ஆல்கா நிகோலிவ்னு கணக்குக் கொடுத்தாள். அதை அப்படியே கரும்பலகையில் எழுதிவிட்டு, எப்படிப்போடுவதென்று யோசிக்கத் தொடங்கினேன். உண்மையில் நான் ஒரு யோசனையும் செய்யவில்லை. அது ஒரு கடினமான கணக்கு. அதை நான் போட முடியாதென்று எனக்குத் தெரியும். ஆனுல் சிரமப்பட்டுச் சிந்திப்பது மாதிரி, நெற்றியில் சுருக்கங்கள் விழச் செய்தேன். அதே சமயத்தில், உதவி வேண்டுமென்று என்னுடைய மாணவத் தோழர்களுக்குச் சைகை மூலம் அறிவித்தேன். எனினும் கரும்பலகையருகில் நிற்பவனுக்கு சொல்லிக் கொடுப்பது எளிதல்ல; அதனுல் பையன்கள் மௌனமாயிருந்தார்கள்.

“கணக்கை எப்படிப்போடுவாய்? முதலில் என்ன செய்வாய்?” என்று கேட்டாள் ஆல்கா நிகோலிவ்னு.

நான் புருவத்தை வளைத்துக்கொண்டேன்; பையன்கள் பக்கம் திரும்பிச் சைகை காட்டினேன். நான் நெருக்கடி

யான நிலையில் இருப்பதை அவர்கள் கண்டுகொண்டார்கள்; கணக்கின் விடையை மெல்லிய குரலில் சொன்னார்கள்.

“பையன்களே! அமைதியாயிருங்கள். அவனுக்கு சொல்லிக்கொடுக்க முயலாதீர்கள். தேவையானால் நானே அவனுக்கு உதவி செய்வேன்” என்று ஆல்கா நிகோலிவ்னா கூறினாள்.

அவள் கணக்கை விளக்கமாக எடுத்துக்கூறினாள். முதல் பகுதியை எப்படிப்போடுவதென்று சொல்லிக்கொடுத்தாள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை; எனினும் சொல்லிக்கொடுத்ததைப் பிசகில்லாமல் எழுதினேன்.

“அது சரி. மேற்கொண்டு என்னசெய்வாய்?” என்று அவள் என்னைக்கேட்டாள். மீண்டும் சிந்திப்பதுபோலப் பாசாங்குசெய்தேன்; பையன்களுக்கு ஜாடை காட்டினேன். அவர்களும் முணு முணுத்தனர்.

“அமைதி! நீங்கள் சொல்லுவதையெல்லாம் என்னால் கேட்கமுடியும். தேவையின்றித் தலையிடுகிறீர்கள்” என்று ஆல்கா நிகோலிவ்னா கூறினாள்; மேலும் கணக்கைப்போடுவதற்கு விளக்கம் தந்தாள்.

அவளுடைய உதவியாலும் வகுப்பு மாணவர்கள் குசுகுசுவென்று சொல்லிக்கொடுத்ததாலும் நான் கணக்கைப் போட்டு முடித்தேன்.

“இனிமேல் இத்தகைய கணக்குகளைப்போடுவது எப்படி என்று புரிந்துகொண்டுவிட்டாயா?” என்று என்னைக் கேட்டாள்.

புரிந்துகொண்டுவிட்டதாகப் பதில் கூறினேன். உண்மையில் எனக்கு ஒன்றுமே புரியவில்லை; ஆனால் அதை ஒப்புக்கொள்ள வெட்கமாயிருந்தது. மேலும், புரியவில்லை என்று சொன்னால், ஆல்கா நிகோலிவ்னா மோசமான ‘மார்க்’ கொடுத்துவிடுவாளென்று பயந்தேன். நான் என் இடத்

துக்குச் சென்றேன்; கரும்பலகையில்போட்ட கணக்கைக் குறிப்பேட்டில் எழுதிக்கொண்டேன்; வீட்டுக்குப்போன பிறகு அதை முறையாகப்போட்டுப் பார்ப்பதென்று தீர் மானித்தேன்.

பாடம் முடிந்தபின், பையன்களைப் பார்த்துக் கூறினேன் :— "ஆல்கா நிகோலிவ்னு காதுகளில் விழக் கூடிய முறையில் சொல்லிக் கொடுப்பதின் அர்த்தம் என்ன? எப்படி சொல்லிக்கொடுப்பதென்று உங்களுக்குத் தெரி யாதா? உரக்க ஊளையிடுகிறீர்களே! அடுத்த அறையிலுள்ள வருக்குக் கேட்காததுதான் வியப்பு!"

"கரும்பலகைக்குப் பக்கத்தில் நீ நின்றுகொண்டிருக்கும் பொழுது உனக்கு எப்படிசொல்லிக்கொடுப்பது? உன் மேஜை யருகில் நின்றுகொண்டிருந்தாயா?" என்று வாஸ்யா சமா தானம் கூறினுன்.

"இது வீண் சாக்குப்போக்கு. எவருக்கும் தெரியாமல் சொல்லிக்கொடுக்கவேண்டும்."

"அப்படித்தான் நான் செய்தேன். ஆனுல் நான் கூறியதை நீ கேட்கவில்லை."

"முணங்கியிருப்பாய்" என்றேன் நான்.

"உன்னைத் திருப்தி செய்யமுடியாது. நீ விரும்புவது என்னவென்று புரியவில்லை."

"சொல்லிக்கொடுப்பதே சரியல்ல. மற்றவர்கள் பதில் சொல்வதற்குக் காத்திராமல் நீயே யோசித்து விடையைக் கண்டுபிடிக்கவேண்டும்" என்ருன் வாஸ்யா.

"இந்த அர்த்தமில்லாத கணக்குகளை என்னுல் போட முடியாதபொழுது, என் மூளைக்கு ஏன் தொல்லை கொடுக்க வேண்டும்?"

"உன் மூளையை உபயோகிக்க விரும்பவில்லை; அதனுல் தான் இந்தக் கணக்குகளை உன்னுல் போடமுடியவில்லை.

நீயே போடுவதற்கு பதிலாக, மற்றவர்கள் போட்டுத்தர வேண்டுமென்று எண்ணுகிருய். இனிமேல் நான் எவருக்கும் திருட்டுத்தனமாக சொல்லிக்கொடுக்கமாட்டேன். இனியாவது, இந்த வகுப்பில் ஓர் ஒழுங்குமுறை ஏற்படவேண்டும்" என்ருன் கிளெப்.

"நீ சொல்லிக்கொடுக்காவிட்டால் மற்றவர்கள் சொல்லிக் கொடுப்பார்கள்" என்று பதில் அளித்தேன்.

"மறைமுகமாகச் சொல்லிக்கொடுக்கும் தொழிலுக்கே நான் முடிவுகட்டப்போகிறேன்" என்ருன் கிளெப்.

"அப்படியா? நீ சாமர்த்தியசாலி! இல்லையா?"

"அதுவல்ல விவகாரம். நான் சட்டாம்பிள்ளை; மறைமுகமுகமாகச் சொல்லிக்கொடுப்பதை அனுமதிக்க மாட்டேன்."

"நீ சட்டாம்பிள்ளையாக இருந்தாலும், துடுக்காக பேசத் தேவையில்லை; கர்வத்துக்கு இரையாகவேண்டாம். எப் பொழுதுமே சட்டாம்பிள்ளையாக இருக்கமாட்டாய். அடுத்த தடவை, பையன்கள் என்னையே சட்டாம்பிள்ளையாகத் தேர்ந் தெடுக்கலாம்!"

"அவர்கள் செய்யலாம்; ஆனல் இதுவரை செய்ய வில்லை; அதற்குள் ஏன் அந்தப் பேச்சு?"

மற்றவர்களும் வந்து கூட்டம் கூடிவிட்டார்கள். வகுப் பில் சொல்லிக்கொடுப்பதைப்பற்றி விவாதம் நடந்தது. ஆனல் ஒரு முடிவும் ஏற்படவில்லை; ஏனென்ருல் பள்ளிக் கூடத்தின் பின்புற மைதானத்தில் பெரியபையன்கள் கால் பந்தாட்டத்துக்கு ஏற்பாடு செய்திருப்பதாக டிமா ஓடிவந்து கூறியவுடன், கவனம் அதன்மீது திரும்பிவிட்டது. பிற் பகலில் கூடிவிளையாடுவதென்று முடிவுசெய்தோம். பின் னர் நாங்கள் மைதானத்தில் சேர்ந்து இருகட்சிகளை அமைத் தோம். எங்களுடைய குழுவில் முதலில் கொஞ்சம் தொல்லை

ஏற்பட்டது; ஒருவரும் "கோல்கீப்பராக" இருப்பதற்கு இசையவில்லை. ஒவ்வொருவரும் ஓடியாடி 'ஸ்கோர்' எடுக்க ஆவலாயிருந்தனர். நான்தான் கோல்கீப்பராக இருக்க வேண்டுமென்றார்கள். ஆனல் நான் "செண்டர்–பார்வார்ட்" (Centre-forward) ஆக விளையாட விரும்பினேன். இல்லா விட்டால், குறைந்தபட்சம், "ஹாஃப்–பாக்" (Half-back) காக விளையாட விரும்பினேன். நல்ல வேளையாக என் அதிர்ஷ்டம், புதிய பையனுன சிஷ்கின் கோல்கீப்பராக இருப்பதற்கு இணங்கினுன். சட்டையைக் கீழே எறிந்து விட்டு, கோல்கோட்டுக்குச் சென்று நின்ருன்; ஆட்டம் தொடங்கியது.

முதலில், ஆட்டம் எதிர்கட்சிக்கு அனுகூலமாகவிருந் தது. அவர்கள் எங்களுடைய கோலைக் குறிவைத்து தாக்கிக் கொண்டே இருந்தார்கள். எங்களுடைய கோஷ்டியினர் பாய்ந்து பாய்ந்து ஓடினுர்கள்; ஆனல் ஒருவருக்கொருவர் இடையூறு செய்வதாக இருந்தது எங்களுடைய ஆட்டம். எங்களுடைய அதிர்ஷ்டம், சிஷ்கின் அருமையான கோல் கீப்பராக இருந்தான். அவன் பூனை அல்லது சிவிங்கி மாதிரிப் பாய்ந்து ஆடினுன்; ஒரு பந்தையும் கோல் வழியே விடவில்லை. இறுதியாக, எங்கள் கோஷ்டியினர் சிதறி நின்று விளையாடினேம்; எதிர்க்கட்சியின் கோலருகில் பந்தைப் பையப் பையக் கொண்டுசென்ரேம். கொஞ்சநேரம் இரு கட்சிகளும் முனைந்து ஆடிய ரகளைக்குப் பிறகு, நாங்கள் கோல் போட்டுவிட்டோம். அது எங்களுக்கு ஊக்கத்தை அளித்தது; ஆகவே தொடர்ந்து தாக்கினேம். சீக்கிரத்தில் இன்னெரு 'கோல்' போட்டுவிட்டோம்; ஆக இரண்டு வெற்றிகளை அடைந்துவிட்டோம்; எதிர்க்கட்சி ஒரு வெற் றியைக்கூட அடையவில்லை. எனினும், இதற்குப் பிறகு, ஆட்டம் எங்கள் பக்கத்திலேயே நடந்தது; நிலைமை எங் களுக்குப் பாதகமாகவிருந்தது. நாங்கள் முன்னேற முடிய வில்லை. ஆகவே சிஷ்கின் பந்தை எடுத்து, எதிர்ப்பக்கக் கோலுக்கே போகும்படியாக ஓங்கி அடித்துக்கொண்டே

ஓடினுன். சிஷ்கின் பந்தை எதிர்ப்பக்க கோலில் அடிக்கவிருக்கும் சமயத்தில், ஜகார் பந்தை தன்வயப்படுத்திக்கொண்டு ஸ்லாவாவிடம் அடித்தான். ஸ்லாவா வான்யாவிடம் அடித்தான். நடந்ததென்னவென்பதை நாங்கள் புரிந்துகொள்வதற்குள்ளாக பந்து எங்கள் பக்கம் வந்துவிட்டது. எங்கள் கோலில் ஒருவருமில்லை; யாரோ ஒருவன் பந்தை எங்கள் கோல் வழியே அடித்துவிட்டான். ஆகவே 'ஸ்கோர்' எங்களுக்கு 2ம் அவர்களுக்கு ஒன்றுமாக இருந்தது. சிஷ்கின் கோலில் இல்லாத சமயம் எதிர்க்கட்சி இன்னெரு தடைவையும் ஸ்கோர் எடுத்துவிட்டது. கோலை விட்டுப் போனதற்காக நாங்கள் சிஷ்கினைக் கடிந்துகொண்டோம். இனி ஆட்டம் முடியும் வரையில் கோலில் நிற்பதாக அவன் வாக்களித்தான்; ஆனால் அம்மாதிரி செய்யவில்லை. ஆட்ட மைதானம் முழுவதும் ஓடிக்கொண்டேயிருந்தான். அவன் கோலில் இல்லாதபொழுது கோலில் பந்தடிப்பதற்கு எதிர்க்கட்சிக்கு நிறைய சந்தர்ப்பம் கிடைத்தன. ரொம்ப நேரம் ஆட்டம் நடந்தது: எங்கள் ஸ்கோர் 16; அவர்கள் ஸ்கோர் 21. மேலும் விளையாடவே விரும்பினேம், ஆனல் பந்தே கண்ணுக்குத் தெரியவில்லை. ஆகவே வீட்டுக்குப் போக வேண்டியதாயிற்று. வீட்டுக்குப் போகும் வழியில், ஆட்டத்தின் தோல்விக்கு காரணமாயிருந்த சிஷ்கினை நாங்கள் குறை கூறினேம்.

''சிஷ்கின்! நீ அருமையான கோல்கீப்பராக இருந்தாய்; ஆனல் கோலண்டையே நிற்கவேண்டும். நின்ருய் எனில் நமது குழுவை எவராலும் தோற்கடிக்க முடியாது'' என்ருன் யுரா.

''ஒரே நிலையாக நின்றுகொண்டிருக்க என்னல் முடியாது. அதனுல்தான் எனக்குக் கூடைப்பந்து பிடிக்கிறது. கூடைப்பந்து ஆட்டத்தில் கோல்கீப்பர்களே தேவையில்லை; எல்லாரும் ஓடிவிளையாடலாம். கூடைப்பந்து ஆட்டக் குழு சேர்க்கவேண்டும்'' என்று பதில் கூறினுன் சிஷ்கின்.

மேலும், கூடைப்பந்து விளையாடுவது எப்படி என்பதை சிஷ்கின் விளக்கத் தொடங்கினான். அதுவும் கால்பந்து மாதிரி நன்றாயிருக்கும் என்று அவன் வருணனையிலிருந்து ஊகிக்கமுடிந்தது.

"அதைப்பற்றி நாம் நமது உடற்பயிற்சி ஆசிரியரிடம் பேசவேண்டும். ஒருவேளை கூடைப்பந்து ஆட்டத்துக்கு அவர் வசதி செய்யலாம்" என்று யுரா பதில் அளித்தான்.

நாங்கள் தெரு முனையை அடைந்தவுடன் சிஷ்கின் திடீரென்று கத்தினான்; "கால்பந்து மைதானத்திலேயே என் சட்டையை விட்டுவிட்டேன்" என்று கத்திவிட்டு ஓடினான்.

வேடிக்கையான பையன்! எப்பொழுதுமே இப்படித்தான் காரியம் செய்கிறான்!

நான் வீட்டை அடைந்தபொழுது, இரவு மணி எட்டாகிவிட்டது. இவ்வளவு நேரம் வெளியே தங்கியதற்காக அம்மா என்னைக் கோபித்துக்கொண்டாள். நான் உண்மையிலேயே நேரஞ் சென்று வரவில்லையென்றும் கோடை காலத்தைவிட இப்பொழுது சூரியன் விரைவாக மறைகிறதென்றும் கூறினேன். கோடைகாலமாயிருந்தால், நேரஞ்சென்றுவிட்டதாக எவரும் நினைக்கமாட்டார்கள்; ஏனெனில் கோடையில் பகல் பொழுது அதிகம்; இந்த நேரத்திலும் வெளிச்சம் இருக்கும்; ஆகவே நேரமாகவில்லையென்றுதான் எல்லோரும் நினைப்பார்கள்.

எப்போதுமே நான் ஏதாவது சாக்குப்போக்குச் சொல்வதாக அம்மா பதில் அளித்தாள். உடனே உட்கார்ந்து பாடங்களைப் படிக்கவேண்டுமென்றாள். எப்படியிருந்தாலும் அதைத்தான் செய்யப்போகிறேன். ஆனால் உடனடியாக உட்கார முடியுமா? ஆட்டக்களைப்புத்தீர ஓய்வு தேவையன்றோ?

லிக்கா என்னைப் பார்த்துக்கேட்டாள்: "நீ ஏன் உன் பாடங்களைப் பயிலவில்லை? இதற்குள் உன் மூளைக்கு நல்ல ஓய்வு கிடைத்திருக்கவேண்டுமே!"

"என் மூளைக்கு ஓய்வு கிடைத்ததா இல்லையா என்று எனக்குத் தெரியும்!" என்று பதில் கொடுத்தேன்!

இதற்குப்பின் நான் உடனே உட்கார்ந்து படிக்கலாமா! தன் தூண்டுதலால்தான் நான் படிப்பதாக லிக்கா சொல்ல மாட்டாளா? ஆகவே மேலும் கொஞ்சநேரம் ஓய்வு எடுப்ப தென்று தீர்மானித்து, சிஷ்கினைப்பற்றிப் பேசத் தொடங் கினேன். அவன் ஒரு வேடிக்கையான பையனாக இருப் பதையும் கால்பந்து மைதானத்தில் சட்டையை மறந்து விட்டு வந்ததையும் சொன்னேன். அப்பொழுது அப்பா தன் வேலையை முடித்துவிட்டு வீட்டுக்கு வந்தார். கூயிபிஷெவ் (Kuipyshev) நீர்மின்னுக்க நிலையத்துக்கு எந்திரங்கள் செய்ய வேண்டுமென்று தன் பாக்டரிக்கு 'ஆர்டர்' வந்திருப்பதாக அவர் கூறினார். அப்பா சொல்வதைக் கேட்பதற்கு ஆவலா யிருந்ததால், படிப்பை ஒத்திவைத்தேன்.

அப்பா ஓர் எஃகுத் தொழிற்சாலையில் வேலை செய்கிறார். மாதிரி வடிவம் செய்யும் வேலை. அது என்ன வேலை என்று உங்களுக்குத் தெரியாதிருக்கலாம். சொல்லிவிடுகிறேன். எந்திரத்தைச் செய்வதற்குமுன் அதன் மாதிரி வடிவம் தேவை. வார்ப்பிரும்புப் பெட்டியின் கீழ்ப் பகுதியில் மணல் போட்டுக் கெட்டித்தபின், மாதிரி வடிவத்தைச் சரியான நிலையில் அம் மணல்மீது வைத்து, மீண்டும் மணல்போட்டுக் கெட்டிப்பார். மாதிரி வடிவத்தைச் சுற்றிலும் நன்றாகக் கெட்டித்துப் போதிய நேரம் கழிந்த பின்னர், மாதிரி வடி வத்தை மெல்ல நீக்குவர்: பிறகு இதில் உருகிய உலோ கத்தை ஊற்றுவர். அது, மாதிரி வடிவம் முன்பு அடைத் துக்கொண்டிருந்த இடம் முழுவதையும் ஓடிப் பரவி நிரப்பும். குளிர்ந்த பின்னர், மாதிரி வடிவத்தை முற்றிலும் ஒத்ததாக, உலோக வார்ப்பு கிடைத்துவிடுகிறது. புதிய எந்திரம்

அல்லது எந்திர பாகம் செய்வதற்குத் தொழிற்சாலை 'ஆர்டர்' பெற்றால், பொறி இயல்வல்லார் அதற்கான உருவரைப் படம் சித்தம் செய்வார்கள். அதை நன்கு புரிந்து, எத் தகைய வடிவமுள்ள பொருளை வார்க்கவேண்டுமோ அத் தகைய வடிவமுள்ள பொருளைச் சரி நுட்பமாக மரத்தில் செய்வர். இதுவே மாதிரி வடிவம். இது சாதாரணமான வேலையல்ல. நீண்ட பயிற்சி உடைய திறமையான தொழி லாளர்களே இதைச் செய்யமுடியும். சரியாகச் செய்யாவிட் டால், அந்த மாதிரி வடிவத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார் கள். என் தந்தை மாதிரி வடிவம் செய்வதில் சமர்த்தர். மாதிரி வடிவத்திலிருந்து நீக்கவேண்டிய சிறு பகுதிகளை அறுத்துவிடுவதற்காக அவரே ஒரு மின்சார ரம்பத்தைக் கூடப் புதிதாக அமைத்திருக்கிறார். மேலும் மரத்தில் செய்த மாதிரி வடிவங்களைத் துலக்கி மெருகிடுவதற்கான பொறியை அமைப்பதில் ஈடுபட்டிருக்கிறார் அவர். இப்போதெல்லாம் அப்பணியைக் கையாலேயே செய்கிறார்கள். பொறி அமைத்துவிட்டால், மாதிரி வடிவ அமைப்பாளர் யாவரும் அதனைப் பயன்படுத்துவர். நாள்தோறும், தொழிற்சாலை வேலைக்குப்பின் வீடுவந்து ஓய்வு எடுத்துகொண்ட பிறகு, அந்தப் பொறி அமைப்புப் பணியே அப்பாவின் கவனத்தை ஈர்க்கிறது. அதற்காக மேலும் பல நூல்களைப் பயில்கிறார். ஆம், துலக்கி மெருகிடும் பொறியைப் புதிதாக உருவாக்கும் பணி எளிதல்ல.

அப்பா இரவு உணவை உண்டபின், தன் படங்களை வரையத் தொடங்கிவிட்டார். நான் என் பாடங்களைப் படிப் பதற்கு உட்கார்ந்தேன். முதலில் நான் பூகோளம் படித் தேன்; ஏனெனில் ஏனைய பாடங்களைவிட அது எளிது. அதற் குப் பிறகு நான் ருஷியப் பாடத்தை பயின்றேன். நான் ருஷிய மொழி அப்பியாசங்களைச் செய்துவிட்டு, பகுபத இலக் கணம் எழுதினேன். பகுபதங்களின் உறுப்புக்களான பகுதி, விகுதி, இடை நிலை முதலியவற்றை எழுதினேன். அதற்குப் பிறகு நான் ஆங்கிலத்தைப் படித்தேன்; பிறகுதான் கணக்

கின்மீது கவனத்தைச் செலுத்தினேன். சிரமமான கணக்கு களுல் ஒன்றை ஆல்கா நிகோலிவ்ஞ கொடுத்திருந்தாள். அதை எப்படிப்போடுவதென்று எனக்குச் சிறிதும் புரிய வில்லே. ஒருமணி நேரம் என் புத்தகத்தை வெறித்துப் பார்த்துக்கொண்டேயிருந்தேன்; என் மூளையைச் சித்திர வதை செய்துகொண்டதுதான் மிச்சம்; வெளிச்சம் கிடைக் கவேயில்லே. போதும் போதாததற்கு, என்னையுமறியாமல் உறக்கம் என்னை ஆட்கொண்டது. யாரோ கண்களில் மணலைத் தூவி விட்டார்போல், வேதனைப் பட்டேன்.

“போதும், போதும். படுக்க நேரமாகிவிட்டது. உன் கண்கள் உன்னையும் அறியாமல் மூடுகின்றன” என்று என் தாயார் கூறினுள்.

“ஆனுல் என் கணக்கை இன்னும்போடவில்லேயே.”

“அதை முன்னுலேயே போட்டிருக்கவேண்டும். காலம் கடந்தபின் உட்கார்ந்துகொண்டிருப்பதில் பயனே இல்லே. இந்த முறையில் நீ ஒன்றும் கற்றுக்கொள்ள முடியாது. களைப்படைந்திருக்கும்பொழுது, மூளை சரிவர வேலே செய் யாது” என்று பதில் கூறினுள் தாயார்.

“இல்லே. வேலேயை முடித்துவிட்டுத்தான் அவன் படுக்கவேண்டும். அப்பொழுதுதான், வீட்டு வேலேயைச் செய்யாமல் நேரம் கடத்துவதின் தவறை தெரிந்துகொள் வான்” என்று அப்பா கூறினுர்.

ஆகவே நான் உட்கார்ந்து மீண்டும் மீண்டும் கணக்கைப் படித்தேன். ஆனுல் அதிலுள்ள எண்கள் ஆடி நெளிந்து ஒன்றன்பின் ஒன்று ஒளிந்துகொண்டு “கண்ணும் பூச்சி” விளேயாடின. கண்களைத் துடைத்துக்கொண்டு மீண்டும் படிக்க முயன்றேன்; ஆனுல் எழுத்துக்கள் மேலும் கீழுமாகப் பாய்ந்துகொண்டிருந்தன.

“ஏன் கஷ்டப்படுகிருய்?” என்று தாயார் கேட்டாள்.

“இது ஒரு கணக்கு! புரிந்து தொலேயவில்லே” என்றேன்.

"தவறு கணக்குடையதல்ல; மாணவனுடையது."

அம்மா கணக்கைப் படித்துவிட்டு, அதை எப்படிப் போடுவதென்று சொல்லத் தொடங்கினுள். ஆனல் என்ன காரணத்தாலோ, எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

"உன் கணக்குகளை எப்படிப் போடவேண்டுமென்று பள்ளிக்கூடத்தில் கற்றுக்கொடுப்பதில்லையா?" என்று தந்தை கேட்டார்.

"இல்லை" என்று நான் பதில் கூறினேன்.

"இது வேடிக்கையாயிருக்கிறது! நான் பள்ளிக்கூடத்துக்குப் போனபொழுது, ஆசிரியர் முதலில் வகுப்பில் கணக்குப் போடுவதற்குக் கற்றுக்கொடுப்பார்; அதன் பிறகு அது போன்ற கணக்குகளை வீட்டில் போடச் சொல்வார்."

"நீ பள்ளிச்கூடம் போன காலத்தில் அப்படியிருக்கலாம்; ஆனல் ஆல்கா நிகோலிவ்ன ஒருபொழுதும் ஒன்றையும் விளக்குவதில்லை. ஒவ்வொன்றையும் நாங்களே போடும்படி செய்கிருள்."

"அப்படியா? இது நவீனமாயிருக்கிறது."

"ஆம்! இது நவீனமானதுதான்."

"கணித வகுப்பில் உங்களுடைய ஆசிரியர் உங்களுக்கு என்ன கூறினர்?"

"அவள் ஒன்றும் சொல்லவில்லை. நாங்கள் ஒரு கணக்கை கரும்பலகையில் போட்டோம்."

"எங்கே? அதைக் காட்டு."

கரும்பலகையிலிருந்து குறிப்பேட்டில் எழுதிக்கொண்ட கணக்கை அப்பாவிடம் காண்பித்தேன்.

"அதே மாதிரிக் கணக்கைத்தான் வீட்டில்போடச் சொல்லியிருக்கிருள். ஆனல் நீயோ ஆசிரியரைப்பற்றி

புகார் கூறுகிறாய். கணக்கை எப்படிப்போடுவதென்று அவள் கற்றுக் கொடுத்திருக்கிறாளே.''

''அதுவும் இதுவும் எப்படி ஒரே மாதிரியாகும்! அது வீடுகட்டிய மரத்தச்சர்களைப்பற்றியது; இது தவலைகள் செய்யும் தொழிலாளரைப்பற்றியது'' என்று நான் பதில் அளித்தேன்.

''அறியாப்பையா! முதல் கணக்கில், 25 தச்சர்கள் எட்டு வீடுகள் கட்டுவதற்கு எத்தனை நாட்கள் பிடித்தது என்பதை நீ கண்டுபிடிக்கவேண்டியிருந்தது; இந்தக் கணக்கில், ஆறு பாத்திரத் தொழிலாளர்கள் 36 தவலைகள் செய்வதற்கு எவ்வளவு நேரம் தேவை என்பதைக் கண்டுபிடிக்கவேண்டும். இரண்டும் ஒரே மாதிரியானவை'' என்று என் தந்தை விளக்கினார்.

கணக்கை எப்படிப்போடுவதென்று அப்பா விளக்கத் தொடங்கினார். ஆனால் என் தலை சுற்றியது, ஒன்றுமே விளங்கவில்லை. முடிவில் அப்பா தன் பொறுமையை இழந்தார். ''நீ ஒரு மட்டிப் பையன்! நீ எப்படி இத்தகைய மடையனானாய்?''

அப்பாவுக்கு கணக்குகளை விளக்கத் தெரியாது. அவருக்குக் கற்றுக் கொடுக்கும் திறமை இல்லை என்று அம்மா சொல்கிறாள். ஆகவே, அவர் பள்ளிக்கூட ஆசிரியர் வேலைக்கு தகுதியற்றவர். அவர் சாந்தமாகத்தான் ஆரம்பிப்பார்; ஆனால் கொஞ்சநேரத்தில் உணர்ச்சிவசப்பட்டு, என்னைப் பார்த்துச் சத்தம்போடுவார். அப்பொழுது என் மூளை வேலை நிறுத்தம் செய்துவிடும்; ஊமையன் மாதிரி உட்கார்ந்து விடுவேன்.

''இதிலே கஷ்டப்பட்டுப் புரிந்துகொள்வதற்கு என்ன இருக்கிறது? சூரிய வெளிச்சம் மாதிரித் தெளிவாக இருக்கிறதே!'' என்றார் என் தந்தை.

விளக்கிச் சொல்வதில் பயனில்லையென்பதைக் காணும் பொழுதெல்லாம், அப்பா ஒரு காகிதத்தை எடுத்துத் தானே கணக்கைப் போட்டுவிடுவார்.

"இதோ பார்! எவ்வளவு எளிதாயிருக்கிறது! முதலில் நாம் என்ன கண்டுபிடிக்கவேண்டும்?"

நான் மௌனம் சாதித்தேன்; அவர் கணக்கின் முற்பகுதியை எழுதிக்கொண்டார்.

"இது புரிகிறதா?"

உண்மையில், எனக்கு லவலேசமும் புரியவில்லை; ஆனால் 'நித்திராதேவி' செய்த கெடுபிடியில் நான் புரிந்து கொண்டதாகப் பாசாங்கு செய்தேன்.

அப்பாவுக்குத் திருப்தி. "நல்லவேளை! உன் புத்தியை கொஞ்சம் உபயோகப்படுத்தினால்போதும். உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எல்லாம் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்."

பிறகு, அவர் கணக்கின் பிற்பகுதியையும் போட்டார்.

"இப்பொழுது புரிகிறதா?"

"புரிகிறது" என்று நான் புளுகினேன்.

"நிச்சயமாகவா? இல்லாவிட்டால், நான் விளக்கிச் சொல்கிறேன்."

"வேண்டாம்! எனக்குப் புரிந்துவிட்டது."

"இந்த அழகான கணக்கை அவர் முடிக்கவேமாட்டாரென்று நான் நினைத்தேன். ஆனால் கடைசியில் அவர் முடித்துவிட்டார். நான் அதைத் துரிதமாக என் குறிப்பேட்டில் எழுதிக்கொண்டு, அதனைப் பையில் போட்டேன்.

"ஒரு பாரம் இறங்கிய மாதிரி! அப்படித்தானே?" என்றாள் லிக்கா.

"வாயை மூடு!" என்று அவளைப்பார்த்து உறுமிவிட்டுப் படுக்கச் சென்றேன்.

# 3. சுவரில் மாலுமி!

**கோ**டை விடுமுறைக் காலத்தில் எங்கள் பள்ளியை சுத்தம்செய்து சிங்காரித்திருந்தார்கள். வகுப்பறைச் சுவர்களெல்லாம் வெள்ளையடித்திருந்தார்கள்; அவற்றின்மீது ஒரு கறைகூட இல்லை. வகுப்பறையே புத்தம் புதியதாகக் காட்சியளித்தது. இம்மாதிரி நேர்த்தியான தூய வகுப்பறையில் படிப்பது இன்பமாகத்தான் இருக்கிறது. அறை வெளிச்சமாகவும் விசாலமாகவும் தோற்றமளிக்கிறது; இந்தச் சுழலில் கிளுகிளுத்தது உள்ளம்.

புத்தாண்டு தொடங்கிய மறுநாள் நான் பள்ளிக்கு வந்தபொழுது என்ன கண்டேன்? வகுப்பறைச் சுவரில் கரும்பலகைக்குப் பக்கத்தில் ஒரு மாலுமிப் பையனின் சித்திரம் கரியால் வரையப்பட்டிருந்தது. அவனுடைய கோடுபோட்ட சட்டை, உடம்போடு ஒட்டிக்கொண்டிருந்தது; அவனுடைய கால் சட்டை தளர்ந்திருந்தது; காற்றில் அசைந்தாடிக் கொண்டிருந்தது. அவனுடைய தலையில் மாலுமிக் குல்லாய்; வாயில் புகைபிடிக்கும் குழயாய்; குழாயிலிருந்து வெளியே வரும்புகை, நீராவிக் கப்பலின் புகைபோக்கிலிருந்து வரும் புகையைப்போல வளையம் வளையமாக மேலே போயிருந்தது; அதைப் பார்க்கும்பொழுது, நீரைக் கிழித்துச் செல்லும் படகை நினைவூட்டியது. அந்த மாலுமிப் பையனின் பகட்டைப் பார்க்கும் எவரும் சிரிக்காமலிருக்கமுடியாது.

''அதை வரைந்தது ஐகார். ஆனால் அவனைக் காட்டிக் கொடுத்துவிடாதே!'' என்று வாஸ்யா விஷயத்தைச் சொல்லி எச்சரிக்கையும்விடுத்தான்.

''நான் காட்டிக்கொடுப்பதா?!''

பையன்கள் தத்தம் இடத்தில் அமர்ந்து, மாலுமிப் பைய னைப்பற்றி உற்சாகமாகப் பேசிக்கொண்டும் கேலிசெய்து கொண்டும் சிரித்துக்கொண்டும் இருந்தார்கள்.

மணி அடிப்பதற்குச் சற்றுமுன்னுல், சிஷ்கின் அறைக் குள் ஓடிவந்தான்.

"மாலுமியைப் பார்த்தாயா?" என்று கேட்டுக் கொண்டே அவனுக்கு சுவரைச் சுட்டிக்காட்டினேன்.

அவன் சித்திரத்தைப் பார்த்தான்.

"ஜகார் அதை வரைந்தான். ஆனுல் அதை உளறிக் கொட்டிவிடாதே!" என்றேன் நான்.

"நீயே உளறிக்கொள். உன் ருஷ்யப் பயிற்சியைச் செய்துவிட்டாயா?"

"ஓ! செய்துவிட்டேன். நான் வீட்டுவேலை செய்யாமல் பள்ளிக்கு வருகிறேன் என்று எண்ணிஞயா?"

"சரி சரி! நான் அதைச் செய்யவில்லை, செய்யமுடிய வில்லை. உன்னுடையதைக் "காப்பி" அடித்துக்கொள் கிறேன்."

"அதற்கு அவகாசம் இல்லை; ஒரு நிமிஷத்தில் பாடம் தொடங்கப்போகிறது."

"பரவாயில்லை; பாடம் சொல்லிக்கொடுக்கும்போதே நான் இதைச் செய்துவிடுவேன்."

என்னுடைய ருஷியமொழி நோட்புத்தகத்தை அவனி டம் கொடுத்தேன். அவன் 'காப்பி' அடிக்கத் தொடங் கிஞன்.

"இதோபார்! ஓடு என்ற பதத்துக்குப் பகுதி, விகுதி காட்டவில்லை!"

"பலே புத்திசாலி! ஓடு என்பது பகாப்பதம்."

"அது எப்படி இருக்கமுடியும்? பதத்துக்கு பகுதி, விகுதி இரண்டும் இருக்கவேண்டாமா?"

"பகுபதத்தைப் பிரித்தால் அவை இருக்கும். ஓடி என்ற பதத்தில் ஓடு என்பது பகுதி; இ என்பது விகுதி. ஆனால் ஓடு என்பதில் விகுதி தேடமுடியாது! அது பகாப்பதம்."

"விகுதி இல்லாத சொற்கள் உண்டா?"

"நிச்சயமாக உண்டு."

"இது எனக்குத் தெரியாது! அதனால் திருதிருவென்று விழித்தேன்!"

"நீ எப்படி கரையேறப்போகிறாய்? இவற்றையெல்லாம் மூன்றும் வகுப்பிலேயே படித்தோம்!"

"அவ்வளவு பழைய விஷயங்களையெல்லாம் நான் நினைவில் கொள்ளமுடியாது. எல்லாம் சரியாக எழுதியிருக்கிறாயா? 'காப்பி' அடிப்பதற்காகக் கேட்கிறேன்."

நான் பகாப்பதம், பகுபதம், பகுதி, விகுதி, இடைநிலை முதலியவற்றை விளக்கப்போகும் தருணத்தில் மணி அடித்தது; ஆல்கா நிகோலிவ்னா அறைக்குள் வந்தாள். உடனே மாலுமிப் பையனைப் பார்த்துவிட்டாள்; அவளுடைய முகம் கடுகடுத்தது.

"இது என்ன மடமை! இதை வரைந்தது யார்?" என்று பையன்கள் அனைவரையும் தன் பார்வையில் அடக்கிக் கொண்டே ஆல்கா நிகோலிவ்னா கேட்டாள்.

ஒருவரும் பேசவில்லை.

"சுவரைக் கெடுத்த பையன் எழுந்து நின்று தன் குற்றத்தை ஒப்புக்கொள்ளவேண்டும்" என்று கூறினாள் ஆசிரியை.

நாங்கள் மௌனம் சாதித்தோம்; எவரும் எழுந்திருக்க வில்லை. ஆல்கா நிகோலிவ்னு பார்வையில் கோபம் கொப் புளித்தது.

"இங்கு பாருங்கள்! பையன்களே! உங்களுடைய வகுப் பறையைச் சுத்தமாக வைத்துகொள்ளவேண்டுமென்று உங் களுக்குத் தெரியாதா? ஒவ்வொருவரும் சுவரில் படம்போடத் தொடங்கிவிட்டால் பள்ளிக்கூடம் எப்படி இருக்கும்? வகுப் பறை அழகில்லாமலும் அசுத்தமாகவும் இருக்கவேண்டு மென்று நினைக்கிறீர்களா?"

"இல்லை! இல்லை!" என்று சிலர் தயங்கித்தயங்கி கூறி ஞர்கள்.

"பின்னர் இதைச் செய்தது யார்?"

மீண்டும் மௌனம்.

"கிளெப்! நீ சட்டாம்பிள்ளை. இதைச் செய்தது யாரென்று உனக்குத் தெரிந்திருக்கவேண்டும்."

"எனக்குத் தெரியாது, ஆல்கா நிகோலிவ்னு. நான் அறைக்கு வந்தபொழுதே அது இருந்தது."

"நன்று! யாராவது அதை வரைந்திருக்கவேண்டும். நேற்றுச் சுவர்கள் சுத்தமாக இருந்தன. நான்தான் வகுப் பறையிலிருந்து கடைசியில் சென்றேன். இன்று காலை முதலில் வகுப்புக்கு வந்தது யார்?"

எந்தப் பையனும் எழுந்து உண்மையைச் சொல்ல வில்லை. ஒவ்வொருவனும் தான் வரும்பொழுதே வகுப்பு நிறைந்திருந்ததாகக் கூறினன். இந்தச் சமயத்தில் சிஷ்கின் என் நோட் புத்தகத்திலிருந்து அப்பியாசத்தை 'காப்பி' அடித்துவிட்டான். என் நோட்டை அவன் திருப்பிக் கொடுக்கும்பொழுது, அதில் ஒரு பெரிய மசிக்கறை இருந்தது.

"இது என்ன? நான் கொடுக்கும்பொழுது அதில் கறையே கிடையாதே" என்றேன் நான்.

"சரி! நான் வேண்டுமென்றே மசியை ஊற்றினேனு?"

"வேண்டுமென்றே செய்தாயா இல்லையா என்பதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. நீ கறை செய்திருக்கக் கூடாது."

"இனி என்ன செய்யமுடியும்? அடுத்த தடவை விழிப்பா யிருப்பேன்."

"அடுத்த தடவை என்ன?"

"அடுத்த தடவை 'காப்பி' அடிக்கும்பொழுது."

"எப்பொழுதுமே என்னிடமிருந்து 'காப்பி' அடிக்கப் போகிருயா?"

"எப்பொழுதுமே என்று யார் சொன்னது? சில சமயங் களில் 'காப்பி' அடித்துக்கொள்வேன்."

இதற்குள் ஆல்கா நிகோலிவ்ஞ சிஷ்கினை கரும் பலகைக்கு கூப்பிட்டதால், வாதம் நின்றது. பள்ளிக்கூடச் சுவர்களை வெள்ளையடித்தவர்களைப்பற்றி ஒரு கணக்குப் போட்டாள். சகல வகுப்பறைகளையும் தாழ்வாரங்களையும் வெள்ளையடிப்பதற்கு பள்ளிக்கூடம் எவ்வளவு பணத்தைச் செலவிட்டது என்று அவன் கண்டுபிடிக்கவேண்டும்.

"பாவம்! சிஷ்கினுக்குக் கேடுகாலம்! பிறருடைய புத்த கங்களிலிருந்து காப்பி அடிப்பதைவிட, கரும்பலகையில் கணக்குப்போடுவது கொஞ்சம் கடினமல்லவா?" என்று எண்ணினேன்.

ஆனுல் சிஷ்கின் கணக்கை நன்ருகப்போட்டான்; நான் ஆச்சரியத்தில் ஆழ்ந்துவிட்டேன். கணக்கு நீளமாயிருந்தது; மிகவும் கடினமாக இருந்தது; ஆகவே அவனுக்கு அதிக

நேரம் பிடித்ததென்பது உண்மை. ஆனுல் வகுப்பிலிருந்து எவரும் திருட்டுத்தனமாக சொல்லிக் கொடுக்கவில்லை; ஏனென்ருல் அவனுல் கணக்கைப்போட முடிகிறதென்பதை எல்லோரும் பார்த்தோம்.

ஆல்கா நிகோலிவ்ன இந்தக் கணக்கை காரணத்துடன் தான் கொடுத்திருக்கிருளென்பதை நாங்கள் அனைவரும் புரிந்துகொண்டோம். மாலுமிப் பையன் விவகாரம் முடிந்து விடவில்லை என்பது தெளிவாயிருந்தது. அடுத்த பாடத்தில் பள்ளிக்கூட டைரக்டரான ஐகார் அலெக்ஸாண்ட்ராவிட்ச் வந்தார். அவர் முகத்தோற்றத்தில் கொஞ்சமும் கடுமையோ கண்டிப்போ காணமுடியவில்லை; எப்பொழுதுமே சாந்தம் மிகுந்தவராகத் தோற்றமளிப்பவர். அவருடைய குரலோ இனிமையும் அன்பும் நிறைந்தது. ஆனுல் மிகவும் வளர்ந்த வராக இருப்பதால் எனக்கு அவரிடம் கொஞ்சம் பயம்தான். அப்பாவுக்கு இணையான பருமனுள்ளவர்; அப்பாவைவிட உயரம் அதிகம். ஒரு நீண்ட தளர்ந்த சட்டையை—மூன்று பித்தான்களுள்ள சட்டையை—அணிந்துகொண்டிருப்பார். மூக்குக் கண்ணுடியும் அணிவார்.

அவர் எங்களை கடிந்துகொள்வாரென்று எண்ணினேன். ஆனுல் அமைதி நிறைந்த குரலில் பேசினுர். ஒவ்வொரு பையனுக்கும் கல்வி அளிப்பதற்காக அரசாங்கம் என்ன செலவு செய்கிறதென்று எடுத்துரைத்தார். படிப்பிலே கருத்தாக இருப்பதின் அவசியத்தை வலியுறுத்தினுர். பள்ளிக்கூடச் சொத்தைக் கவனமாகப் பராமரிக்கவேண்டு மென்பதை விளக்கினுர். சொத்தை—சுவர்கள் உள்பட—எவர் வீண் செய்தாலும், அவர் மக்களுக்கு தீங்கிழைக்கிருர்; ஏனென்ருல் பள்ளிக்கூடச் செலவுக்குத் தேவையான பணம் முழுவதும் மக்களிடமிருந்துதான் வருகிறது. அவர் மேலும் கூறினுர் :—

“சுவரில் படம்போட்ட பையன் பள்ளிக்கு தீங்கிழைக்க விரும்பவில்லை; இதை நான் நிச்சயமாக அறிவேன். அவன்

தான் செய்த காரியத்தை ஒப்புக்கொண்டுவிட்டால் அவனுடைய நேர்மையை நிரூபித்தவனுவான். தான் செய்வது என்னவென்று தெரியாமல் செய்துவிட்டான் என்பதை மெய்ப்பிப்பான்.''

ஐகார் அலெக்ஸாண்ட்ராவிட்ச் இவ்வளவு கூறிய பிறகு, நானுக இருந்தால், அங்கேயே அப்பொழுது எழுந்திருந்து செய்த காரியத்தை ஒப்புக்கொண்டிருப்பேன். ஐகார் அப்படிச் செய்வானென்றுதான் நான் எண்ணினேன். ஆனுல் அவன் தன் நேர்மையை நிரூபிப்பதற்கு விரும்பவில்லை போலிருக்கிறது. அதனுல்தான் தன் இடத்திலிருந்து எழுந்திருக்கவுமில்லை, வாய்திறக்கவுமில்லை. படத்தை வரைந்த பையன் தன் தவறை இப்பொழுது ஒப்புக்கொள்வதற்கு வெட்கப்படுகிருனென்றும், அவன் யோசித்துப்பார்த்துத் தன் அலுவலகம் வந்து தவறை ஒப்புக்கொள்வானென்று தான் எதிர்பார்ப்பதாகவும் ஐகார் அலெக்ஸாண்ட்ரோவிட்ச் கூறினுர்.

பாடங்கள் முடிந்தபிறகு, எங்களுடைய பாலர் சங்கக் குழுவுக்குத் தலைவனுன டோல்யா, ஐகாரிடம் சென்று கூறினுன்: ''நீ ரொம்ப நல்ல பையன்! சுத்தமான சுவரைக் கெடுக்கும்படி உனக்குச் சொன்னது யார்? இப்பொழுது உன் வினையின் விளைவைப்பார்;''

''நான் தவருக எதையும் செய்ய விரும்பவில்லை.''

''பிறகு எதற்காக அதைச் செய்தாய்?''

''எனக்கே தெரியாது! யோசனை செய்யாமலேயே அந்தப் படத்தை வரைந்தேன்.''

''யோசனையில்லாமல் செய்தாய்! இப்பொழுது உன்னுல் வகுப்பு முழுமைக்கும் அவமானம்.''

''ஏன் அப்படிச் சொல்கிருய்!''

"ஏனென்றால், இந்தப்பழி வகுப்புப் பையன்களில் எவரையும் சேரலாம்!"

வேறு வகுப்புப் பையன் வந்து அதை வரைந்திருக்கலாம்! நம் வகுப்புப் பையன்தான் செய்தானென்று அவர்கள் எப்படி ஊகிப்பார்கள்?"

"சரி சரி! அம்மாதிரி இனிச் செய்யாதே!" என்றான் டோல்யா.

"உறுதியாக இம்மாதிரி இனிச் செய்யேன். எப்படியிருக்கிதென்று பார்க்கவே நான் விரும்பினேன்."

அவன் ஒரு கந்தல் துணியை எடுத்து மாலுமிப் பையனை அழிக்க முயன்றான்; ஆனால் அவன் செய்ததால் சுவர் மேலும் அசுத்தப்பட்டது. மாலுமிப் பையன் அப்படியே இருந்தான்; ஆனால் அவனைச் சுற்றி ஒரு கறுப்புக் கறை படர்ந்திருந்தது. மேலும் சுவர் ஆபாசமாகக் கூடாதென்பதற்காக பையன்கள் அவனிடமிருந்து கந்தலை வாங்கிக்கொண்டார்கள்.

பள்ளிக்கூடம் முடிந்தபின் நாங்கள் மீண்டும் கால் பந்து ஆடச் சென்றோம்; இருள் பரவும்வரை ஆடினோம். வீட்டுக்குப்போகும் வழியில், சிஷ்கின் என்னை அவனுடைய இல்லத்துக்குக் கூப்பிட்டான். அவன் எங்களுடைய தெருவிலேயே வசிப்பதை அப்பொழுதுதான் தெரிந்துகொண்டேன். அவன் வீடு எங்களுடையதிலிருந்து தூரமில்லை; அது ஒரு சிறு வீடு; மரத்தில் கட்டிய இரட்டை மாடிவீடு. எங்கள் தெருவிலுள்ள இதர வீடுகள் அனைத்தும் பெரியவை; நான்கு, ஐந்து மாடிகள் உடையவை; எங்களுடைய வீடும் அப்படிப்பட்டது தான். இந்தச் சிறு வீட்டில் வசிப்பது யார் என்று நான் அடிக்கடி ஆச்சரியப்பட்டதுண்டு. இப்பொழுது பார்த்தால் அந்த வீட்டில் வசிப்பது சிஷ்கின். காலம்தாழ்ந்துவிட்டதால் அவன் வீட்டுக்குப்போக எனக்குப் பிரியமில்லை. ஆனால் அவன் கூறினான் :

"வா, வா! நீ வராவிட்டால், இவ்வளவு நேரம் வெளியே இருந்ததற்காக எனக்கு வசவு கிடைக்கும். நீ என்னுடன் வந்தால் அவர்கள் ஒன்றும் சொல்லமாட்டார்கள்."

"எனக்கும் வீட்டில் வசவு கிடைக்கும்" என்றேன் நான்.

"அதுசரி; வேண்டுமானால் பிறகு உன்னுடன் உன் வீட்டுக்கு வருகிறேன். அப்பொழுது இருவருக்கும் வசவு கிடைக்காது."

"அப்படியானால் வருகிறேன்."

நாங்கள் இருவரும் சிறு தூண்களால் தாங்கப்பெற்ற மாடிப்படி வழியே ஏறினோம்; அது 'கிரீச்' என்று ஒலித்தது. கிழிந்துபோன கறுப்பு 'ஆயில் கிளாத்' மூடியிருந்த கதவை சிஷ்கின் தட்டினான்.

"காஸ்ட்யா, இதன் அர்த்தம் என்ன? இத்தனை நாழி எங்குப்போயிருந்தாய்?" என்று கதவைத் திறந்த அவன் தாயார் கடிந்துகொண்டாள்.

"அம்மா, இவன் என் வகுப்பு மாணவன் மாலியேவ். நாங்கள் இருவரும் ஒரே பெஞ்சில் உட்காருகிறோம்."

"வா, வா" என்று அவன் தாயார் என்னைப் பார்த்துக் கூறும்பொழுது, குரலின் கண்டிப்புக் குறைந்திருந்தது.

நாங்கள் உள்ளே சென்றோம்.

"அட, கடவுளே! நீங்கள் என்ன செய்துகொண்டிருந்தீர்கள்? உங்களைச் சற்றுப் பார்த்துக்கொள்ளுங்கள்!"

நான் சிஷ்கினைப் பார்த்தேன். அவன் முகம் கருஞ்சிவப்பாயிருந்தது; அவனுடைய கன்னங்களிலும் நெற்றியிலும் அழுக்குக் கறைகள் இருந்தன. அவனுடைய மூக்கு நுனி கன்னங்கரேலென்று இருந்தது. என் முகத்தில் மட்டும்

அழகு சொட்டியதா? பந்து என் முகத்தின்மீது நேராக அடித்திருந்தது. சிஷ்கின் என்னை முழங்கையால் இடித்துக் கொண்டே கூறினன். "வா! கழுவிக் கொள்வோம். இல்லா விட்டால் இப்படியே உன் வீட்டுக்குப்போனுல் உனக்குச் செம்மையாகக்கிடைக்கும்."

நாங்கள் அறைக்குள் சென்ருேம். சிஷ்கின் அவனுடைய அத்தைக்கு என்னை அறிமுகப்படுத்திவைத்தான்.

"அத்தை! இவன் என் வகுப்பு மாணவன் மாலியேவ்."

அவனுடைய அத்தை ஸினு வயதில் இளையவள்; உண்மையில் அவள் சிஷ்கினுடைய மூத்த சகோதரி என்றே முதலில் நினைத்தேன். அவள் என்னைக் கேலிச் சிரிப்புடன் பார்த்தாள். என் முகமெல்லாம் அழுக்குப் படிந்திருந்ததால் நான் கோமாளி மாதிரி இருந்திக்கவேண்டும். சிஷ்கின் மீண்டும் என்னை முழங்கையால் இடித்தான்; நாங்கள் குளிக்குமிடத்துக்குச் சென்று, கழுவிக்கொண்டோம்.

நான் முகத்தில் 'சோப்' போட்டுக்கொண்டிருந்தேன்; "உனக்கு மிருகங்களைப் பிடிக்குமா?" என்று கேட்டான் சிஷ்கின்.

"எந்த மிருகம் என்பதைப் பொறுத்திருக்கிறது என் விருப்பும் வெறுப்பும்! புலி அல்லது முதலை என்ருல் எனக்குப் பிடிக்காது. அவை கடிக்கின்றன."

"அறியாக் கழுதை! அப்படிப்பட்ட மிருகங்களை நான் சொல்லவில்லை; உனக்குச் சுண்டெலிகளைப் பிடிக்குமா?"

"பிடிக்காது. நான் சுண்டெலிகளை மதிப்பதில்லை. அவை பொருட்களை வீணுக்குகின்றன; எதைக் கண்டாலும் கடித்துவிடுகின்றன."

"அப்படியெல்லாம் செய்யா; நீ சொல்வது தவறு."

"சுண்டெலி கடிக்காதா? நன்று, நன்று! ஒருதடவை அது என் புத்தகம் முழுவதையும் கடித்துப்போட்டு விட்டது."

"நீ சோறு போட்டிருக்கமாட்டாய்!"

"சுண்டெலிக்கு சோறும் போடுவார்கள், விருந்தும் வைப்பார்கள்!"

"நான் என் சுண்டெலிகளுக்கு நாள்தோறும் உணவு அளிக்கின்றேன்; அவற்றுக்கு வீடும் கட்டிக்கொடுத்திருக் கிறேன்."

"பலே! பலே! உனக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும்! சுண்டெலிகளுக்கு யாரும் வீடு கட்டிக்கொடுத்த தாக நான் கேள்விப்பட்டதில்லை."

"சுண்டெலிகளும் எங்காவது வசிக்கவேண்டுமல்லவா? வா, உனக்குக் காட்டுகிறேன்."

நாங்கள் முகங்கழுவிக்கொண்டு, அடுக்களைக்குச் சென்றோம். அங்கு நாற்காலிக்குக் கீழே ஒரு சிறு வீடு களை யுடன் விளங்கியது; அட்டைப் பெட்டிகளாலான அந்த வீட்டுக்கு நிறைய கதவுகளும் ஜன்னல்களும் இருந்தன. அதில் விசித்திரமான, வெண்மையான சிறு பிராணிகள் ஏராளமாக இருந்தன; கதவுகள் ஜன்னல்கள் வழியாக வெளியே பாய்ந்தும் வீட்டுக்குள் ஓடியும் விளையாடிக்கொண் டிருந்தன. அந்த வீட்டுக் கூரையில் ஒரு புகைபோக்கி இருந்தது; ஒரு பிராணி அதன் வழியாக வெளியே எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தது.

இது மாதிரி நான் இதற்குமுன் ஒருபொழுதும் பார்த்த தில்லை.

"இந்த பிராணிகள் பெயர் என்ன?" என்று நான் கேட்டேன்.

"இவை சுண்டெலிகளே."

"சரடு விடாதே! சுண்டெலிகள் பழுப்பு நிறமுள்ளவை. இவை வெண்மையாயிருக்கின்றன."

"வெள்ளைச் சுண்டெலிகளைப் பற்றி நீ கேள்விப்பட்டதில்லையா?"

சுண்டெலிகளில் ஒன்றை எடுத்துச் சிஷ்கின் என்னிடம் கொடுத்தான். அது உறைபனி மாதிரி வெள்ளை வெளேரென்று இருந்தது; அதன் வால் மட்டும் பன்னீர்ப் பூ நிறமாயிருந்தது. வால் நீளம்தான்; அதன் மீது ஒரு மயிர் கிடையாது. அது சமர்த்தாக என் உள்ளங்கை மீது உட்கார்ந்து கொண்டது. எதையோ முகர்ந்து பார்ப்பது மாதிரி அதன் சின்னஞ் சிறிய இளஞ்சிவப்பு மூக்கு மட்டும் நெளிந்தது. அதன் கண்கள், பவளமணிகள் மாதிரி, செக்கச் செவேலென்று இருந்தன.

"எங்கள் வீட்டில் வெள்ளைச் சுண்டெலி கிடையாது; பழுப்புச் சுண்டெலிகள்தான் இருக்கின்றன" என்றேன் நான்.

"அறியாப் பையா! இவை இரண்டும் ஒரே ஜாதியைச் சேர்ந்தவையல்ல. இந்த வெள்ளைச் சுண்டெலிகளைப் பிராணிகள் விற்பனையாகும் கடையில் வாங்கவேண்டும். நான் நான்கு சுண்டெலிகளை வாங்கினேன். அவை எப்படிப் பெருகிவிட்டன, பார்த்தாயா! உனக்குப் பிடித்தால் ஒரு ஜோடி தருகிறேன்."

"அவற்றிற்கு என்ன உணவு கொடுக்கிறாய்?"

"ரொட்டி, பால், தானியம், எதையும் கொடுக்கலாம்."

"சரி! கொடு" என்று கூறினேன் நான்.

சிஷ்கின் ஒரு அட்டைப் பெட்டியை எடுத்து, அதில் இரண்டு சுண்டெலிகளை வைத்துப் பையில் போட்டுக் கொண்டான்.

‘‘நானே அவற்றைக் கொண்டுவருகிறேன். நீ கசக்கி விடுவாய்’’ என்று சொன்னான்.

நாங்கள் சட்டைகளை மாட்டிக்கொண்டோம்.

‘‘மீண்டும் வெளியிலா?’’ என்று கோஸ்ட்யாவின் தாயார் கேட்டாள்.

‘‘இதோ வந்துவிடுகிறேன். வித்யாவின் வீட்டுக்கு மட்டும் ஒரு நிமிஷம் போய்வருகிறேன். அவனிடம் முன்பே சொல்லிவிட்டேன்.’’

நாங்கள் வெளியேறினோம். சில நிமிஷங்களில் என் வீட்டுக்கு வந்துவிட்டோம். நான் தனியாக வரவில்லை என்பதைக் கண்ட என் தாயார், நேரம் கழித்து வந்ததற்காக என்னைத் திட்டவில்லை.

‘‘இது என் பள்ளித்தோழன் கோஸ்ட்யா’’ என்று நான் அவளுக்கு அறிமுகம் செய்தேன்.

‘‘நீதான் புதிய பையனா?’’ என்று அம்மா அவனைக் கேட்டாள்.

‘‘ஆம். இந்த ஆண்டுதான் இங்கு சேர்ந்தேன்.’’

‘‘முன்னால் எந்தப் பள்ளியில் படித்தாய்?’’

‘‘நால்சிக்கில் படித்தேன். அத்தை பள்ளிப் படிப்பை முடிக்கும் வரை அங்கு இருந்தோம். அவள் ஒரு நாடகப் பயிற்சிக்கூடத்தில் சேர விரும்பினாள்; அதனால் இங்கு வந்தோம். நால்சிக்கில் நாடகப் பயிற்சிப் பள்ளி கிடையாது.’’

‘‘உனக்கு இந்த ஊர் பிடித்தமா? அல்லது நால்சிக் பிடித்தமா?’’

‘‘நால்சிக் இதைவிட நன்றாயிருந்தது. இந்த ஊரும் நன்றாக இருக்கிறது. நாங்கள் கிராஸ்னஸ்வாட்ஸ்கிலும் வசித்தோம். அதுவும் நல்ல ஊர்தான்.’’

"நீ நல்ல தன்மையுள்ள பையன். எங்கிருந்தாலும் உனக்குப் பிடிக்கிறது."

"நீங்கள் சொல்லுவது சரியில்லை. எனக்கு நல்லகுணம் கிடையாது. நான் உறுதியில்லாதவனென்று அம்மா சொல்கிருள். அதனுல் நான் உருப்படமாட்டேனென்று கூறுகிருள்."

"உன் தாயார் ஏன் அவ்விதம் கூறவேண்டும்?"

"ஏனென்ருல் நான் காலாகாலத்தில் பாடங்களைப் பயில்வது கிடையாது."

"அப்படியானுல் நீ நம் வித்யா மாதிரி இருக்கிருய். அவனும் தன் பாடங்களைக் காலத்தில் படிப்பதில்லை. நீங்கள் இருவரும் கூட்டு முயற்சி எடுத்து உங்களுடைய குணங்களை மாற்றிக்கொள்ளவேண்டும்."

அம்மா சொல்லிமுடிக்கும்பொழுது விக்கா அங்கு வந்தாள்.

"என் தங்கை, விக்கா" என்று சிஷ்கினுக்கு அறிமுகம் செய்தேன்.

சிஷ்கினும் விக்காவும் ஒருவரை ஒருவர் விசாரித்துக் கொண்டார்கள். சிஷ்கினை சாமானியப் பையனுக விக்கா நினைக்கவில்லை போலிருக்கிறது! ஏதோ படத்தைப் பார்ப்பது மாதிரி சிஷ்கினை உற்றுப் பார்த்தாள்.

"எனக்குச் சகோதரி கிடையாது. சகோதரனும் இல்லை. ஒருவரும் இல்லை" என்ருன் சிஷ்கின்.

"உனக்கு சகோதரன் அல்லது சகோதரி வேண்டுமென்று ஆசையாகவிருக்கிறதா?" என்று விக்கா கேட்டாள்.

"கொள்ளை ஆசையுண்டு! அவர்களுக்கு வியப்பான விளையாட்டுப் பொருட்களைச் செய்துகொடுப்பேன்; விளையாடு

வதற்குப் பிராணிகளையும் கொடுப்பேன். அவர்களைக் கவன மாகப் பார்த்துக்கொள்வேன்.”

“நீ அம்மாவைப் பார்த்துக்கொள்ளக்கூடாதா?”

“அது எப்படி முடியும்? அவள்தான் அதிகாலையில் வேலைக்குப் போய்விடுகிறாளே. வீட்டுக்கு வருவாள் வருவாள் என்று காத்துக்கொண்டேயிருந்தால், கடைசியில் வரு கிறாள், சிறிது நேரத்துக்கெல்லாம் போய்விடுகிறாள்.”

“அவள் என்ன வேலை செய்கிறாள்?”

“கார் ஓட்டிக்கொண்டிருக்கிறாள்.”

“அப்படியானால் நீயே உன்னைப் பார்த்துக்கொள்ள வேண்டும். உன்னைப்பற்றி அம்மாவுக்கு கவலை இருக்கக் கூடாது.”

“ஆமாம்!”

“உன் சட்டை கிடைத்ததா?” என்று லிக்கா அவனைக் கேட்டாள்.

“என் சட்டையா? ஓ!... அதைக் கேட்கிறாயா? கிடைத் தது. கால்பந்து மைதானத்தில் நான்போட்ட இடத்திலேயே கிடந்தது.”

“இம்மாதிரிச் செய்தால் ஏதாவதொரு நாள் உனக்குத் தடிமன் பிடித்துவிடும்!”

“அப்படியெல்லாம் விடமாட்டேன்.”

“குளிர்காலத்தில் தொப்பியையும் கோட்டையும் மறந்து போய்க்கொண்டிருந்தால் நிச்சயமாகத் தடிமன் பிடிக்கும்.”

“நான் என்கோட்டை மறக்கமாட்டேன்... உனக்கு சுண்டெலி பிடிக்குமா?”

“சுண்டெலியா? ர்ர்ர்ர்” என்று லிக்கா தெற்றிப் பேசினாள்.

"உனக்கு ஒரு ஜதை வேண்டுமா?"

"வேண்டாம். நிரம்ப வந்தனம்."

"அவை மிக நன்ருயிருக்கும்" என்று சொல்லிக் கொண்டே சிஷ்கின் சுண்டெலிப் பெட்டியை எடுத்துத் திறந்தான்.

"அட! கண்மணிகளே!" என்று லிக்கா கொஞ்சினுள்.

"என் சுண்டெலிகளை அவளுக்கு ஏன் கொடுக்கிருய்?" என்றேன் நான் "முதலில் அவற்றை எனக்குக் கொடு. பிறகு நீ அவளுக்குக் கொடுத்துக்கொள்"

"அவற்றை அவளுக்குக் காட்டுகிறேன். அவளுக்கு வேறு சுண்டெலிகளைக் கொடுக்கிறேன். என்னிடம் ஏராள மாக இருக்கின்றன. நீ இஷ்டப்பட்டால், இவற்றை அவள் வைத்துக்கொள்ளட்டும்; உனக்கு வேறு சுண்டெலிகளைக் கொண்டுவருகிறேன்" என்று சிஷ்கின் கூறினுன்.

"வேண்டாம். இவற்றை வித்யாவே வைத்துக் கொள்ளட்டும்!"

"சரி! நாளைக்கு உனக்கு கொண்டுவருகிறேன். இப் பொழுது நீ இவற்றைப்பார்!"

லிக்கா சுண்டெலிகளை வாங்கிக்கொண்டாள், "அவை கடிக்குமா?" என்று கேட்டுக்கொண்டே.

"கடிக்காது. அவை பழகினவை; சாதுவானவை." சிஷ்கின் போனபிறகு, லிக்காவும் நானும் ஒரு அட்டைப் பெட்டியை எடுத்து, அதில் ஜன்னல்களும் கதவுகளும் வெட் டினேம். அதில் சுண்டெலிகளைவிட்டோம். அவை ஜன்னல் கள் வழியாக எட்டிப்பார்த்த காட்சி மகிழ்வூட்டியது.

நான் பாடங்களைப் படிக்கத் தொடங்கும்பொழுது, மேலும் காலந்தாழ்ந்துவிட்டது. வழக்கம்போல் எளிய பாடங்களை முதலில் பயின்றேன். கடைசியில் கணக்குக்கு

வந்தேன். மறுபடியும் ஒரு கடினமான கணக்கைக் கொடுத் திருந்தாள். ஆகவே, கணக்கு நோட்புத்தகத்தை மூடினேன். எல்லாப் புத்தகங்களையும் பையில்போட்டேன். அடுத்தநாள், கணக்கை யாரிடமாவது 'காப்பி' அடிப்ப தென்று தீர்மானித்தேன். கணக்கைப்போட ஆரம்பித்தால், மீண்டும் நேரங்கழித்து வேலைசெய்வதைப் பார்த்துவிட்டு அம்மா திட்டுவாள். அப்பா தன் வேலையைவிட்டுவிட்டு எனக்குக் கணக்கை விளக்கிக் கூறத் தொடங்குவார். அவர் என் கணக்கைப்போடுவதில் தன் நேரத்தை வீண் செய் வானேன்? அவர் தன்னுடைய மெருகிடும் எந்திரத்துக் காகவோ, வேறு புதிய வகைக்காகவோ ஆராய்ச்சி செய்வது மிகவும் முக்கியமானது.

நான் என் பாடங்களைப் படிக்கும்பொழுது, விக்கா சுண்டெலி வீட்டுச் சுவர்களில் பஞ்சைவைத்து அடைத் தாள்; ஒரு கூடு மாதிரி அமைந்துவிட்டது அது. பிறகு சுண்டெலிகளுக்குக் கொஞ்சம் தானியமும் ரொட்டித் துண்டு களும் போட்டாள்; ஒரு சிறு தட்டில் பால்வைத்தாள். ஜன் னல் வழியாகப் பார்த்தால் அந்தச் சிறுவீட்டில் சுண்டெலிகள் தானியத்தைத் தின்றுகொண்டிருப்பதைக் காணலாம். சில சமயங்களில் அவற்றில் ஒன்று பின்னங்கால்களில் அமர்ந்து கொண்டு, முன்னங்கால் பாதங்களால் தன்னைத் துடைத்துக் கொண்டது; அது தன் முகத்தைத் துடைத்துக்கொள் வதைப் பார்த்துச் சிரித்துச் சிரித்து எங்களுக்கு வயிறு புண்ணாகிவிட்டது.

நீண்டநேரம் விக்கா அங்கு உட்கார்ந்திருந்தாள்; ஜன் னல் வழியாக ஒரு சிறு வீட்டுக்குள் எட்டிப்பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தாள்.

நானும் பார்க்கப்போனபொழுது, "உன் நண்பன் மிகவும் நல்லவன், வித்யா" என்றாள் விக்கா.

"கோஸ்ட்யாவா?"

"ஆமாம்."

“அவனிடம் என்ன நற்குணத்தைக் கண்டாய்?”

“என்ன விநயமாக நடந்துகொள்கிறுன்! இங்கிதமாகப் பேசுகிறுன். என்னேடும் பேசினுன்.”

“அவன் ஏன் உன்னேடு பேசக் கூடாது?”

“ஏனு? நான் சிறுமிதானே?”

“அதற்கும் பேசுவதற்கும் என்ன சம்பந்தம்?”

“சரி, போ! மற்ற பையன்கள் என்னுடன் பேசுவதில்லே. அவர்கள் கர்விகளாயிருக்கிருர்கள். நீ சிஷ்கினேடு சிநேகிதமாயிருப்பது எனக்குப் பிடிக்கிறது.”

சிஷ்கின் அவ்வளவு நல்லவனில்லேயென்றும் அவன் வீட்டுப் பாடத்தை ‘காப்பி’ அடிக்கிருனென்றும் என் கையெழுத்துப் பயிற்சிப் புத்தகத்தில் ஒரு மசிச்கறை செய்து விட்டானென்றும் லிக்காவிடம் சொல்லவிரும்பினேன். ஆனுல் என்ன காரணத்தாலோ லிக்காவுக்கு இவ்வாறுதான் பதில் அளித்தேன்.

“ஆம்! சிஷ்கின் நல்லபையன்தான். இல்லாவிட்டால் நான் அவனுக்கு நண்பனுக இருக்கமாட்டேன். என் வகுப்புப் பையன்களெல்லோருமே நல்ல பையன்கள்தான்!”

# 4. வகுப்புப் பத்திரிகையில் கேலிச் சித்திரம்

நான்கு அல்லது ஐந்து நாட்களுக்குப்பிறகு ஒருநாள் எங்களுடைய வகுப்பின் சுவரொட்டிப் பத்திரிகைக்கு ஆசிரியனுன செர்யோஷா கூறினன் :—

"ஆல்கா நிகோலிவ்ன! நமது ஆசிரியர் குழுவில் எவருக்கும் சித்திரம் எழுதத் தெரியவில்லை. போன ஆண்டும் பெட்யாரிப்கின் எல்லாச் சித்திரங்களையும் வரைந்துகொடுத்தான்; இப்பொழுது ஒருவருமில்லை. சித்திரங்களில்லாமல் பத்திரிகை சுவையாக இல்லை. ஒரு சித்திரக்காரன் தேவை."

"யாராவது ஒருவரைப் பொறுக்கிக்கொள்ளுங்கள்...... சரி! நாளைக்கு வகுப்புக்கு வரும்பொழுது ஒவ்வொருவரும் தத்தம் சித்திரங்களைக்கொண்டுவந்தால் நன்ருக வரையக் கூடிய பையனைத் தெரிந்துகொள்ளலாம்" என்று ஆல்கா நிகோலிவ்ன கூறினள்.

"நாங்கள் எழுதிய சித்திரங்கள் இல்லாவிட்டால்?"

"இன்று எழுதி நாளைக்குக் கொண்டுவருவது! அவ்வளவு சிரமமில்லையே!"

மறுநாள் நாங்கள் அனைவரும் சித்திரங்களைக்கொண்டு வந்தோம். சில பையன்கள் பழைய சித்திரங்களைக்கொண்டு வந்தனர்; சிலர் புதிய சித்திரங்களைக்கொண்டு வந்தனர். சில பையன்கள் சித்திரம் வரைந்த பல ஏடுகளைக்கொண்டு வந்தனர். நானும் சில சித்திரங்களைக்கொண்டுபோனேன். நாங்கள் அனைவரும் சித்திரங்களை முறையாக மேஜைகளில் பரப்பிவைத்திருந்தோம். ஆல்கா நிகோலிவ்ன மேஜைக்கு மேஜை சென்று அவற்றை மதிப்பிட்டாள். இறுதியாக அவள் ஐகார் மேஜைக்குச் சென்று அவனுடைய சித்திரப்

புத்தகத்தை புரட்டிப் பார்வையிட்டாள்; அதில் சமுத்திரம், கப்பல்கள், பாய்மரக் கப்பல்கள், படகுகள் ஆகியவற்றின் சித்திரங்கள் நிறைய இருந்தன.

“மற்றவர்களைவிட ஐகார் நன்றாக வரைகிறான். அவனே நமது சித்திரக் கலைஞனாக இருக்கமுடியும்” என்றாள் ஆல்கா நிகோலிவ்னா.

முப்பத்திரண்டு பற்களும் வெளியே தெரியும்படி சிரித்து ஐகார் தன் மகிழ்ச்சியைக் காட்டிக்கொண்டான். ஆல்கா நிகோலிவ்னா அவனுடைய சித்திரப் புத்தகத்தை புரட்டிக் கொண்டேயிருந்தாள். கோடுபோட்ட சட்டை அணிந்தவனாய், வாயில் குழாய் வைத்துக்கொண்டு நின்ற ஒரு மாலுமியின் சித்திரம் அவள் கவனத்தைக் கவர்ந்தது. ஆம். நமது சுவரில் வரையப்பட்டிருந்த மாலுமிப் பையன். அவள் முகம் கறுத்தது; ஐகாரை கண்டிப்பான பார்வையுடன் நோக்கினாள். அவன் முகமெல்லாம் சிவந்து, உடலெல்லாம் பதறி, “நான்தான் சுவர்மீது மாலுமிப் படத்தை வரைந்தேன்” என்று தடுமாறிய குரலில் கூறினான்.

“உண்மை வெளிவந்துவிட்டது! நீ ஏன் உடனே உன் தவறை ஒப்புக்கொள்ளவில்லை? ஐகார்! நீ நேர்மையாக நடந்துகொள்ளவில்லை. ஏன் அப்படிச் செய்தாய்? இப்பொழுது சொல்லு.”

“எனக்குத் தெரியாது, ஆல்கா நிகோலிவ்னா! உண்மையாகச் சொல்கிறேன், அது தற்செயலாக நிகழ்ந்த தவறு. என்ன செய்கிறேனென்று எனக்கே தெரியவில்லை.”

“சரி சரி! இப்பொழுதாவது ஒப்புக்கொண்டதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். வகுப்பு முடிந்தபின் நீ டைரக்டரிடம்போய் மன்னிப்புக் கோரவேண்டும்.”

ஐகார் அவ்வாறே செய்தான். “பள்ளிக்கூடத்தைச் சுத்தம்செய்து அழகு செய்வதற்கு அரசாங்கம் நிறைய பணத்தை செலவிட்டிருக்கிறது. மீண்டும் அந்த வேலையைச்

செய்வதற்குப் பணம் வேண்டாமா?......சரி! நீ வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டுவா!'' என்று டைரக்டர் அவனிடம் கூறினுர்.

சாப்பாட்டிற்குப்பிறகு ஜகார் பள்ளிக்குத் திரும்பினுன். அவனிடம் சுண்ணும்புப் பாத்திரமும் 'பிரஷ்'ம் கொடுத்தார்கள். மாலுமிப் பையன் வரைந்த இடத்தில் ஜகார் வெள்ளையடித்தான்.

இதற்குப்பிறகு அவன் சித்திரக்காரனுக இருப்பதற்கு ஆல்கா நிகோலிவ்னு ஒப்பமாட்டாளென்று நாங்கள் திடமாக நம்பினேம். ஆனுல் "சுவர்களில் வரைவதைவிடப் பத்திரிகையில் வரைவது மேல்'' என்று அவள் கூறினுள்.

இதைக்கேட்டு எல்லோரும் மகிழ்ந்தோம். நானும்தான். ஆனுல் என் மகிழ்ச்சிக்குக் காரணமில்லை. ஏனென்று கேட்கிறீர்களா? சொல்கிறேன்.

நான் சிஷ்கினைப் பின்பற்றினேன்; வீட்டிலே கணக்குப் போடுவதை விட்டுவிட்டேன். மற்ற பையன்களின் புத்தகங்களைப் பார்த்து அனைத்துக் கணக்குகளையும் 'காப்பி'யடித்தேன். கெட்ட பழக்கங்கள் எளிதில் ஒட்டிக்கொள்கின்றன. "இந்தக் கணக்குகளைப்பற்றியெல்லாம் மூளையை ஏன் குழப்பிக்கொள்ளவேண்டும்? அவை எனக்குப் புரியப்போவதில்லை. காப்பி அடித்துக் கடமையை முடிப்பதுதான் மேல். அதுதான் சுலபம். அப்பாவும் அம்மாவும் எனக்குக் கணக்குத் தெரியவில்லை என்று புகார் செய்யமாட்டார்கள்'' என்று எனக்கே சமாதானம் சொல்லிக்கொண்டேன்.

பாலர் சங்க நிர்வாகக் குழுவின் தலைவன் டோல்யாவைத் தவிர வேறு எந்தப் பையனும் நான் அவர்களுடைய நோட்டுகளிலிருந்து 'காப்பி' அடிப்பதைப்பற்றிக் கவலைப்படவேயில்லை.

"எப்பொழுதும் மற்றவனைப்பார்த்து 'காப்பி' அடித்துக்கொண்டேயிருந்தால் நீ ஒருபொழுதும் கணக்குப் பாடத்தை கற்றுக்கொள்ளமாட்டாய்'' என்று டோல்யா எச்சரித்தான்.

"எனக்கு எதற்குக் கணக்கு? கணக்கு இல்லாமல் நலமாகக் காலந்தள்ளுவேன். தவிர, கணக்குக்கு வேண்டிய திறமை எனக்குக்கிடையாது" என்று நான் பதில் கூறினேன்.

வீட்டுக் கணக்குகளைக் 'காப்பி' அடிப்பது எளிது. வகுப்பிலேயே கேள்வி கேட்டுவிட்டால் என்ன செய்வது? எந்தப் பையனாவது சொல்லிக்கொடுத்தால்தான் விமோசனம்! என் அதிர்ஷ்டம், என் வகுப்புப் பையன்கள் என்னைக் கைவிடவில்லை. கிளெப் இல்லாவிட்டால், எல்லாம் இனிது நடந்து வந்திருக்கும். மறைமுகமாகச் சொல்லிக்கொடுப்பதற்கு முடிவுகட்டப்போவதாக அவன் சபதம் செய்ததிலிருந்து, அதை எப்படிச் செய்து முடிப்பதென்று யோசித்துக்கொண்டிருந்தான். அவனுடைய புத்தி எப்படி வேலை செய்தது தெரியுமா? சுவரொட்டிப் பத்திரிகை நடத்தும் பையன்களிடம் சொல்லி என்னைப்பற்றி அர்த்தமில்லாத கேலிச்சித்திரம் ஒன்றை வரையச் செய்துவிட்டான். ஒருநாள் நான் பள்ளிக்கூடத்துக்கு வருகிறேன்; சுவரொட்டிப் பத்திரிகையில் கேலிச்சித்திரத்தின் பொருளாக என் உருவம் என்னை வரவேற்கிறது! கரும்பலகைக்கு அருகில் நான் நிற்கிறேன்; என் காதுகள் கழுதையின் காதுகளைப்போல பெரியதாக இருக்கின்றன. பையன்கள் மெதுவாக சொல்லிக் கொடுப்பதை கேட்பதற்காக காதுகளை நிமிர்த்திவைத்துக்கொண்டிருக்கிறேன். இவ்வாறு கேலிச்சித்திரத்தை வரைந்து, அதன் கீழே ஒரு செய்யுளையும் எழுதிவிட்டார்கள். இவ்வளவு கேவலமான செய்யுளை நீங்கள் கண்டிருக்கமாட்டீர்கள்.

"இயம்பிடும் மற்றவர் சொல்வதைக் கேட்டிட
இத்தனை நீளம் வளர்ந்தன காதுகள்;
இருப்பினும் தவறாய் விடையெலாம் தந்திடும்
இவனே வித்தியா—கழுதையே அன்று."

இது மாதிரி எழுதியிருந்தார்கள். எனக்கு வார்த்தைக்கு வார்த்தை நினைவு இல்லை. கேவலம்! இயல்பாகவே நான்





கோபாவேசம்கொண்டேன். பத்திரிகாசிரியர் குழுவில் ஜகார் சேரும்வரையில், பத்திரிகையில் ஒரு கேலிச்சித்திரம் கூட வந்ததில்லை; ஆகவே ஜகார்தான் அதைப்போட்டிருக்க வேண்டுமென்று ஊகித்தேன்.

ஜகாரிடம் சென்று "அந்தச் சித்திரத்தை அகற்றிவிடு. இல்லாவிட்டால் பிறகு நீ வருத்தப்படுவாய்" என்று கூறினேன்.

"நான் அதைச் செய்யமுடியாது. எனக்கு உரிமையில்லை. நான் சித்திரக்காரன். வரைந்துகொடுக்கச் சொன்னார்கள். வரைந்துகொடுத்தேன். அதைப் பத்திரிகையில் ஒட்டுவதோ வெட்டுவதோ என் வேலையல்ல."

"அது யாருடைய வேலை?"

"ஆசிரியருடையது. ஆசிரியர்தான் மேலதிகாரி."

ஆகவே நான் செர்யோஷாவிடம் சென்றேன்.

"இது உன் வேலையா? உன்னைக் கேலிசெய்துகொள்ளும் சித்திரங்களை சுவரொட்டிப் பத்திரிகையில் போடுவதில்லையே? என்னை ஏன் கேலிசெய்யவேண்டும்?"

"பைத்தியக்கார! என் இஷ்டப்படி நான் பத்திரிகை நடத்துகிறேனென்று நினைக்கிறாயா? அப்படியானால் ஆசிரியர் குழு எதற்கு? பத்திரிகையில் வரவேண்டியவற்றைப்பற்றி ஆசிரியர் குழுவில் கூட்டாக முடிவு செய்கிறோம். கிளெப் செய்யுளை எழுதினான்; கேலிச்சித்திரம் வரையச் சொன்னான். ஏனென்றால் வகுப்பிலே மறைமுகமாகச் சொல்லிக்கொடுப்பதற்கு ஒரு முடிவு காணவேண்டும் என்று பாலர் சங்க நிர்வாகக் குழுவிலேயே ஒரு முடிவு செய்தோம்."

நான் கிளெப்பைத் தேடிகொண்டு ஓடினேன். "அந்தச் சித்திரத்தை உடனே எடுத்துவிடு; இல்லாவிட்டால் உன்னைத் துவையல் செய்துவிடுவேன்" என்றேன்.

"துவையலா? அப்படியென்ருல்?" என்ருன், திடுக்கிட்டவனய்.

"உனக்குத் துவையல் பிடிக்காவிட்டால், உன்னை அரைத்துப் பொடி செய்துவிடுவேன்."

"அப்படியா? நீயும் வேறுயாரும்?" என்ருன் கிளெப்.

"சரி, நானே அந்த சித்திரத்தைப் பத்திரிகையிலிருந்து வெட்டிவிடுகிறேன்."

"அதைச் செய்ய உன்ஞல் முடியாது. ஏனென்ருல் சித்திரிக்கப்பட்டுள்ள விஷயம் உண்மையானது. அது உண்மையானதில்லையென்ருல்கூட நீ அதைப் பத்திரிகையிலிருந்து கிழித்தெரியமுடியாது. அதற்குப் பதில்தான் எழுதமுடியும்" என்று டோல்யா குறுக்கிட்டுக் கூறினுன்.

"பதிலா? சரி, சரி. நான் பதில் எழுதித்தருகிறேன்."

இதற்குள், வகுப்பு மாணவர்கள் அனைவரும் பத்திரிகையை சூழ்ந்துவிட்டார்கள். அவர்கள் கேலிச்சித்திரத்தைச் சுட்டிக்காட்டிச் சிரித்தார்கள், சிரித்தார்கள், அலுப்புத் தட்டும் அளவுக்குச் சிரித்தார்கள். ஆனுல் இத்துடன் விவகாரத்தைவிட மனமில்லை எனக்கு. பதிலை எழுதுவதற்கு உட்கார்ந்தேன், ஆனுல் ஓடவில்லை. பதில் எழுதுவது எப்படி என்று தெரியவில்லை. ஆகவே பாலர் சங்கத் தலைவனை வாலட்யாவிடம் சென்று முழுக்கதையும் சொல்லி பதில் எழுதுவது எப்படி என்றுகேட்டேன்.

"நீ என்ன செய்யவேண்டுமென்று சொல்கிறேன். புதிய அத்தியாயத்தைத் துவக்கப்போகிறேன், நல்ல மார்க்குகள் வாங்க முயற்சி எடுப்பேன், இனி யாரும் சொல்லிக்கொடுக்கத் தேவை இருக்காது, என்று எழுத்துமூலம் உறுதிகூறு. உன் கடிதத்தைச் சுவரொட்டிப் பத்திரிகையில் போடுவார்கள். கேலிச்சித்திரத்தை எடுத்துவிடச் சொல்கிறேன்" என்று வாலட்யா கூறினுர்.

அப்படியே நான் செய்தேன். சிரமப்பட்டுப் படிப்பே னென்றும் சொல்லிக்கொடுப்பதை நம்பியிருக்கமாட்டே னென்றும் உறுதிகூறிப் பத்திரிகைக்கு கடிதம் எழுதினேன்.

மறுநாள், கேலிச்சித்திரம் மறைந்துவிட்டது. பத்திரிகை யில் கண்கவர் இடத்தில் என் கடிதத்தை ஒட்டியிருந்தார்கள். நான் திருப்தியடைந்தேன். உண்மையில் என் பாடங்களைப் படிப்பதில் அதிக சிரமம் எடுக்கவேண்டுமென்று எண்ணி னேன். ஆனால் ஏதோ காரணத்தால் ஒத்திப் போட்டுக் கொண்டேயிருந்தேன். சில நாட்களில் எங்களுக்குக் கணக்குப் பரீட்சை இருந்தது. நான் இரண்டு 'மார்க்' வாங்கினேன். ஐந்து 'மார்க்' வாங்கினால் நல்ல 'மார்க்' என்று அர்த்தம்; இரண்டு 'மார்க்' வாங்கினால் மோசமானது என்று அர்த்தம். 2 மதிப்பெண் வாங்கினவன் நான் மட்டு மல்ல என்பது மெய். சாஷாவும் இரண்டுதான் வாங்கி யிருந்தான். நானும் அவனும் ஒன்றுபோல்தான். எங் களுடைய படிப்பு அறிக்கைகளில் இரண்டு மார்க் வாங்கி யிருப்பதைக் குறிப்பிட்டு, தாய் அல்லது தந்தையிடம் காட் டிக் கையொப்பம் வாங்கிவருமாறு ஆல்கா நிகோலிவ்னா கூறினாள்.

அன்று வீட்டுக்குத் திரும்பி வரும்பொழுது மிகவும் வேதனைப்பட்டேன். இந்த இரண்டு மார்க் பயங்கரத் திலிருந்து விமோசனம் பெறுவது எப்படி என்பதைப்பற்றி யோசித்து யோசித்து என் மூளை குழம்பியது. அம்மா என்னைக் கடிந்துகொள்ளாத வகையில், இந்தச் செய்தியை எப்படி இங்கிதமாகத் தெரிவிப்பது என்ற கவலை என்னை பிடுங்கித் தின்றது.

"மித்யா செய்தமாதிரி நீயும் செய்யவேண்டும்" என்றான் சிஷ்கின்.

"யார் அந்த மேதாவி மித்யா?"

"அவனா? நால்சிக் பள்ளிக்கூடத்தில் என் வகுப்பில் படித்தான்."

"சரி! அவன் என்ன செய்தான்?"

"அவனுக்கு 2 மார்க் வரும்பொழுதெல்லாம், அவன் வீட்டுக்குப்போய் விசனமே வடிவெடுத்தவனாக உட்கார்ந்து விடுவான். ஒரு வார்த்தை பேசமாட்டான். ஒருமணிநேரம் அல்லது இரண்டு மணிநேரம்கூட இவ்வாறு வாய்மூடி மௌனியாகத் துயரத்தின் செம்பொருளாக உட்கார்ந்திருப்பான். விளையாடுவதற்கோ வேறு வேலைக்கோ வெளியே போகமாட்டான். கடைசியில், அவன் தாயார் கவலைப்பட்டு, "உனக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்பாள்.

"ஒன்றுமில்லை" என்பான் அவன்.

"பின்னர் ஏன் வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறாய்?"

"எனக்குத் தெரியாது."

"பள்ளிக்கூடத்தில் ஏதாவது குறும்பு செய்தாயா?"

"இல்லை" என்பான் அவன்.

"யாரிடமாவது சண்டைபோட்டாயா?"

"இல்லை"

"ஏதாவது ஜன்னல்களை உடைத்தாயா?"

"இல்லை"

"வேறு என்ன விஷயம்? உன் நிலை விசித்திரமாயிருக்கிறதே!" என்பாள் அவன் தாயார்.

நேரத்தில் சாப்பிடமாட்டான்.

"நீ ஏன் சாப்பிடவில்லை?"

"எனக்கு ஒன்றுமே வேண்டாம்"

"ஏன்? பசி இல்லையா?"

"பசி இல்லைதான்"

"சரி. வெளியேபோய், நல்ல காற்று வாங்கிவிட்டுவா."

"எனக்குத் தேவையில்லே."

"பிறகு என்ன வேண்டும்? ஏதாவது நோய்க்கு இந்த வெறுப்பு அறிகுறியா?"

"இல்லே. என் உடல்நலத்துக்கு ஒரு குறைவுமில்லே."

அவன் தயாயார் அவன் நெற்றியைத் தொட்டுப் பார்ப்பாள். வெப்பமானியை வைத்துப் பார்ப்பாள்.

"இல்லே. உன் உஷ்ணநிலே சரியாகத்தான் இருக்கிறது."

"விஷயத்தைச் சொல்லு. என்னே பைத்தியமாக்காதே!"

"நான் கணக்கில் 2 மார்க் வாங்கினேன்."

"அப்பா! இதற்காகவா இவ்வளவு நடிப்பு?" என்று ஒரு பெருஞ்சுமை இறங்கிய தொனியில் தாயார் கூறுவாள்.

"ஊம்!"

"சரி! இனியாவது மடையன் மாதிரி நடிப்பதற்குப் பதிலாக பாடங்களே முறையாகப் படி."

அதற்குமேல் அம்மா அவனேத் திட்டமாட்டாள்.

"அதெல்லாம் சரி. முதல் தடவை இந்த வகையில் தப்பியிருக்கலாம். ஆனல் அடுத்த தடவை ஆரம்பத்திலேயே குட்டு உடைந்துவிடுமே!"

"அடுத்த தடவை அவன் வேறு யுக்தியைக் கண்டு பிடித்திருப்பான்!"

"அந்த மித்யா சாமர்த்தியசாலியாக இருக்க வேண்டும்."

"ஆம், அவன் கெட்டிக்காரன். எப்பொழுதும் 2 மார்க் தான் வாங்கினன்; ஆனல் ஒவ்வொரு தடவையும் ஏதாவது யுக்தி செய்து தப்பிவிடுவான்."

நான் மித்யா முறையை பரீட்சித்துப் பார்ப்பதென்று முடிவுசெய்தேன். வீட்டுக்குப் போனவுடன் ஒரு நாற்காலியில் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தேன். என்னால் முடிந்த அளவுக்குத் துக்கப்படுகிறவனாகக் காட்சியளித்தேன். அம்மா உடனே இதை கவனித்துவிட்டாள்.

"என்ன சேதி? 2 மார்க் வாங்கினாயா?" என்று என்னைக் கேட்டாள்.

உடனேயே உண்மையை ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தது. எத்தகைய 'பூஜை' எனக்குக் கிடைத்தது! அதை நான் விவரிக்கப் போவதில்லை; ஏனென்றால் அது சுவையாயிருக்காது.

மறுநாள், சிஷ்கினுக்கும் 2 மார்க் கிடைத்தது; அவன் ருஷிய மொழியில் 2 மார்க் வாங்கியிருந்தான். அவனுக்கும் வீட்டில் 'திருவிழா' நடந்தது. அதற்கு மறுநாள் சுவரொட்டிப் பத்திரிகையில் எங்கள் இருவரையும் பற்றி ஒரு கேலிச்சித்திரம் பிரசுரமாகியிருந்தது. தெருவிலே கால்களுடைய பல 2 வடிவங்கள் எங்களைத் துரத்திக்கொண்டு வருவதுமாதிரி "கார்டூனில்" சித்திரிக்கப்பட்டிருந்தது.

அதைப் பார்த்தவுடன் நான் ஆத்திரமடைந்தேன்.

"இதெல்லாம் என்ன? இந்த வேலையெல்லாம் எனக்குத் தெரியும்." என்று செர்யோஷாவிடம் சத்தம் போட்டேன்.

"ஏன் இப்படி அலட்டிக்கொள்கிறாய்? நீங்கள் இருவரும் 2 வாங்கியது மெய்யா பொய்யா?"

"நாங்கள் மாத்திரமா 2 வாங்கினோம்? சாஷாவும்தான் 2 வாங்கினான். அவனைப்பற்றி ஏன் கார்ட்டூன் போடவில்லை?"

"எனக்குத் தெரியாது. மூவரையும் கேலிசெய்யும் வகையில் சித்திரம் எழுதும்படியே நாங்கள் ஐகாரிடம் கூறி

னும். ஏதோ காரணத்தால், அவன் இருவரைமட்டும் வரைந்திருக்கிறுன்.''

''நான் மூவரையுமே போடுவதாகத்தான் இருந்தேன்; ஆனல் போதுமான இடமில்லை. ஆகவே இருவரைமட்டும் வரைந்தேன். அடுத்த தடவை சாஷாவை வரைந்துவிடு கிறேன்'' என்று ஜகார் விளக்கினுன்.

''எனக்குக் கவலையில்லை. இதை நான் சகித்துக்கொண் டிருக்க முடியாது. பதில் எழுதப்போகிறேன்'' என்றேன் நான்.

''வா, பதில் எழுதுவோம்'' என்று சிஷ்கினை அழைத் தேன்.

''என்ன பதில்?''

''பதில் எழுதுவது மிகவும் எளிது. முயன்று படித்து நல்ல மார்க் வாங்குவேனென்று வாக்களிக்க வேண்டியது தான். போன தடவை, அப்படித்தான் வாலட்யா எனக்குப் போதித்தார்.''

''பலே! பலே! நீ எழுது. நான் உன் பதிலைப்பார்த்துப் பிரதி செய்துகொள்கிறேன்'' என்றுன் சிஷ்கின்.

பாடுபட்டுப் படிப்பேன், எதிர்காலத்தில் நல்ல மார்க் வாங்குவேன் என்று உறுதியாகத் தெரிவிக்கும் பதிலை நான் எழுதினேன். சிஷ்கின் அதைப் பிரதி செய்துகொண்ட துடன், 4க்கு குறைவில்லாமல் மார்க் வாங்குவதாகவும் ஒரு வாக்குறுதியைச் சேர்த்துக்கொண்டான். ''அது மேலும் ஆதரவான கருத்தை உண்டாக்கும்'' என்று அதற்கு என் னிடம் விளக்கம் தந்தான்.

இரண்டு பதில்களையும் செர்யோஷாவிடம் கொடுத் தோம்.

''இப்பொழுது அந்தக் கேலிச்சித்திரத்தை அகற்றிவிட லாம். எங்களுடைய அறிக்கைகளை நல்ல இடத்தில் ஒட்டி விடு'' என்று நான் கூறினேன்.

"சரி" என்றான் அவன்.

ஆனல் மறுநாள் நாங்கள் பள்ளிக்கூடத்துக்கு வரும் பொழுது, கார்ட்டூன் அதன் இடத்தைவிட்டு நகரவில்லை; எங்கள் அறிக்கைகளும் பிரசுரமாகவில்லை. ஆகவே நான் செர்யோஷாவிடம் சென்று காரணம் கேட்டேன்.

"ஆசிரியர் குழுவில் உங்களுடைய உறுதிமொழிக் கடிதங்களை விவாதித்தோம். அவற்றைப் பிரசுரிப்பதில்லை என்று தீர்மானித்தோம். ஏனென்றால் முன்னொரு தடவை இதேமாதிரி உறுதிகொடுத்துவிட்டு, முன்னேற்றம் காட்டு வதற்கு பதிலாகக் குறைந்த மார்க் வாங்கியிருக்கிறாய்!" என்று செர்யோஷா கூறினன்.

"அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. உங்களுக்கு விருப்பமில்லாவிட்டால் என் அறிக்கையைப் பிரசுரிக்க வேண்டாம். ஆனல் அந்தக் கேலிச்சித்திரத்தை எடுத்து விடவேண்டும்" என்று நான் வற்புறுத்தினேன்.

"நாங்கள் அப்படி செய்யத் தேவையில்லை. நிறைவேற் றும் நோக்கம் இல்லாமல், வாக்குறுதிகளைக் கொடுக்கலா மென்று நீ நினைத்தால், அது நடக்காது" என்று அவன் கூறினன்.

இந்தச் சமயத்தில் சிஷ்கின், "நான் இதற்குமுன் வாக் குறுதி அளிக்கவில்லை. என் அறிக்கையை ஏன் போட வில்லை" என்று கேட்டான்.

"அடுத்த இதழில் அதைப் பிரசுரிப்போம்."

"அதுவரை என்னைக் கேலிசெய்யும் படம் தொங்குமா!"

"ஆம்."

"நான் அதைப் பொருட்படுத்துகிறேனு என்று பார்" என்றான் சிஷ்கின்.

நான் அத்துடன் விட்டுவிடத் தயாராயில்லை. பாடம் முடிந்ததும், வாலெட்யாவிடம் சென்று கதை முழுவதையும் சொன்னேன்.

"நான் பையன்களிடம் பேசுகிறேன். அடுத்த இதழைச் சீக்கிரம் வெளியிடச் சொல்கிறேன். அதில் உங்களுடைய அறிக்கைகளையும் வெளியிடச் சொல்கிறேன். மார்க்பற்றி நாம் சீக்கிரம் ஒரு கூட்டம் நடத்தப்போகிறோம்; உங்களுடைய அறிக்கைகள் நல்ல நேரத்தில் வந்திருப்பதால் பயன்படும்."

"ஆனால் இப்பொழுதே அந்தக் கேலிச்சித்திரத்தை எடுத்துவிட்டு, அந்த இடத்தில் அறிக்கைகளைப் போடக் கூடாதா?"

"கூடாது. அப்படிச் செய்வதில்லை"

"போன தடவை எப்படிச் செய்தார்கள்?"

"சிரமம் எடுத்து படிக்கப்போவதாக நீ போன தடவை கூறியபொழுது, உண்மையில் அதன்படி நடப்பாய் என்று அவர்கள் நினைத்தார்கள். ஆகவே உனக்கு விதிவிலக்கு அளித்தார்கள். ஆனால் ஒவ்வொரு தடவையும் சுவரொட்டித் தாளை வெட்டிக்கொண்டிருக்க முடியாது. இந்தப் பத்திரிகை இதழ்களை தொகுத்துப் பத்திரப்படுத்தி வைக்கிறோம். வகுப்பின் பணியையும் பையன்களின் வளர்ச்சியையும் பற்றிப் பதிவேடு மாதிரி இவை பயன்படும். உங்களில் சிலர் புதிய யுக்திகளைக் கண்டுபிடிக்கும் பிரபல வல்லுநராகலாம், கைதேர்ந்த விமானிகளாகலாம் அல்லது விஞ்ஞானிகளாகலாம், யார் கண்டார்கள்? அவர்கள் பள்ளியில் எப்படிப் படித்தார்கள் என்பதை பழைய வகுப்புக்குப் பத்திரிகைகள் எடுத்துக் காட்டும்."

இதைக்கேட்டு நான் ஆவேசமடையவில்லை. நான் பெரியவனாகும்பொழுது, விமானியாகவோ ஆராய்ச்சியாளனாகவோ பெயரும் புகழும் அடையவேண்டுமென்று முன்பே தீர்மானித்துவிட்டேன். யாராவது என் வகுப்புப் பத்திரிகைகளை புரட்டிப் பார்த்துவிட்டு, "வித்யா ஸ்கூலில் படித்தபொழுது 2 மார்க் வாங்கினான்" என்று பகிரங்கப்படுத்தினால் எப்படியிருக்கும் என்று கற்பனைசெய்தேன்!

அதற்குமேல் நான் வாலட்யாவிடம் விவாதிக்கவில்லை. ஆனால் அவர் என்னிடம் கூறிய விஷயம் என்னைச் சோர்வடையச் செய்துவிட்டது. அதைப்பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க வெறுப்பு அதிகமாயிற்று. கொஞ்சநேரத்திற்குப் பிறகு, "நான் பெரியவனாவதற்குள் பத்திரிகை எங்காவது காணமற் போய்விடும்; என் அபகீர்த்தி ஒருபொழுதும் பகிரங்கமாகாது" என்ற எண்ணம் தோன்றியது. அதன்பின், ஓரளவுக்குச் சோர்வு நீங்கியது.

# 5. 'மார்க்' விவாதம்

ஒருவாரம் முழுமையும் அந்தக் கேலிச்சித்திரம் சுவரில் தொங்கியது. கூட்டம் நடப்பதற்கு முதல் நாள் புதிய இதழ் வெளியாகும்வரை அந்தப் படத்தை எடுக்கவில்லே. புதிய இதழில் கேலிச்சித்திரம் கிடையாது; நானும் சிஷ்கினும் எழுதிக்கொடுத்த அறிக்கைகள் அதில் இடம் பெற்றிருந்தன. வேறு சில விஷயங்களும் இருந்தன; ஆனல் அவற்றைப் பற்றி எனக்கு இப்பொழுது நினைவு இல்லே.

வகுப்பில் ஒவ்வொரு பையனும் அடைந்துள்ள முன் னேற்றத்தை விவாதிப்பதற்காகக் கூடவிருக்கும் கூட்டத் துக்குத் தயாராகும்படி வாலட்யா எங்களிடம் கூறியிருந் தார். இடைவேளேயில், எங்கள் பாலர் சங்கக் குழுவுக்குத் தலேவனுன யுரா, எங்களேக் கூட்டி, விவாதிக்கும்படி கேட்டுக்கொண்டான். விவாதிப்பதற்கு விஷயம் அதிகமா யில்லே. சிஷ்கினும் நானும் சீக்கிரத்தில் நல்ல மார்க் வாங்க வேண்டுமென்று ஒவ்வொருவரும் கூறினுர்கள்.

நாங்களும் ஒப்புக்கொண்டோம். எங்களுக்கும் 2 மார்க்கு வாங்குவதில் ஆசை இல்லே. அடுத்த நாள் வகுப்புக் கூட்டம் நடந்தது.

வகுப்பு எவ்வாறு முன்னேறுகிறது, நாங்கள் எப்படி மார்க் வாங்குகிருேம், நாங்கள் ஒவ்வொருவரும் எந்த எந்தப் பாடங்களில் சிறப்பாகக் கவனம் செலுத்தவேண்டும் என்பன வற்றைப்பற்றி ஆல்கா நிகோலிவ்னு எடுத்துக் கூறினுள். 2 மார்க் வாங்கிய எங்களுக்கு வசவு கிடைத்தது. 3 வாங் கியவர்களுக்கும் திட்டு கிடைத்தது, ஏனென்ருல் 3 வாங்கும் பையன்கள், அவர்களுக்கே தெரியாமல் 2 வாங்கத் தொடங்கு வது சாத்தியம். கட்டுப்பாடு இல்லேயென்றும், பாடம் நடக் கும்பொழுது பேசிக்கொண்டிருக்கிருேமென்றும் ஒருவரைக்

கேள்விகேட்டால், மற்ற பையன்கள் மறைமுகமாகச் சொல்லிக் கொடுக்கிருரேமென்றும் ஆல்கா நிகோலிவ்ன எடுத்துக் காட்டினுள்.

இதற்குப்பின், எங்களுக்குப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்தது. ''எங்களுக்கு'' என்று சொல்கிறேன்; ஆனுல் உண்மையில் நான் ஒரு சொல் பேசவில்லை. 2 மார்க் வாங்கியவன் எழுந்து நின்று பேச முற்படுவது கோமாளித்தனமல்லவா? ஆகவே மௌனம் சாதித்தேன்; மற்றவர்கள் பேசட்டும் என்றிருந்தேன்.

முதலில் கிளெப் பேசினுன். பையனுக்குப் பையன் மறைமுகமாகச் சொல்லிக் கொடுப்பதே அவன் மனதில் ஆதிக்கம் வகிக்கிறது. எல்லோரும் சொல்லிக் கொடுக்கும் வழக்கத்தை நிறுத்திஞல், கட்டுப்பாடு வளருமென்றும், மற்றவர்கள் பதில்களை மெல்லிய குரலில் சொல்லிக் கொடுப்பார்களென்ற நம்பிக்கை ஒருவருக்கும் இருக்காதென்றும் கிளெப் கூறினுன். எவரும் பதிலைச் சொல்லிக் கொடுக்காவிட்டால், ஒவ்வொருவரும் தனக்குத் தானே சிந்திக்கவேண்டியதாகுமென்று அவன் வாதித்தான்.

''இனிமேல் நான் வேண்டுமென்றே தவருன பதில்களை முணங்கப்போகிறேன். அப்பொழுதுதான் இந்த இரகசிய போதனையில் நம்பிக்கை வைப்பவர்களுக்குப் புத்திவரும்'' என்ருன் கிளெப்.

''இது தோழமையில்லாத முறை'' என்று வாஸ்யா கூறினுன்.

''இரகசிய போதனை தோழமையுள்ள முறையா?'' என்று கிளெப் கேட்டான்.

''இல்லை. இரகசியமாக பதிலைச் சொல்லிக் கொடுப்பதும் தோழமையற்றது; தீங்கு விளைவிப்பது. புரியாத தோழர்களுக்கு விஷயத்தை விளக்கி விளங்கச் செய்யவேண்டும்'' என்ருன் வாஸ்யா.

"இதைத்தான் நாம் சொல்லிவந்திருக்கிறோம். ஆனால் முணு முணுத்தல் நிற்கவில்லை."

"அவர்கள் யார் யாரென்று பகிரங்கப் படுத்தவேண்டும். அது ஒன்றுதான் வழி."

"எப்படி பகிரங்கப் படுத்துவது?"

"அவர்களைப்பற்றி சுவரொட்டிப் பத்திரிகையில் எழுதுவதின் மூலமாக."

"அது சரி! முணு முணுத்தலுக்கு எதிராகப் பத்திரிகையில் இயக்கம் நடத்துவோம்" என்று கிளெப் உரக்கக் கூவினான்.

அதற்குப் பிறகு, முதல் இரண்டு பாலர் சங்கக் குழுக்களின் தலைவர்கள் பேசினார்கள். வகுப்பின் நன் மதிப்புக்காகப் போராடுவோமென்றும், அதிக மார்க்குகளை வாங்குவதற்கு முயல்வோமென்றும் அவர்கள் கூறினார்கள்.

பிறகு, ஆல்கா நிகோலிவ்னா பேசினாள். நாங்கள் முறையாகப் படிக்க விரும்பினால், கால அட்டவணை வைத்துக்கொள்ளவேண்டுமென்று அவள் கூறினாள். நேரத்தில் படுக்க வேண்டுமென்றும் அதிகாலையில் எழுந்திருக்கவேண்டுமென்றும் கூறினாள். காலையில் எழுந்தவுடன் தேகப்பயிற்சி செய்யவேண்டும். நல்ல காற்றைச் சுவாசிக்கவேண்டும். பள்ளிக்கூடம் முடிந்தவுடன் பாடம் படிக்கக் கூடாது. ஒரு மணி அல்லது இரண்டு மணி ஓய்வு எடுத்த பிறகே படிக்க வேண்டும். (இதையே நான் ஷிக்காவிடம் எப்பொழுதும் கூறிவந்திருக்கிறேன்!) ஆனால் வீட்டுப் பாடத்தைப் பகலிலேயே படித்துவிடவேண்டுமென்றும் அவள் கூறினாள். (எங்களுக்கு முற்பகலில் மட்டுமே பாடங்கள் உண்டு.) "இரவில் நேரஞ் சென்றபின், மூளை களைப்படைந்து, சரியாக யோசனை செய்யமுடியாதபொழுது, பாடங்களைப் படிப்பதும் எழுதுவதும் தீங்கு விளைவிக்குமாதலால் பகலிலேயே வீட்டு வேலையை செய்துவிடவேண்டும். பாடங்களை எழுதிப்

படிக்கும்பொழுது, மிகவும் கடினமான பாடத்துடன் ஆரம்பிக்கவேண்டும்; மிகவும் சுலபமான பாடத்தைக் கடைசியில் பயிலவேண்டும்'' என்ருள்.

''ஆல்கா நிகோலிவ்னு, பள்ளி முடிந்தவுடன் ஒரு மணி அல்லது இரண்டு மணி ஓய்வு எடுக்கவேண்டுமென்கிறீர்களே, எப்படி ஓய்வு எடுப்பது? எனக்கு ஒன்றும் செய்யாமல் சும்மாயிருக்க முடியாது. அமைதியாக அமர்ந்திருந்தால் உற்சாகம் குன்றும், சோர்வாய் இருக்கும்'' என்று ஸ்லாவா கூறினுன்.

''கைகளைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதே ஓய்வு என்பது தவறு, வெளியேசென்று நடப்பதும் விளையாடுவதும்கூட ஓய்வு எடுப்பதுதான்.''

''கால்பந்து விளையாடலாமா?'' என்று நான் கேட்டேன்.

''விளையாடலாம். கால்பந்தாட்டம் இளைப்பாறுவதற்கு ஏற்றது. ஆனுல் நாள் முழுவதும் ஆடிக்கொண்டிருக்கக் கூடாது. ஒரு மணி நேரம் ஆடினுல்போதும்; படிப்பதற்குத் தேவையான தெளிவைப் பெற்றுவிடலாம்.''

''மழைக்காலம் நெருங்கிவிட்டது. கால்பந்து மைதானம் சகதியாகிவிடும். அப்புறம் விளையாடமுடியாது'' என்ருன் சிஷ்கின்.

''அது சரி. நாம் சீக்கிரத்தில் ஒரு உடற்பயிற்சிசாலை தொடங்கிவிடுவோம். அப்பொழுது, கார் காலத்தில் கூடைப் பந்து ஆடமுடியும்'' என்று வாலட்யா கூறினுர்.

''கூடைப்பந்து! பலே! பலே! நான் குழுத் தலைவனுயிருப்பேன். நான் கூடைப்பந்துக் குழுவுக்குத் தலைவனுக இருந்திருக்கிறேன். உண்மையாகச் சொல்கிறேன். இது புகழ்ச்சி இல்லை'' என்று சிஷ்கின் உற்சாகமேலீட்டால் உரக்கக்கத்தினுன்.

"முதலில் உன் ருஷியப் பாடத்தைப் பார்த்துக்கொள்" என்றார் வாலட்யா.

"ருஷியப் பாடம்! நிச்சயமாக அதைச் சரியாக பயின்று விடுவேன்" என்றான் சிஷ்கின்.

அத்துடன் கூட்டம் முடிந்தது. எல்லோரும் கலைந்து போய்விட்டார்கள்; எங்கள் குழு மட்டும் தங்கியிருந்தது.

"நீங்கள் நன்றாக நடந்துகொண்டீர்கள்" என்று வாலட்யா கூறினார்.

"எப்படி?" என்று நாங்கள் கேட்டோம்.

"இனி 2 வாங்கமாட்டோம் என்று உங்கள் குழு உறுதி கூறிற்று. 4-க்குக் குறைவில்லாமல் வாங்குவோமென்று மற்ற குழுக்கள் வாக்களித்தன."

"மற்றவர்களைக் காட்டிலும் நாம் மோசமாயிருப்பதேன் என்று எனக்குப் புரியவில்லை. அவர்கள் 4க்கு குறையாமல் வாங்க முடிந்தால் நாம் ஏன் வாங்கமுடியாது?" என்று லோன்யா கேட்டான்.

"அவர்கள் மேம்பட்டவர்கள் என்று சொன்னவர் யார்?" என்று வான்யா கேட்டான்.

"நாம் விழிப்பாயிருக்கவேண்டும். நான் 4-க்குக் குறையாமல் வாங்குவேன். இது உறுதி" என்று வாஸ்யா கூறினான்.

"அவன் சொல்வது சரி. நமது குழு மோசமல்ல. நானும் பின் தங்கப்போவதில்லை. நீங்களே பார்ப்பீர்கள். இது வரை நான் முறையாக முயற்சி செய்யவில்லை. இனி முயற்சி செய்யத் தொடங்குவேன்" என்றேன் நான்.

"ஆம். நீ தொடங்கிவிட்டால்போதும். நல்ல மார்க் வாங்குவாய்; கடந்த காலத்தை எண்ணி வருத்தப்படுவாய்" என்றான் சிஷ்கின்.

"நீ என்ன சொல்கிறாய்? உனக்கு நல்ல மார்க் வாங்க விருப்பமா?" என்று வாலட்யா சிஷ்கினைக் கேட்டார்.

"நான் எல்லாப் பாடங்களிலும் 4 வாங்கமுடியாது. ருஷிய மொழியில் 3 தான் முடியும்" என்ருன் சிஷ்கின்.

"இதைக்கேள்! வகுப்பு முழுவதும் சிரமப்பட்டு படித்து நல்ல மார்க் வாங்குவதற்கு முன் வரும்பொழுது; இவன்; விதிக்கு விலக்காக நிற்கிருன்! நல்ல பையன்" என்ருன் யுரா.

"செய்ய முடியாததைச் செய்வேனென்று சொல்ல முடியுமா? என் வாழ்க்கையிலேயே ஒரு தடவைகூட ருஷிய மொழியில் 3-க்கு மேல் வாங்கியதில்லே; இனி வாங்க முடியு மென்று எதிர்பார்க்கவுமில்லே. 3-ல் என்ன கெடுதல்?"

"சிஷ்கின், இங்கே பார்! பிடிவாதம் செய்யாதே. எல்லாப் பாடங்களிலும் 4-க்கு குறையாமல் மார்க் வாங்குவே னென்று அறிக்கை எழுதித் தரவில்லேயா?" என்று வாலட்யா கேட்டார்.

"எப்பொழுது?"

"அதோ பார்!" என்று வாலட்யா சுவரொட்டிப் பத்தி ரிகையை சுட்டிக் காட்டினுர்.

"ஆம்! அதை மறந்துவிட்டேன்" என்ருன் சிஷ்கின்.

"இப்பொழுது என்ன சொல்கிருய்?"

"வேறு வழியில்லே. 4 மார்க் வாங்குவேனென்ற வாக் குறுதியைக் காப்பாற்றியாகவேண்டும்" என்ருன் சிஷ்கின்.

"நன்று, சிஷ்கின்! அவன் நம்மைக் கைவிடவில்லே. வகுப்பின் நன்மதிப்புக்காக நாம் அனேவரும் பாடுபடுவோம்" என்று எல்லோரும் முழங்கினுர்கள்.

ஆனுல் சிஷ்கினுக்கு உற்சாகமில்லே. உண்மையில் அவன் மனமிடிந்து போயிருந்ததால், வீட்டுக்குப் போகும் வழியில் என்னிடம் பேசவேயில்லே. சுவரொட்டிப் பத்தி ரிகைக்கு அந்த அறிக்கையை எழுதும்படி அவனேத் தூண் டியதற்காக, அவனுக்கு என்னிடம் வருத்தம்.

## 6. சபலமும் சதுரங்கமும்

சிஷ்கின் என்ன தீர்மானித்தானே எனக்குத் தெரியாது; ஆனால் நான் உடனடியாகப் புதிய அத்தியாத்தைத் துவக்குவதென்று தீர்மானித்தேன். முக்கியமான தேவை, கால அட்டவணையாகும். சீக்கிரமாகப் படுத்துவிடுவேன்; ஆல்கா நிகோலிவ்னு கூறிய மாதிரிப் பத்து மணிக்கெல்லாம் படுக்கையில் இருப்பேன். அதிகாலையில் எழுந்துவிடுவேன்; பள்ளிக்குப்போவதற்கு முன் என் பாடங்களை மறுமுறை பார்த்துவிடுவேன். பள்ளிக்கூடம் முடிந்தவுடன் சுமார் 1½ மணி நேரம் கால்பந்து ஆடிக்களைப்பாறிய பிறகு என் வீட்டு வேலையைச் செய்வேன். வீட்டுப் பாடங்களைப் பயின்றபின், என் இஷ்டப்படி பொழுதைக் கழிப்பேன்—பையன்களுடன் விளையாடுவேன் அல்லது தூங்குவதற்கு நேரமாகும்வரையில் புத்தகத்தைப் படிப்பேன்.

இவ்வாறு நான் நேர்த்தியான திட்டத்தை வகுத்தேன். வீட்டுப் பாடங்களை எழுதிப் படிப்பதற்கு முன் கால்பந்தாடுவதற்குச் சென்றேன். 1½ மணி அல்லது 2 மணி நேரத்துக்கு மேல் கால்பந்தாடுவதில்லையென்று முடிவுசெய்திருந்தேன். ஆனால் பந்தாடத் தொடங்கியவுடன் வைராக்கியமெல்லாம் பறந்துபோய்விட்டது; மீண்டும் அது நினைவுக்கு வரும் பொழுது, பகல்பொழுது கழிந்து, இருண்டுவிட்டது. ஆகவே வீட்டுப் பாடத்துக்கு உட்காரும்பொழுது, நேரமாகிவிட்டது; மூளை சரியாக வேலைசெய்யவில்லை. மறுநாள் அதிகநேரம் விளையாடக் கூடாதென்று மீண்டும் சபதம் செய்துகொண்டேன். ஆனால் மறுநாளும் முன்னாள் மாதிரியே முடிந்தது. “இன்னும் ஒரு கோல் போட்டுவிட்டு வீட்டுக்குப்போகலாம்” என்று ஆடும்பொழுது சொல்லிக்கொண்டேயிருந்தேன். ஆனால் ஒவ்வொரு கோல் போடும்பொழுதும் அடுத்த கோல் போடும்வரை ஆடத்தீர்மானித்தேன். மீண்டும் இருள் சூழும் வரை, இம்மாதிரிச் செய்தேன்.

இந்தத் தடவை என்னை நானே நொந்துகொண்டேன். இம்மாதிரி இனி நடக்கக் கூடாதென்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். நான் ஏன் என் முடிவுகளை நிறைவேற்று வதில்லை என்று ஆத்ம சோதனை செய்துபார்க்க முயன்றேன். எனக்கு வைராக்கியம் இல்லை என்ற முடிவுக்குவந்தேன். எனக்குச் சித்தம் இருப்பது மெய்; ஆனால் அது உறுதியான தல்ல. ஆகவே செய்யவேண்டியதைச் செய்வதற்கும் செய் யக்கூடாததை செய்யாமலிருப்பதற்கும் என்னால் ஒருபொழு தும் முடியவில்லை. உதாரணமாக ஒரு சுவையான புத்த கத்தைப் படிக்கத் தொடங்கினால், என்னால் அதை முடிக்கா மல் கீழேவைக்கமுடியாது. என் வீட்டுப் பாடங்களை எழுதிப் படிக்கவேண்டியிருக்கும் அல்லது படுப்பதற்கு நேரமாகியிருக் கும்; ஆனால் அந்தப் புத்தகத்தை படித்துக்கொண்டிருப் பேன். "படுக்கப்போ" என்று அம்மா உத்திரவிடுவாள்; அப்பா அதை ஆமோதிப்பார்; ஆனால் அவர்கள் விளக்கை அணைக்கும்வரை நகரமாட்டேன். அதேபோலத்தான் பந் தாட்டமும்; ஆட்டத்தை நிறுத்துவதற்கு முடிவதில்லை. சபல சித்தம்! இதுதான் நோய்.

இவ்வாறு யோசித்து முடிவுசெய்தபின், நான் என்னைப் பற்றியே ஆச்சரியமடைந்தேன். சபலமோ ஊசலாட்டமோ இல்லாதவன், உறுதிமிகுந்தவன், உருக்குக் குணமுள்ளவன் என்றெல்லாம் என்னைப்பற்றி எப்பொழுதும் கற்பனை செய்து வந்திருந்தேன். ஆனால் நான் சிஷ்கின் மாதிரி முதுகெலும்பு இல்லாதவனாக இருக்கிறேன். உறுதியுள்ளவனாவதற்கு முயலுவதென்று முடிவுசெய்தேன். இதை எப்படிச்செய்வது? விருப்பமில்லாத காரியங்களைச் செய்வது; விருப்பமான வற்றைச் செய்யாமலிருப்பது, உதாரணமாகக் காலையில் உடற்பயிற்சி செய்வதென்றால் எனக்குப் பிடிக்காது; ஆகவே இனிமேல் முறையாகக் காலை நேரத்தில் தேகாப்பியாசம் செய்வதென்று தீர்மானித்தேன். நான் கால்பந்தாட விரும் பும்பொழுது, வீட்டைவிட்டு நகரமாட்டேன். சுவையான புத்தகத்தைப்படிக்க விரும்பினால், வேறு எதையாவது

செய்வேன். இவ்வாறு உடனே ஆரம்பிப்பதென்று முடிவு செய்தேன்.

அன்றுதான் அம்மா எனக்குப் பிடித்தமான தின்பண்டத்தைச் செய்து 'டீ' யுடன் பரிமாறினாள். இது என் துரதிஷ்டமல்லவா? அதைப் புசிக்கவேண்டுமென்ற பேரார்வத்தை அடக்குவதென்று தீர்மானித்தேன். கொஞ்சம் ரொட்டி தின்றுவிட்டு 'டீ' குடித்தேன். தின்பண்டம் தட்டிலேயே இருந்தது.

"நீ ஏன் அந்தத் தின்பண்டத்தைச் சாப்பிடவில்லை?" என்று அம்மா கேட்டாள்.

"நானை மறுநாள்வரை அதைச் சாப்பிடமாட்டேன். இரண்டு நாட்களானவுடன் அதைச் சாப்பிடுவேன்."

அம்மாவுக்கு கவலை. "வயிற்றுவலியா?" என்று கேட்டாள்.

"இல்லை. ஒரு வலியுமில்லை. என் வைராக்கியத்தைச் சோதிக்க விரும்புகிறேன். இதை இரண்டு நாட்கள் சாப்பிடாமலிருந்தால் எனக்கு நெஞ்சுரம் இருக்கிறதென்று பொருள்."

"முன்னலேயே சாப்பிட்டுவிட்டால்?" இது லிக்காவின் கேள்வி.

"என்ன கேள்வி! அப்படிச்செய்தால், எனக்கு உறுதியில்லை, நான் சபலக்காரன் என்று அர்த்தம்."

"உன்னல் இரண்டு நாட்கள் தாக்குப்பிடிக்க முடியாதென்று நினைக்கிறேன்" என்ருள் லிக்கா.

"பார்ப்போம்" என்று பதிலளித்தேன்.

அடுத்தநாள் காலையில் எழுந்து தேகாப்பியாசம் செய்தேன். எனக்கு உடற்பயிற்சி மீது வெறுப்பிருந்த போதிலும் அதைச் செய்தேன். பிறகு, குளிர்ந்த நீரால் முகத்தைக்

கழுவிக்கொண்டேன். இதுவும் எனக்குப் பிடிக்காத காரியம் தான். பிறகு காலே உணவை முடித்துக்கொண்டு பள்ளிக் கூடம் போனேன். என் தின்பண்டம் மேஜையின்மீது கிடந் தது. வீட்டுக்குத் திரும்பி வந்தபொழுதும் அது அங்கேயே யிருந்தது. கெட்டுவிடாமலிருப்பதற்காக, அம்மா அதை மூடி வைத்திருந்தாள். நான் அதைத் திறந்து பார்த்தேன்; கொஞ்சமும் கெடவில்லே. அதை எடுத்து விழுங்க வேண்டு மென்ற வேட்கையைத் தணிப்பது கடினமாயிருந்தது. ஆனால் அந்த ஆசையை எதிர்த்துப் போராடினேன்.

அன்று கால்பந்தாடுவதில்லே என்று தீர்மானம் செய்து கொண்டேன். சுமார் ஒரு மணி நேரம் ஓய்வு எடுத்துவிட்டு பாடங்களைப் படிப்பதென்று முடிவுசெய்தேன். ஆகவே பகல் உணவு முடிந்தவுடன் ஓய்வெடுக்கத் தொடங்கினேன். ஆனால் ஓய்வெடுப்பது எபபடி? கட்டை விரலேக் கடித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதா? நல்ல ஓய்வு வேண்டுமென்றால் ஏதாவது பிடித்தமானதாக ஆட வேண்டும். என்ன செய்வது? என்ன ஆட்டம் ஆடுவது? ஒருகோல் கால்பந்தாடினால் என்ன?

யோசித்து முடிப்பதற்குள், கால்கள் விரைந்தன. தின் பண்டம் தட்டிலேயே கிடந்தது.

வீதியில் நடக்கும்பொழுது, என்னே நானே தடுத்து நிறுத்தினேன். "நில்! நீ என்ன செய்கிறாய்? கால்பந்தாடப் போகிறாயா? அதைத்தான் நீ செய்யக்கூடாது. கால்பந் தாடக்கூடாதென்று உறுதிசெய்துவிட்டு, விளையாடப் போவது வைராக்கியத்தைக் காட்டுமா?" நான் வந்த வழியே திரும்பத் துணிந்தேன்; ஆனால் உடனே வேறு யோசனே உதித்தது: "மைதானத்துக்குப்போய், பையன் கள் ஆடுவதைப் பார்க்கலாம். நான் ஆடமாட்டேன்."

மைதானத்தை அடைந்தபொழுது, ஆட்டம் முழு வேத்தில் நடந்துகொண்டிருந்தது. சிஷ்கின் என்னேக் கண்டவுடன் கூச்சலிட்டான்: "எதற்காகக் காத்துக்

கொண்டிருக்கிருய்? அவர்கள் முன்பே பத்து கோல்கள் போட்டுவிட்டார்கள். வந்து உதவி செய்!''

நானே உணர்வதற்குமுன், மைதானத்தில் பந்தைத் துரத்தியடித்துக்கொண்டிருந்தேன்.

ஆம். மீண்டும் காலம் தாழ்ந்தே வீட்டுக்குத் திரும்பினேன்.

அன்றைய நிகழ்ச்சிகளைச் சீர்தூக்கிப் பார்த்தேன். ''நான் எவ்வளவு உறுதியற்றவன்! நன்ருகத் தொடங்கிய நாளை இந்த ஆட்டம் கெடுத்துவிட்டதே!''

வீட்டை அடைந்ததும், தட்டில் தின்பண்டம் இருப்பதைக்கண்டேன்; அதை எடுத்து உண்டேன்.

''இதை இனிமேல் தின்ருல் என்ன நஷ்டம்? எனக்குத் தான் வைராக்கியம் இல்லையே!'' என்று எண்ணமிட்டேன்.

லிக்கா உள்ளே வந்தாள்; தட்டு காலியாக இருப்பதைப் பார்த்தாள்.

''கடைசியில், தாக்குப் பிடிக்க முடியவில்லையா?'' என்ருள்.

அவள் எதைப்பற்றி பேசுகிருளென்பதை அறியாதவன் மாதிரி பாசாங்கு செய்தேன்.

''உன் தின்பண்டத்தைத் தின்ருயல்லவா?''

''தின்ருல் என்ன? அது என்னுடையது, நான் சாப்பிட்டேன்; உன்னுடையதல்ல.''

''ஏன் இப்படி ஆத்திரப்படுகிருய்? நான் அப்படியெல்லாம் சொல்லவில்லை. நீ இதுவரை தாக்குப் பிடித்ததே எனக்கு வியப்பாயிருக்கிறது. உண்மையில் நீ வைராக்கியமுள்ளவன். என்னுல் ஒருபொழுதும் இப்படிச் செய்ய முடியாது.''

''ஏன் அப்படி நினைக்கிருய்?''

"என்னால் முடியாது; எனக்குத் தெரியும். உண்மையில், இனிமேலும் நீ அதைத் தட்டிலேயே வைத்திருந்தால், நானே அதை எடுத்துத் தின்றிருப்பேன்."

"அப்போ, எனக்கு உறுதி இருப்பதாக நீ நினைக்கிறாயா?"

"நிச்சயம்."

இதற்குப் பிறகு, எனக்குக் கொஞ்சம் ஆறுதல். அன்று தவறிவிட்டபோதிலும், மறுநாள் வெற்றிக்காகப் பாடுபடத் தீர்மானித்தேன். சீதோஷ்ண நிலை சரியாக இருந்திருந்தால் வெற்றியடைந்திருப்பேனோவென்று எனக்குத் தெரியாது. ஆனால் என் அதிர்ஷ்டம், அன்று பகல் முழுவதும் மழை பெய்தது; சிஷ்கின் முன்னாலேயே கூறியதுபோல், பந்தாட்ட மைதானம் சகதியாகிவிட்டது; ஆகவே ஆட்டம் கிடையாதென்று அறிவிக்கப்பட்டது. நானும் ஆடவிரும்பவில்லை. நமது மனோபாவம் எவ்வளவு விசித்திரமாயிருக்கிறது! எல்லோரும் பந்தாடுகிறார்களே, நாம் மட்டும் வீட்டிலே உட்கார்ந்திருக்கிறோமே என்று எண்ணித் துயரமடைகிறோம். மற்றவர்கள் உல்லாசமாக விளையாடும்பொழுது, நாம் ஊக்கமின்றித் தன்னந்தனியாக உட்கார்ந்திருக்கிறோமே என்று கஷ்டப்படுகிறோம். ஆனால் ஒவ்வொரு பையனும் வீட்டிலிருப்பான். யாரும் விளையாடவில்லை என்பதைத் தெரிந்துகொண்டு வீட்டிலிருந்தால், அப்பொழுது கொஞ்சம்கூட வருத்தம் உண்டாவதில்லை!

இந்தத்தடவை அப்படித்தான் இருந்தது. வெளியில், இலையுதிர் காலம் மாதிரி தூறிக்கொண்டிருந்தது; வசதியாக வீட்டில் உட்கார்ந்து பாடங்களை எழுதினேன், படித்தேன். கணக்குப்பாடம் வரும்வரை, எல்லாம் நேர்த்தியாகத்தான் இருந்தது. எந்தப் பையனிடமாவது சென்று உதவி பெறுவதற்குப்பதிலாக நானே மண்டையை உடைத்துக் கொள்வதில் அர்த்தமில்லை என்ற முடிவுக்கு வந்தேன். ஆகவே நான் அலிக்கிடம் சென்றேன். எங்கள் குழுவில்

அவன்தான் கணக்கிலே புலி. அவன் எப்பொழுதும் 5 மார்க் வாங்குகிறான்.

அவன் தன்னந்தனியாகச் 'செஸ்' ஆடிக்கொண்டிருந்தான்.

"வா, வா! நல்ல நேரத்தில் வந்தாய்! இருவரும் ஓர் ஆட்டம் 'செஸ்' ஆடுவோம்" என்றான் அவன்.

"நான் 'செஸ்' ஆடவரவில்லை. என் கணக்கிலே உதவி செய்யவேண்டும்" என்று பதில் அளித்தேன்.

"கணக்கா? நிச்சயம் உதவிசெய்வேன். ஆனால் கணக்குக்கு அவசரமில்லை. அதையெல்லாம் கண நேரத்தில் விளக்கிவிடுவேன். முதலில் ஒரு ஆட்டம் போடுவோம். 'செஸ்' ஆடுவது உனக்கு நல்லது. 'செஸ்' ஆடுவதால் கணக்கில் முன்னேற்றம் காணலாம்."

"பொய்!" என்றேன் நான்.

"அப்பழுக்கற்ற உண்மை! நான் எப்படி கணக்கில் கெட்டிக்காரனாயிருக்கிறேன்? 'செஸ்' ஆடுவதால்தான்."

"அப்படியானால் நாம் ஆடலாம்" என்றேன் நான்.

நாங்கள் காய்களை வைத்தபின் ஆடத் தொடங்கினோம். அவனோடு என்னால் ஆடமுடியாதென்பதை விரைவில் கண்டு கொண்டேன். ஆட்டத்தில் அவனுக்கு ஆவேசமே வந்துவிடுகிறது; நான் காய்களைத் தவறாக நகர்த்தும்பொழுதெல்லாம், ஆத்திரமடைந்து, என்னைப் பார்த்து கூச்சலிட்டான்:

"நீ என்ன செய்வதாக நினைக்கிறாய்? இதுதான் விளையாடும் முறையா? எப்படி நகர்த்துகிறாய்?"

"அதில் என்ன தவறு?" என்று நான் கேட்டேன்.

"ஒன்றுமில்லை; உன் காய் எனக்குக் கிடைக்கிறது, அவ்வளவுதான்."

"தாராளமாக எடுத்துக்கொள்; ஆனால் கூச்சல் போடாதே!"

"நீ இப்படிப் புத்திகெட்டு ஆடினால் யார்தான் சத்தம் போடாமலிருக்கமுடியும்?"

"உனக்கு என்ன கவலை? நீ விரைவில் வெல்கிறாய்" என்றேன் நான்.

"நல்ல ஆட்டக்காரர்களை ஜயிப்பதுதான் எனக்குப் பிடிக்கும்; உன்னைப்போன்ற பொம்மைகளை வெல்வதால் என்ன பெருமை?"

"நான் பொம்மையா?"

"பொம்மையாக இல்லாமலிருக்கலாம். நிச்சயமாக நீ மோசமான ஆட்டக்காரன்."

அவன் ஜயிக்கும்வரை இப்படியே என்னை அவமானப் படுத்திக்கொண்டிருந்தான். அதற்கும் பிறகு, "இன்னொரு ஆட்டம் ஆடலாம், வா!" என்று அழைத்தான்.

ஆனால் இதற்குள் என் மனம் மிகவும் புண்பட்டிருந்தது. அவனை எப்படியாவது ஒருதடவை அல்லது இரண்டு தடவை அழுத்தித் துவைக்கவேண்டும்போலிருந்தது? ஆனால் அது என்னால் முடியாது!

"நீ சத்தம் போடாமலிருந்தால் இன்னொரு தடவை ஆடலாம். சத்தம்போட்டால் ஆட்டத்தை நிறுத்திவிட்டு வீட்டுக்குப் போய்விடுவேன்" என்று நான் கூறினேன்.

இவ்வாறு இரண்டாவது ஆட்டம் தொடங்கினோம். இந்தத் தடவை அவன் கூச்சல்போடவில்லை. ஆனால் வாலில்லாக் குரங்கு மாதிரி சளசளவென்று சத்தம் செய்யா மல் அவனால் ஆடமுடியாது; ஆகவே ஆடும்பொழுது அவன் என்னைக் கேலிசெய்துகொண்டேயிருந்தான்.

"அப்படியா! நாம் இப்படியா ஆடுகிறோம்! நன்று! மிக நன்றாக இருக்கிறது. சாமர்த்தியமாக ஆடுகிறோமல்லவா? நல்லது, நல்லது" என்று அவன் வெறுப்புண்டாகும் விதத் தில் பேசினான்.

நான் அந்த ஆட்டத்திலும் தோல்வியுற்றேன்; மேலும் எத்தனை தடவைகள் தோற்றேனென்று எனக்கு ஞாபகமில்லை.

அதற்குப் பிறகு நாங்கள் கணக்குப் பாடத்தில் கவனத்தைத் திருப்பினோம். இங்கும் அவனுடைய வெறுப்புண்டாக்கும் தன்மை விளங்கியது. நிதானத்தை இழக்காமல் அவனால் எதையும் விளக்கமுடியாது.

"ஆனால் இது மிகவும் எளிதல்லவா? ஏன், குழந்தைகூட இதைப் புரிந்துகொள்ளுமே! இதிலென்ன கஷ்டம்? உன்னைப்பார்த்தால் ஆச்சரியமாக இருக்கிறதே! எப்பொழுது கூட்டுவது, எப்பொழுது கழிப்பது என்பதைக்கூடச் சொல்லத் தெரியவில்லை! நாம் அதை மூன்றுவதில் கற்றுக்கொண்டோம். சந்திர மண்டலத்திலிருந்து திடீரென்று விழுந்தவன் மாதிரி நடந்துகொள்கிறாய்!" என்றெல்லாம் அவன் பேசினான்.

"நான் சொல்வதைக்கேள். சந்தடி இல்லாமல் சொல்லிக்கொடுக்க உன்னால் முடியாதென்றால், வேறு பையனிடம் செல்கிறேன்" என்றேன் நான்.

"நான் முறையாகத்தான் விளக்குகிறேன்; உனக்கு விளங்கவில்லை."

நீ ஒன்றையும் விளக்கவில்லை. மேதாவிபோல் பேசுகிறாய். இல்லாவிட்டால், கணக்குக்கும் சந்திர மண்டலத்துக்கும் என்ன தொடர்பு? எனக்குத் தெரியவேண்டும்."

"சரி, சரி, கோபப்படாதே. எளிதில் விளங்கும் முறையில், சொல்லித் தருகிறேன்."

ஆனால் அதில் பயனில்லை. அவனுடன் பிற்பகல் முழுவதையும் கழித்தேன்; ஆனால் உண்மையான உதவி கிடைக்கவேயில்லை. இதைமேலும் மோசமாக்கியது என்னவென்றால் ஒருதடவைகூட அவனைச் 'செஸ்'ஸில் தோற்கடிக்க முடியவில்லை. அவனுக்கு மட்டும் இவ்வளவு மண்டைக்கருவம் இல்லையென்றால் அதைப் பொருட்படுத்தியிருக்க

மாட்டேன். ஆனால் அந்த மமதைக் காரனைத் தோற்கடித் தாகவேண்டும். ஆகவே அதற்குப் பிறகு, நான் தினந் தோறும் அவனிடம் கணக்குப்பாட உதவிக்காகச் சென்றேன்; இருவரும் நீண்ட நேரம் சதுரங்கமாடினோம்.

கொஞ்சங் கொஞ்சமாக நான் ஆடக் கற்றுக்கொண் டேன். சில சந்தர்ப்பங்களில் நான் ஓர் ஆட்டத்தில் வெற்றி யும் கண்டுவிடுவேன். இது அடிக்கடி நிகழவில்லை என்பது உண்மை. ஆனால் ஜயிக்கும்பொழுது திருப்தி அடைவேன். ஏன்? முதலாவதாக அவன் தோல்வியடையும்பொழுது, தொண தொணவென்று பேசமாட்டான்; இரண்டாவதாக அவனுக்கு நாடி தளர்ந்து பீதி ஏற்பட்டுவிடும்; மேலே பாய் வான், கீழே உட்கார்ந்து தலையைப் பிடித்துக்கொள்வான். கோமாளி மாதிரி காட்சியளிப்பான். நான் ஒரு ஆட்டத்தில் தோற்றுவிட்டால், கவலைப்படமாட்டேன். என் எதிரி தோற் ருல் கூட எனக்கு மகிழ்ச்சி ஏற்படாது. ஆனால் அலிக் இதற்கு நேர் எதிரான மனோபாவமுடையவன். அவன் ஜயித்துவிட்டால் அவனுடைய மகிழ்ச்சியை அவனல் மறைக்க முடியாது; அவன் தோற்ருல் தன் தலைமயிரை பிய்த்து இழுக்கத் தயாராவான்.

நன்ருகச் சதுரங்கம் ஆடவேண்டுமென்று நான் ஆவல் கொண்டேன்; ஆகவே லிக்காவைச் சேர்த்துக்கொண்டு வீட்டில் ஆடிப் பழகினேன்; அப்பாவுக்கு அவகாசம் கிடைக் கும்பொழுது அவருடனும் ஆடினேன். கொஞ்ச காலத்துக்கு முன், தான் ஒரு சதுரங்க நூல் வாங்கியதாகவும் அது வீட் டில் எங்கோ இருக்கவேண்டுமென்றும் ஒருநாள் அப்பா கூறினர். நான் தேர்ச்சிபெற விரும்பினல், அதைப் படிக்க வேண்டுமென்றும் கூறினர். அந்தப் புத்தகத்துக்காக வேட்டையாடினேன்; பழைய பொருட்களுக்கிடையே அதைக் கண்டுபிடித்தேன். என்னல் ஒன்றுமே புரிந்து கொள்ள முடியாதென்று முதலில் நினைத்தேன். ஆனல் அதைப் படிக்கத் தொடங்கியபொழுது, அது புரிந்து கொள்ளக்கூடிய வகையில் எழுதப்பட்டிருப்பதை உணர்ந்

தேன். யுத்தத்தைப் போலவே சதுரங்கத்திலும் முதல் முயற்சி எடுக்கும் அனுகூலத்தை நீ சீக்கிரத்தில் பெற வேண்டும்; உன் காய்களை முன்னுக்கு நகர்த்தி, எதிரியின் பாதுகாப்புகளைத் தகர்த்து, எதிரியின் ராஜாவைத் தாக்க வேண்டும். இவ்வாறு அப்புத்தகம் போதித்தது. ஆட்டத்தைத் தொடங்குவது எப்படி, தாக்குதலுக்குத் தயார் செய்வது எப்படி, தற்காத்துக்கொள்ளுவது எப்படி முதலிய முக்கியமான விஷயங்களைப்பற்றி அது எடுத்துரைத்தது. சில நாட்கள் அதை முனைந்து படித்தேன். அடுத்த தடவை அலிக்கிடம் சென்றபொழுது நான் பல ஆட்டங்களில் ஜயமடைந்தேன். அது அலிக்குக்கு வியப்பாகவிருந்தது. அவனுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. நடந்தது என்னவென்று அவனுக்குப் புரியவில்லை. நிலைமை தலைகீழாக மாறி விட்டதல்லவா?

நாங்கள் பல ஆட்டங்கள் ஆடியதால், கணக்குநேரம் குறைவாயிருந்தது. அலிக் அவசர அவசரமாக சொல்லிக் கொடுத்தான்; அதனால் முன்னைவிடக் குழப்பம் அதிகமாகி விட்டது. 'செஸ்' ஆடக் கற்றுக்கொண்டுவிட்டேன்; ஆனால் அது என் கணக்குக்குப் பேருதவி செய்வதை நான் காண முடியவில்லை; இன்னும் கணக்கில் வெகுதூரம் பின்தங்கியிருந்தேன். ஆகவே சதுரங்க ஆட்டத்தை நிறுத்திவிடுவதென்று தீர்மானித்தேன். தவிர, எனக்கும் அது அலுத்துப் போய்விட்டது. மேலும் இனி அலிக்குடன் ஆடுவதில் வேடிக்கையுமில்லை. ஆகவே, இனிமேல் செஸ் ஆடப் போவதில்லையென்று ஒருநாள் அலிக்கிடம் கூறினேன்.

''என்ன? செஸ் ஆடமாட்டாயா? உனக்குப் பைத்தியமா? ஈடு இணையில்லாத சதுரங்க ஆட்டக்காரனுவதற்கு வேண்டிய தகுதி உனக்கு இருக்கிறது. விடாமுயற்சி மட்டும் தேவை.''

''பொருளில்லாமல் பேசாதே! நான் இதையெல்லாம் ஒரு புத்தகத்தைப் படித்துத் தெரிந்துகொண்டேன்.''

''என்ன புத்தகம்?''

"சதுரங்கத்தைப் பற்றிய பாடப் புத்தகம். உனக்குச் சிரத்தை இருந்தால் அதைத் தருகிறேன். படி; பிறகு என்னைப் போலவே நன்றாக ஆடுவாய்."

அந்தப் புத்தகத்தைப் பெறுவதற்கு அலிக் ஆவலாக இருந்தான்; ஆகவே என்னுடன் வீட்டுக்கு வந்து அதைப் பெற்றுக்கொண்டான்; அதைப் படிப்பதற்காக உடனே தன் வீட்டுக்கு ஓடினான். என்னைப் பொறுத்த மட்டும், என் கணக்கைப் பயிலும் வரையில், 'செஸ்' ஆடுவதில்லையென்று உறுதிசெய்துகொண்டேன்.

# 7. குதிரை வேஷம்

பள்ளிக்கூடத்தில் பல்சுவைக்கலை நிகழ்ச்சி நடத்த வேண்டுமென்று பாலர் சங்கத் தலைவர் வாலட்யா கூறினர். சில பையன்கள் செய்யுள் படிக்க முன்வந்தனர். வேறு சிலர் உடற்பயிற்சி வித்தைகளை செய்துகாட்டுவோமென்றனர். பாவ்லிக், நடனமாடப்போவதாகச் சொன்னான். ஆனால் வான்யாவும் ஐகாரும் சொன்ன யோசனைதான் தலைசிறந்த யோசனையாகவிருந்தது. புஷ்க்கின் எழுதிய கவிதை, ருஸ்லானும் லுட்மிலாவும்; அதிலிருந்து ஒரு காட்சியை நடித்துக் காட்டுவோமென்று அவர்கள் கூறினார்கள். அந்தக் காட்சி எங்களுடைய ருஷிய பாடப் புத்தகத்தில் வந்திருக்கிறது. அப்பொழுதுதான் நாங்கள் அதைப் படித்திருந்தோம். ராட்சஸனின் தலையை மூவொட்டுப் பலகையில் செய்து, முடிந்தவரை விகாரமாகவும் பயங்கரமாகவும் அது தோற்றமளிப்பதற்காக அதற்குச் சாயம் பூசப்போவதாக ஐகார் கூறினான். பிறகு, அந்தத் தலைக்குப் பின் மறைந்துகொண்டு, ராட்சஸன் பாத்திரத்தை நடிப்பேனென்று அவன் சொன்னான். வான்யா ருஸ்லானாக நடிப்பான். ராட்சஸத் தலையோடு சண்டைபோடுவதற்காக அவன் மரக்கட்டையில் ஈட்டி செய்துகொள்வான்.

பல்சுவை நிகழ்ச்சியில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமென்று சிஷ்கின் துடித்தான். என்னைக் கட்டாயப்படுத்தி அழைத்துக்கொண்டு ஆல்கா நிகோலிவ்னாவிடம் சென்றான். நாங்களும் பங்கெடுப்பதற்கு அனுமதி கோரினான். ஆனால் அவள் மறுத்துவிட்டாள்.

“உங்களுடைய மார்க்குகள் அதிகமாவதற்காக நீங்கள் நிறையப் படிக்கவேண்டியிருக்கிறது” என்று அவள் கூறினாள்.

நடிக்கவிருக்கும் பையன்கள் தமது பாகங்களை மனப் பாடம் செய்யவும் ஒத்திகை செய்யவும் தொடங்கினர்கள். சிஷ்கினும் நானும் ஹாலில் நின்றுகொண்டு இவற்றை வேடிக்கை பார்ப்போம். அவர்களைப் பார்க்கும்பொழுது எங்களுக்குப் பொருமையாகவிருந்தது. ஐகார் ராட்சஸத் தலையைச் செய்வதற்கு ஒரு பெரிய பலகையையே பயன் படுத்திவிட்டான். வாயைத் திறக்கச் செய்வதற்காக, தாடையின் கீழ்பாகத்தை தனியாகச் செய்து இணைத்துவிட் டான். பிறகு அந்தத் தலைக்குச் சாயம் பூசினன்; கண்கள் பிதுங்கியிருக்கும்படி செய்தான்; அவற்றைப் பார்ப்பதற்கே பயமாகவிருந்தது. அவன் அந்தந் தலைக்குப் பின் ஒளிந்து கொண்டு, அந்தப் பாத்திரத்தின் பாட்டை கர்ஜித்த பொழுது, தாடை மேலும் கீழும் அசைந்தது; உயிருள்ள பிராணியின் தலைமாதிரியே இருந்தது. ருஸ்லானக நடிக்கும் வான்யா தன் ஈட்டியுடன் அந்தத் தலைமீது பாய்வதும், அது பதிலுக்கு சீறும்பொழுது அதன் மூச்சின் வேகத்தால் வீசி எறியப்பட்டவன் மாதிரி, அவன் துள்ளியோடுவதும், பார்ப் பதற்கு பரபரப்பாகவும் கிளர்ச்சியூட்டுவதாகவும் இருந்தது.

ஒரு நாள் சிஷ்கின் மூளையில் ஓர் அதிசயமான யோசனை உதித்தது.

“ருஸ்லானும் லுட்மிலாவும் என்ற கவிதையை மீண்டும் நேற்றிரவு படித்தேன். ருஸ்லான் குதிரைமீது சவாரி செய் ததாக அது கூறுகிறது; ஆனல் நமது நாடகத்தில் ருஸ்லான் நடந்தன்றே வருகிருன்?” என்று சிஷ்கின் என்னிடம் கூறினன்.

“ஆம். அவன் குதிரைக்கு எங்கே போவான்? குதிரை கிடைத்தாலும் அதை நாடக மேடைக்கு எப்படிக் கொண்டு வரமுடியும்?” என்று நான் கேட்டேன்.

“எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நீயும் நானும் குதிரையாக நடிக்கலாம்” என்ருன் அவன்.

“அது எப்படி முடியும்?”

“விகடமும் விளையாட்டும் என்ற சஞ்சிகை என் வீட்டில் இருக்கிறது. இரண்டு பையன்கள் சேர்ந்து எப்படிக் குதிரை வேஷம் போடலாம் என்று அது கற்றுக்கொடுக்கிறது. ஒரு பெரிய துணியில் குதிரை வரையவேண்டும். தலை, வால், கால்கள் முதலிய எல்லா உறுப்புக்களுடனும் குதிரை வரைய வேண்டும். அதை வெட்டித் தைத்தால் குதிரை வடிவம் மாதிரியாகிவிடும். புரிகிறதா? பிறகு நான் முன்பக்கத்தில் நுழைந்து என் தலையைக் குதிரைத் தலைபோட்ட பகுதிக்குள் விட்டுவிடுகிறேன். நீ பின்பக்கத்துக்குள் புகுந்து, வளைந்து என் இடுப்பை பிடித்துக்கொண்டால், உன் முதுகு குதிரை முதுகு மாதிரியிருக்கும். அவ்வளவுதான். குதிரைக்கு நான்கு கால்கள் உண்டு; நம்மிருவருக்கும் நான்கு கால்கள் இருக்கின்றன. நான் செய்வதையெல்லாம் நீ செய்யவேண்டும். அவ்வளவுதான் குதிரை வேஷம்.”

“ஆனால் குதிரை வடிவத் துணியை எப்படி வெட்டித் தைப்பது? பெண்களாயிருந்தாலும் நமக்கு தையல் தெரிந்திருக்கும். பெண்களுக்குத் தையல் வேலை தெரியும். பள்ளிக்கூடத்தில் அவர்களுக்கு கற்றுக்கொடுக்கிறார்கள்.”

“நமக்கு உதவி செய்யும்படி உன் தங்கை லிக்காவைக் கேள்.”

நான் சகல விவரங்களையும் லிக்காவிடம் கூறினேன். அவளால் உதவ முடியுமாவென்று கேட்டேன்.

“ஓ! முடியும். ஆனால் நீதான் துணியைக் கொண்டு வரவேண்டும்” என்று அவள் சொன்னாள்.

துணி கிடைக்காமல் காரியம் கெட்டுவிடும் போலிருந்தது. ஆனால் சில நாட்களில் சிஷ்கின் அவர்களுடைய வீட்டு பழைய சாமான் அறையில் யாரோ எறிந்திருந்த பழைய மெத்தை ஒன்றைக்கொண்டு வந்தான். அதை உள்ளும் புறமும் தட்டிவிட்டு லிக்காவிடம் கொடுத்தோம்.

லிக்கா அதை சோதித்துப் பார்த்துவிட்டு, “இது போதும்” என்று கூறினாள். அவள் அதைப் பிரித்து இரண்டு

பெரிய துணிகளைத் தயார் செய்தாள். அவற்றை ஒன்றின் மீதொன்ருக தரையில் விரித்தாள். மேலேயுள்ள துணிமீது ஒரு குதிரையை வரையச் சொன்னுள். நாங்கள் ஒரு சாக் கட்டி கொண்டுவந்து, ஒரு பெரிய குதிரையை, தலை வால் கால்கள் முதலான சகல உறுப்புக்களுடனும் வரைந்தோம். லிக்கா ஒரு கத்தரிக்கோலால் அதை வெட்டி, இரண்டு துணிக் குதிரைகளையும் சேர்த்துத் தலை முதுகு வழியாகத் தைத்தாள். சிஷ்கினும் நானும் ஊசிகளைக் கொண்டுவந்து கொடுத்தோம்; அவளுடைய தையல் வேலைக்கு சகாயமாக விருந்தோம். குதிரையின் கால்களைத் தைப்பது கஷ்டமாக விருந்தது. ஏனென்ருல் ஒவ்வொரு காலுக்கும் இரண்டு மடிப்புகள் இருந்தன. சிஷ்கினுடைய விரல்களையும் என் விரல்களையும் ஊசி குத்திக்கொண்டேயிருந்தது. கடைசி யில் தையல் வேலை முடிந்தது. மறுநாள் நாங்கள் வைக் கோலும் கொஞ்சம் சணற்கூளமும் கொண்டுவந்து எங்க ளுடைய வேலையை மீண்டும் தொடங்கினேம். தலை உறுதி யாக நிற்க வேண்டுமென்பதற்காக, தலையில் வைக்கோல் வைத்து அடைத்தோம். சணற்கூளத்திலிருந்து வாலும் பிடரிமயிரும் தயார் செய்தோம். இவையெல்லாம் முடிந்த பிறகு, வயிற்றில் தையல் போடாமல் விட்டிருந்த ஓட்டை வழியாக சிஷ்கினும் நானும் குதிரைத் தோலுக்குள் தவழ்ந்து நுழைந்து நடக்க முயன்ருேம். எங்களைப் பார்த்து லிக்கா வுக்குத் தாங்கமுடியாத மகிழ்ச்சி. ஒரே சிரிப்புத்தான்! எங் களுடைய குதிரை அவளுக்கு நிரம்பப் பிடித்துவிட்டது. சில இடங்களில் தொய்வதாகச் சொன்னுள்; அவற்றுக்கெல்லாம் சக்கை வைத்துச் சரிசெய்தோம். அது துணியில் செய்த குதிரை என்பதை எவரும் கண்டுபிடிக்காமல் இருப்பதற்காக, அதற்கு சாயம் பூசவேண்டுமென்று லிக்கா யோசனை கூறி ஞள். சிஷ்கின் வீட்டுக்குச்சென்று தளத்துக்குப் போடு வதற்காகவுள்ள சாயத்தைக் கொண்டுவந்தான். அதைக் கொண்டு துணிக் குதிரைக்கு சாயந்தோய்த்தோம். குதிரை கவர்ச்சியாக, இளஞ்சிவப்பாக இருந்தது. அதற்குப் பிறகு வர்ணங்கள் வாங்கிவந்து, கண்களுக்கும் வாய்க்கும் நாசித்

துவாரங்களுக்கும் குளம்புகளுக்கும் பூசினோம். குதிரைக்குக் காதுகளைச் சேர்க்கவேண்டுமென்று லிக்கா கூறினாள். காதுகளில்லாமல் குதிரை முகம் விசித்திரமாயிருந்தது.

பிறகு, மீண்டும் குதிரைத் துணிக்குள் தவழ்ந்து நுழைந்தோம். கோஸ்யா கனைத்தான்; குதிரையின் கனைப்புக்கும் அதற்கும் வேற்றுமையே இல்லை! லிக்கா கைகொட்டிச் சிரித்தாள்; அவள் வயிறு புண்ணாகுமோவென்று நான் எண்ணினேன், அப்படிச் சிரித்தாள்.

"நிஜக் குதிரை மாதிரியே இருக்கிறது!" என்று லிக்கா கூச்சலிட்டாள்.

நாங்கள் அறையிலே நடப்பதற்கும் கொஞ்சம் துள்ளிக் குதிப்பதற்கும் முயன்றோம். அது நன்றாகத்தான் இருந்திருக்கவேண்டும்; அதனால்தான் லிக்கா இடைவிடாமல் சிரித்துக்கொண்டேயிருந்தாள். பிறகு அம்மா வந்தாள்; எங்களைப் பார்த்து அவளுக்கும் சிரிப்பு தாங்கவில்லை. வேலை முடிந்து வீட்டுக்கு வந்த அப்பாவுக்கும் அப்படித்தான்.

எதற்காக இதைச் செய்திருக்கிறோமென்று அப்பா கேட்டார். பள்ளிக்கூடத்தில் நடைபெறவிருக்கும் கலை நிகழ்ச்சியைப்பற்றி அவரிடம் சொன்னோம்.

"கலைவிழாவா? நன்று! பையன்களுக்கு நல்லறிவு புகட்டுவதில் 'அமெச்சூர்' நாடகங்களுக்கு இணையில்லை! உங்களுடைய விழா நடைபெறும் தேதியை எனக்குச் சொல்லவேண்டும். நிச்சயமாக வருவேன்" என்று அப்பா கூறினார்.

பிறகு நாங்கள் சிஷ்கின் வீட்டுக்குப்போனோம்; அவனுடைய அம்மாவுக்கும் அத்தைக்கும் குதிரை வேஷம் போட்டுக்காட்டினோம்.

"அப்பா நாடகத்துக்குவந்து, நாம் வேஷம் போடாமலிருந்துவிட்டால்?" என்று நான் சிஷ்கினிடம் கேட்டேன்.

''நாம் ஒருவரிடமும்போய் கேட்கவேண்டாம், நாடக நாளில் முன்னாலேயே சென்று மேடைக்குப்பின் ஒளிந்து விடுவோம். வான்யா மேடைக்குப் போகும்பொழுது, நம் மிடம் ஒரு குதிரை இருப்பதாக அவனிடம் கூறுவோம்!'' என்று சிஷ்கின் யோசனை கூறினான். நான் அதை ஏற்றுக் கொண்டேன்.

நாங்கள் கலைவிழாவுக்காக காத்திருந்தோம். அந்த ஆவலில் பாடங்களைக்கூட சரிவரப் படிக்கவில்லை. குதிரை வேஷத்தை மீண்டும் மீண்டும் போட்டுப்பார்த்துப் பழகினோம். லிக்காவும் எங்களுக்கு உதவிசெய்தாள்.

இறுதியாக அந்த நாள் வந்தது, நாங்கள் குதிரைத் தோலை ரகசியமாக பள்ளிக்குக்கொண்டுபோனோம்; மேடைக் குப்பின் அதை ஒளித்துவைத்தோம். பிறகு, வான்யாவை வேட்டையாடிப் பிடித்தோம்.

''வான்யா! ராட்சஸத் தலையுடன் சண்டைபோடும் காட்சிக்காக நீ மேடைக்குச் செல்லும்பொழுது, பின்புறத் தில் ஒரு குதிரை உனக்காகக் காத்திருக்கும். அதன்மீதேறிப் புத்தகத்திலுள்ளமாதிரி சவாரிசெய்துகொண்டே சண்டை போடு!'' என்று சிஷ்கின் வான்யாவிடம் கூறினான்.

''குதிரையா? எப்படிப்பட்ட குதிரை?''

''உனக்கு அதைப்பற்றி என்ன கவலை? அது அருமை யான குதிரை. நீ அதன்மீது ஏறிக்கொண்டால் போதும். மீதி விஷயங்களை அது பார்த்துக்கொள்ளும்.''

''எனக்குத் தெரியாது. நாங்கள் குதிரையுடன் ஒத்திகை செய்யவில்லை'' என்று வான்யா சஞ்சலத்துடன் பதில் கூறினான்.

''அறியாக்கழுதை! குதிரை இருந்தால், நாடகம் பத்து மடங்கு சிறப்பாக இருக்கும். கவிதையில் ருஸ்லான் குதிரை மீது சவாரி செய்யவில்லையா? 'பரியின்மீது பறந்துவரு

கிறேன், புயல்வீசும்வேகத்திலே' என்று ருஸ்லான் கூற வில்லையா? நமது புத்தகத்திலுள்ள படத்தில்கூட ருஸ்லான் குதிரைமீது அமர்ந்திருப்பதை நீ பார்க்கவில்லையா?'' என்று சிஷ்கின் கேட்டான்.

''சரி சரி. எனக்கும் குதிரையில்லாத பிரபுவாக நடிப் பதற்குப் பிடிக்கவில்லை'' என்றுன் வான்யா.

''ஆனல் ஒருவரிடமும் இதைப்பற்றிச் சொல்லாதே. சொன்னல் காரியம் கெட்டுவிடும்'' என்று சிஷ்கின் எச்சரித் தான்.

''ஒருவார்த்தை சொல்லமாட்டேன்.''

கூட்டம்சேரத் தொடங்கியவுடன் சிஷ்கினும் நானும் ரகசியமாகப் பின்புறம் சென்றோம். காட்சி ஜோடனைகளில் கடைசி நிமிடத் திருத்தங்கள் செய்துகொண்டு, பையன்கள் மேடையில் அங்குமிங்கும் ஓடியவண்ணமிருந்தனர். கடைசி யாக மணி அடித்து நிகழ்ச்சி தொடங்கியது. நாங்கள் நின்ற இடத்திலிருந்து மேடை நன்றாகத் தெரிந்தது. பாட்டுப் பாடுவதையெல்லாம் கேட்டோம்; உடற்பயிற்சி வித்தைகளை யெல்லாம் பார்த்தோம். குறிப்பாக தேகப்பயிற்சி வித்தைகள் எனக்கு நிரம்பப் பிடித்தமாயிருந்தது. பையன்கள் அவற் றைச் சுத்தமாகவும் திருத்தமாகவும் செய்தார்கள்; ராக தாளத்துக்கு இசைவாகச் செய்தார்கள். அவர்களுடைய இருவாரப் பயிற்சி வீண்போகவில்லை.

பிறகு, திரை விழுந்தது.

மேடையில், ராட்சஸத் தலையைக்கொண்டுவந்து வைத் தார்கள். ஐகார் தன் பாத்திரத்தை நடிக்கத்தயாரானன். சில கணங்களில் வான்யா பின்பக்கம் வந்தான். அவன் அட்டையில் செய்த தலைக்காப்பும் மரக்கட்டையில் செய்த ஈட்டியும் அணிந்திருந்தான். ஆனல் அவற்றுக்கு வெள்ளி மாதிரி சாயம் பூசியிருந்ததால், எவரும் அட்டை, கட்டை என்று சொல்லமுடியாது!

"குதிரை எங்கே?" என்று அவன் கேட்டான்.

"இதோ, ஒரு நிமிஷத்தில்."

நாங்கள் தோலுக்குள் தவழ்ந்து நுழைந்தோம். குதிரை வேஷம்போட்டாகிவிட்டது.

"குதிரைமேல் ஏறு" என்று கூறினேன். அப்பொழுது இன்ப உணர்ச்சியில் மிதந்துகொண்டிருந்தேன்.

ஆனால் வான்யா ஏறிக்கொண்டு, என் முதுகுமீது உட்கார்ந்தவுடன், குதிரைகளின் கதியை எண்ணி வருத்தப்பட்டேன். பாவம்! அவற்றுக்கு எவ்வளவு கஷ்டம்! என் முதுகெலும்பு நொறுங்கி விடுமென்றுப் பயந்தேன்; ஆதரவுக்காகச் சிஷ்கின் இடுப்பை இறுகப்பிடித்தேன். அந்த நேரத்தில், திரை உயர்ந்தது.

நாங்கள் 'டக், டக்'கென்று மேடைக்குச் சென்றோம். எங்களைக் கண்ட பையன்கள் கைகொட்டிச் சிரித்தார்கள். குதிரை வேஷம் நல்ல வெற்றிதான்! ராட்சஸத் தலையை நோக்கி நாங்கள் பாய்ந்தோம்.

"என்ன பாய்ச்சல்? எங்கே போகிறீர்கள்? அந்த ராட்சஸப் பிறவியை முட்டிவிடுவீர்கள் போலிருந்ததே. பின் வாங்குங்கள்" என்று அடங்கிய குரலில் ருஸ்லான் சீறினான்.

நாங்கள் கொஞ்சம் பின்வாங்கினோம். பார்வையாளர்கள் சிரித்தார்கள்.

"குரங்குகளே! பின்வாங்காதீர்கள். திரும்புங்கள். மேடையின் மத்திய பகுதிக்குச் செல்லுங்கள். என் தனிமொழியை நான் சொல்லவேண்டும்" என்று ருஸ்லான் சீறினான்.

அதேமாதிரி நாங்கள் செய்தோம். துக்கம் நிறைந்த குரலில் வான்யா பேசத்தொடங்கினான்.

அவன் பேச்சாளர்கள் செய்வது மாதிரி, அலுப்பு உண்டாக்கும் குரலில் பேசிக்கொண்டேயிருந்தான். ஆகவே,

வேடிக்கைசெய்து கூட்டத்தை மகிழ்விப்பதற்காகச் சிஷ்கின் குதிரை காதுகளில் உள்பக்கமாய் கட்டப்பட்டிருந்த கயிற்றை இழுத்தான்; காதுகள் நெளிந்தன.

கடைசியில் வான்யாவின் தனிமொழி முடிந்தது. "தலையை நோக்கிச்செல்" என்று ரகசியமாகக் கூறினான்.

நாங்கள் ராட்சஸத் தலையண்டை வந்தவுடன் சிஷ்கின் மூக்குவழியே சீறினான், கனைத்தான். நானும் உதைக்கத் தொடங்கினேன். அந்த பயங்கரப் பிராணியைக்கண்டு பீதியடைந்த மாதிரி காட்டவே இப்படிச் செய்தோம். ருஸ்லான் குதிரையைத் தூண்டிவிட்டான். அதாவது என் விலா எலும்புகளில் உதைத்தான். நாங்கள் ராட்சதனிடம் சென்றதும் ருஸ்லான் தன் ஈட்டியால் தாக்கப்போனான். ஆனால் அது தன் வாயைத்திறந்து சீறியதுதான் தாமதம்; நாங்கள் பின்பக்கம் பாய்ந்து சுழன்று சுழன்று ஆடினோம். சுழல் காற்றில் ஆடிப் பறந்ததுமாதிரியிருந்தது. ருஸ்லான் கீழே விழுந்துவிடுவான்போலிருந்தது. சிஷ்கின் என் பாதத்தை மிதித்துவிட்டான். அந்த வலிதாங்காமல் நான் நொண்டி நடக்கத் தொடங்கினேன். வான்யா மேலும் மேலும் என் விலா எலும்புகளில் குத்தினான். தலையண்டை செல்வதும் பின்னோட்டம் ஓடுவதுமாக பல தடவைகள் செய்த பிறகு, எனக்குத் தாங்கவில்லை.

"போதும்! என் கால்வலி தாங்கமுடியவில்லை" என்று அழுத்தமாகச் சொன்னேன்.

ஆகவே கடைசித்தடவையாக நாங்கள் நாலுகால் பாய்ச்சலில் ராட்சஸத் தலையண்டை சென்றோம். வான்யாவின் ஈட்டி பாய்ந்தது; ராட்சஸத்தலை வெடித்து, சாயமெல்லாம் பறந்துவிட்டது. தலை விழுந்தது; குதிரை நொண்டிக் கொண்டே மேடையிலிருந்து நகரத்தொடங்கியது. திரை விழுந்தது. கூட்டத்தினர் தலைகால் தெரியாமல் கைதட்டினார்கள். வான்யா குதிரையைவிட்டு இறங்கியவுடன் மேடைக்கு ஓடினான், நடிகர்கள்மாதிரி வணக்கம் தெரிவிக்க-

"அவனுக்கே முழுப்பெருமையும் சேரக்கூடாது. நாமும் போய் வந்தனம் தெரிவிப்போம்," என்ருன் சிஷ்கின்.

குதிரை மேடைக்குவந்து மேலும் கீழுமாக தலையை அசைத்தவுடன், கரகோஷம் பெரிதாக இருந்தது. மீண்டும் மீண்டும் பையன்கள் கைகொட்டினுர்கள்; ஆகவே நாங்கள் மீண்டும் மீண்டும் மேடைக்கு வரவேண்டியதாயிற்று.

கடைசியில் திரையைப் போடுமாறு வாலட்யா உத்திர விட்டார். நாங்கள் எவருக்கும் தெரியாமல் வேஷத்தைக் கலைத்துவிட்டுப் போகலாமென்று நினைத்தோம்; ஆனல் வாலட்யா வந்து குதிரையின் காதுகளைப் பிடித்துவிட்டார்.

"வெளியே வா! யார் அது?"

வேறுவழியில்லை; நாங்கள் வேஷத்தை அகற்றினேம்.

"நீங்களா? இம்மாதிரி வேடிக்கை செய்ய யார் அனு மதித்தது?"

"குதிரை வேஷம் பொருத்தமாயில்லையா? நடிப்பு நன்ருயில்லையா?" என்று சிஷ்கின் கேட்டான்.

"குதிரை நன்ருயிருந்தது. ஆனல் மேடையில் எப்படி நடந்து கொள்வதென்று உனக்குப் புரியவில்லை. வான்யா தனிமொழியைப் பேசியபோது, குதிரை கால்களை ஆட்டிச் சேட்டை செய்துகொண்டிருந்தது. அப்படிக் குதிரை செய்யுமா?"

"வான்யா மாதிரி ஒரு குண்டோதரன் முதுகின்மீது உட்கார்ந்திருக்கும்பொழுது, உங்களால் ஆடாமல் அசையாமல் இடித்த புளி மாதிரி இருக்கமுடியுமா? அவன் எடை ஒரு டன் இருக்குமே!" என்றேன் நான்.

"சரி, சரி. மேடையில் இருக்கும்பொழுது, நீ ஆடக் கூடாது, அசையக்கூடாது. கருத்தும் உணர்ச்சியும் மிகுந்த ருஸ்லான் பேசும்பொழுது, கூட்டத்தைச் சிரிக்கச் செய்யலாமா? முதலில் எதற்காகச் சிரிக்கிருர்களென்பதே

எனக்குப் புரியவில்லை. பிறகுதான் குதிரையின் காதுகள் சேட்டை செய்வதைக்கண்டேன்.”

“குதிரை எதையாவது காதுகொடுத்துக் கேட்டால், காதுகளை நெளித்துக் கொள்வதில்லையா?” என்று கேட்டான் சிஷ்கின்.

“இந்தக் குதிரை எதைக் கேட்டுக்கொண்டிருந்தது?”

“ருஸ்லான் பேச்சை!”

“குதிரை தன் காதுகளை ஆட்டினால்கூட பரவாயில்லை; ஈக்களை ஓட்டுவது மாதிரி இடைவிடாமல் ஆடச்செய்யாதே!”

“அதிகமாகத்தான் போச்சு! கயிற்றை பலமாக இழுத்து விட்டேன்” என்று ஒப்புக்கொண்டான்.

“அதிகப்படியாப் போச்சா? மேடைக்கு வருவதற்கே உனக்கு உரிமைகிடையாது!”

நாங்கள் மனமுடைந்தோம். ஆல்கா நிகோலிவ்னா விடம் வசவு வாங்குவது நிச்சயம் என்று எண்ணினோம்; ஆனால் அவளோ ஒன்றும் சொல்லவில்லை. இதனால் என் துயரம் அதிகரித்தது. சிஷ்கினும் நானும் உருப்படப்போவதில்லை என்று அவர்கள் முடிவுசெய்திருக்கவேண்டும்; திட்டுவதில்கூடப் பயனில்லையென்று அவள் நினைத்திருக்க வேண்டும்.

இந்த ஆட்டமும் ‘செஸ்’ஸுமாகச் சேர்ந்து என் படிப்பைக் கெடுத்துவிட்டது. ஆகவே, காலாண்டு மார்க் சீட்டு வந்தபொழுது, எனக்குக் கணக்கில் 2 மார்க்தான் கிடைத்தது.

2 மார்க்தான் வருமென்பதை நான் அறிந்திருந்தது மெய்; ஆனால் கால் ஆண்டு முடிவதற்கு நாள் இருக்கிறது, அதற்குள் படித்துவிடலாம் என்று நம்பியிருந்தேன்.

“விடுமுறைக்கு முன்னால் இந்த மார்க் சீட்டை ஏன் கொடுக்கிறார்கள்? இப்பொழுது என் லீவ் பாழாகிவிட்டது”

என்று நான் வீட்டுக்குப் போகும்பொழுது சிஷ்கினிடம் கூறினேன்.

"ஏன்?"

"ஏனென்றால் வீட்டுக்குப்போனவுடன் அம்மாவிடம் மார்க் சீட்டைக் காட்டவேண்டும்."

"நான் லீவுக்குப் பிறகுதான் காட்டுவேன். அம்மாவின் லீவை ஏன் கெடுக்கவேண்டும்?"

"எப்படியிருந்தாலும், லீவுக்குப் பிறகாவது நீ காட்டித் தானே ஆகவேண்டும்?" என்று நான் கேட்டேன்.

"ஆமாம். ஆனால் லீவு முடிந்துவிடும். பிறகு கவலையில்லை அவர்கள் லீவை அனுபவித்துவிடுவார்கள். என் தாயாரிடம் எனக்குள்ள அன்பின் காரணமாக, அவள் மனம் துன்புறுவதை நான் விரும்பவில்லை."

"உனக்கு அன்னையிடம் அவ்வளவு அன்பு இருந்தால் குறைந்த மார்க் வாங்கக்கூடாது" என்று நான் கூறினேன்.

"நீ நல்ல மார்க் வாங்கி நான் பார்க்கவில்லையே!"

"இதுவரை இல்லை; இனிமேல் வாங்குவேன்."

"நானும் வாங்குவேன்."

அத்துடன் அந்தப்பேச்சை நிறுத்தினோம். லீவ் முடிகிற வரை மார்க் சீட்டைக் காட்டுவதில்லையென்று நானும் சிஷ்கினைப் பின்பற்றி தீர்மானஞ் செய்தேன், பார்க்கப் போனால் சில சமயங்களில், ஆசிரியர்களே லீவுக்குப் பிறகு தான் மார்க் சீட்டை தருகிறார்கள். ஆகவே நான் செய்வதில் தவறு இல்லை.

# 8. இரண்டு மார்க் தோல்லை

கடைசியில், நாம் அனைவரும் ஆவலுடன் எதிர்நோக்கும் நன்னாள், நவம்பர் சோஷலிஸ்ட் புரட்சி நிகழ்ந்த பெருநாள், நவம்பர் 7 வந்தது. அதிகாலையிலேயே எழுந்து பலகணிக்கு ஓடினேன். அப்பொழுது சூரியன் உதயமாகவில்லை; ஆனால் வெளிச்சம் இருந்தது. வானமோ நீலத்தை உரித்து வைத்திருந்தது. எல்லா வீடுகளிலும் செங்கொடிகள் பறந்தன, லெனின் ஸ்டாலின் படங்கள் புன்னகை புரிந்தன. மீண்டும் வசந்தகாலம் வந்துவிட்ட மாதிரி நான் இன்புற்றேன், பரபரப்படைந்தேன். நவம்பர் 7-ல் நான் மகிழ்ச்சிப் பெருக்கில் மிதப்பதற்கு என்ன காரணம் என்று எனக்கே புரியவில்லை. எதனாலோ தெரியவில்லை, அன்று வாழ்க்கையில் கிடைத்த தலை சிறந்த அனுபவங்கள் நினைவுக்கு வருகின்றன; பலசாலியாகவும் மகா வீரனாகவும் சீக்கிரத்தில் வளரவேண்டுமென்று துடிக்கிறேன்; தைகா (Taiga) காடுகளின் இதயத்துக்குள் ஊடுருவவேண்டுமென்றும், அல்லது இதற்கு முன் எவரும் ஏறியிருத மலைச் சிகரங்களை ஏறிப்பார்க்கவேண்டும்; அல்லது நீல வானத்திலே விமானத்தை ஓட்டவேண்டும்; அல்லது இரும்புக் கனியும் நிலக்கரியும் கண்டு பிடிப்பதற்காக, 'அதலபாதாளம்' வரைச் செல்லவேண்டும்; அல்லது பாலைவனங்களைச் சோலைவனங்களாக்குவதற்குக் கால்வாய்களைக் கட்டவேண்டும்; அல்லது காடுகளைப் பயிர் செய்யவேண்டும்; அல்லது அதிசயமான எந்திரங்களை அமைக்கவேண்டும் என்றெல்லாம் எண்ணமிடுகிறேன். இத்தகைய வீரதீரச் சாதனைகளை சாதித்தால், அப்பா அம்மாவும் என்னைப்பற்றிப் பெருமைப்படுவார்கள்; ஆல்கா நிகோலிவ்னாவும் பெருமிதமடைவாள்; நாம் அனைவரும் இதயபூர்வமாக நேசிக்கும் நமது தோழர் ஸ்டாலின் என்னைப் புகழ்வார்.

இவ்வாறெல்லாம் நான் கனவு காண்கிறேன். இவை கனவுகளாக மட்டும் இருக்கவேண்டிய அவசியமில்லை யென்று அப்பா கூறுகிறார். ஏனென்றால், பாடங்களை முறை யாகப் பயின்றால், சாதனைகளைச் சாதிப்பதில் கண்ணும் கருத்துமாய் பாடுபட்டால், நம் தேசத்தில் அதிசயமானவை யாகத் தோன்றும் காரியங்கள்கூட கைகூடுவது சாத்தியம் என்று அப்பா கூறுகிறார். எப்படியென்றால், பல்லாண்டு களுக்கு முன்பாக நவம்பர் 7ல் மக்களை ஒடுக்கிவந்த முத லாளிகளை விரட்டிவிட்டோம்; இப்பொழுது நம் தேசத்தில் சகலமும் மக்களுக்குச் சொந்தமாயுள்ளன. நானும் மக்க ளின் ஒரு அம்சமாயிருப்பதால், அவற்றில் எனக்கும் உரிமை யுண்டு.

நவம்பர் புரட்சி நாளன்று எனக்குப் பல பரிசுகள் கிடைத்தன. அப்பா, படங்களைத் திரையில் ஒளி யுருப் பெருக்கிக் காட்டும் அமைப்பை (magic lantern) அளித்தார். அம்மா பனிப்பரப்பில் சறுக்குவதற்காகப் போட்டுக்கொள் ளும் பனிமிதியடி கொடுத்தாள். லிக்கா ஒரு திசைகாட் டியைக் கொடுத்தாள். நான் லிக்காவுக்கு ஒரு வர்ணப் பெட்டியைக் கொடுத்தேன். பிறகு அப்பா .லிக்காவையும் என்னையும் பாக்டரிக்கு அழைத்துச் சென்றார். அங்கிருந்து நாங்கள் பாக்டரியின் ஏனைய தொழிலாளருடன் அணிவகுப் புக்குச் சென்றோம். 'பாண்டுகள்' பண்ணிசைத்தன. எல் லோரும் பாடினார்கள். லிக்காவும் நானும் கூடப் பாடினோம்; அது வேடிக்கையாயிருந்தது. எங்களுக்கு அப்பா 'பலூன்' வாங்கிக்கொடுத்தார்; எனக்குச் சிவப்பு 'பலூன்'; லிக்கா வுக்குப் பச்சை 'பலூன்'. பெரிய சதுர மைதானத்துக்கு வந்ததும், இரண்டு சிறிய செங்கொடிகளை வாங்கிக் கொடுத் தார்; நாங்கள் அவற்றைப் பிடித்துக்கொண்டு பேச்சுமேடை முன்பாகவும் மைதானம் முழுவதும் அணிவகுப்பில் சென்றோம்.

பிறகு நாங்கள் வீட்டுக்குப் போனோம். விருந்தாளிகள் வந்தனர். முதலில் ஷுரா மாமா வந்தார். அவர் பெரிய

யை நிறையப் பொருள் கொண்டுவந்தார். எங்களுக்குப் பரிசுகளும் கொண்டு வந்திருப்பாரென்று லிக்காவும் நானும் அனுமானம் செய்தோம். ஆனால் நாங்கள் எப்படி நடந்து கொள்கிறோமென்பதைப் பற்றித்தான் முதலில் விசாரித்தார். நல்ல முறையில் நடந்துவருவதாக விடை தந்தோம்.

"அம்மா சொற்படி நடக்கிறீர்களா?"

"ஓ! அம்மா சொல்வதைத் தட்டுவதேயில்லை" என்றோம்.

"பள்ளிக்கூடத்தில் எப்படிப் படிக்கிறீர்கள்?"

"நன்றாக" என்று இருவரும் கூறினோம்.

அருமையான பொம்மை வீடு கட்டுவதற்குவேண்டிய சாதனங்களை அவர் எனக்குக்கொடுத்தார். லிக்காவுக்கும் நல்ல பரிசு வழங்கினார்.

பிறகு லிடா அத்தையும் செர்யோஷா மாமாவும் வந்தனர்; அவர்களைத் தொடர்ந்து யுரா மாமாவந்தார்; பிறகு நினா அத்தை வந்தாள். நான் நன்றாகப் படிகிறேனாவென்று அவர்கள் அனைவரும் விசாரித்தார்கள். நல்ல முறையில் படித்துவருவதாகச் சொன்னேன். அனைவரும் எனக்குப் பரிசு கொடுத்தார்கள். லிக்காவுக்கும் பரிசுகள் குவிந்து விட்டன. ஆனால் பரிசுகள் அதிமாகக் கிடைக்கக் கிடைக்க என் நெஞ்சு அதிகமாக உறுத்தியது; ஏனோ தெரியவில்லை. நான் நன்றாகப் படிப்பதாக அவர்களிடம் சொன்னேன். ஆனால் கணக்குப் பாடத்தில் 2 மார்க்தான் வாங்கியிருக்கிறேன். ஆகவே என் மனசாட்சி அமைதியாகவும் மெத்தனமாயும் இருக்குமா? இதைப்பற்றி நீண்ட நேரம் சிந்தித்துப் பார்த்தேன். நிச்சயமாகப் புதிய பாதையில் செல்வதென்றும் இனிமேல் இரண்டு மார்க் வாங்கக் கூடாதென்றும் உறுதி செய்துகொண்டேன். அதன் பிறகு மனச்சாந்தி ஏற்பட்டது; சோர்வு நீங்கிச் சுறுசுறுப்புத் தளிர்த்தது.

நவம்பர் 8-ம் தேதியும் விடுமுறைநாள். என் வகுப்புப் பையன்கள் சிலரைப்போய்ப் பார்த்துவந்தேன். வகுப்பு மாணவர்களில் சிலர் என்னைப் பார்க்கவந்தார்கள். பல பல ஆட்டங்களை ஆடி நாங்கள் வேடிக்கையாகப் பொழுதைப் போக்கினோம். மாலையில் மாயவிளக்குக் காட்சி நடத்தினோம். இரவு படுக்கப் போகும்பொழுது, எனக்குக் கிடைத்த பரிசுகளை ஒரு நாற்காலியில் அடுக்கிவைத்தேன். லிக்காவும் அதேமாதிரி செய்தாள். ஆர்ப்பாட்டத்தில் எடுத்துச்சென்ற இரண்டு பலூன்களும் மேலே மச்சுப்பலகையருகில் மிதந்துகொண்டிருந்தன.

மறுநாள் காலையில் எழுந்திருந்தபொழுது, பலூன்கள் தரையில்கிடந்தன. அவற்றின் அளவு சரிபாதியாகச் சுருங்கிவிட்டது. வாயு தப்பியோடிவிட்டதால், அவற்றால் பறக்க முடியவில்லை.

அன்று பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிவரும்பொழுது, அம்மாவிடம் 2 மார்க் விஷயத்தை எப்படிச் சொல்வதென்று கவலைப்பட்டேன். அம்மாவே மார்க் சீட்டைக்கேட்கும் வரை பேசாமலிருந்தேன். அவள் கேட்டவுடன் பையிலிருந்து மார்க் சீட்டை எடுத்துக்கொடுத்தேன்; ஒருவார்த்தை பேசவில்லை. ஆனால் அம்மா கணக்கில் 2 மார்க் என்று போட்டிருப்பதை உடனே பார்த்துவிட்டாள்.

"இதைத்தான் எதிர்பார்த்தேன்! எப்போதும் விளையாடுவதால்வரும் தீமை இது. படிப்பதேகிடையாது; பெரியோர் வார்த்தையைக் கேட்பதுகிடையாது. களைத்து விழும்வரை விளையாடிக்கொண்டிராமல், காலாகாலத்தில் பாடங்களைப் படி, என்று எத்தனை தடவைகள் உனக்குச் சொல்வது! உன்னோடு பேசுவதற்குச் சுவரோடு பேசலாம்! இன்னொரு ஆண்டும் இதே வகுப்பில் இருக்க விரும்புகிறாயா?" என்று கோபத்துடன் பேசினாள்.

இனிமேல் சிரமப்பட்டுப் படிப்பேனென்றும் இன்னொரு தடவை 2 மார்க் வாங்கமாட்டேன் என்பது உறுதியென்றும்

நான் சொன்னேன். ஆனல் அம்மா இதைக்கேட்டுத் தோட்களைக் குலுக்கிகொண்டாள். என்னுடைய உறுதி மொழியை நம்பவில்லை. மார்க் சீட்டில் கையொப்பம் வேண்டு மென்று கூறினேன். பெற்றோரின் கையெழுத்துடன் ஆசிரியரிடம் திருப்பிக் கொடுக்கவேண்டுமல்லவா?

"நான் போடமாட்டேன். அப்பாவும் பார்க்க வேண்டும்."

அம்மாவின் பதிலால் அதிர்ச்சி அடைந்தேன். அம்மா கையெழுத்துப்போடுவாள், அப்பாவிடம் அதைக் காட்டா திருக்கலாமென்று ஆகாயக் கோட்டைக் கட்டியிருந்தேன். இப்பொழுது அப்பாவிடம் பேச்சுவாங்கவேண்டும். இதை நினைத்து நான் பட்டபாட்டிலே படிக்கவே முடியவில்லை. அப்பா பேச்சை வாங்கிக்கட்டிக்கொண்டபின் படிக்கலா மென முடிவுசெய்தேன்.

கடைசியில் அப்பா வேலை முடிந்து வீட்டுக்குவந்தார். அவர் சாப்பிட்டு முடியும்வரை சும்மா இருந்தேன். சாப்பிட்ட பிறகு அவர் நல்ல மாதிரியாக இருப்பார். அவர் பார்வையில் படக்கூடிய முறையில், அவருடைய மேஜையில் என் மார்க் சீட்டை வைத்தேன். அவரும் அதை உடனே பார்த்து எடுத்துப் படித்தார்.

இரண்டு மார்க்கைப் பார்த்துவிட்டுச் "சாதித்துவிட் டாயா? பலே! உனக்கு மான வெட்கமில்லை? உன் வகுப்புப் பையன்கள் உன்னைப்பற்றி என்ன நினைப்பார்கள்?" என்று கேட்டார்.

"நான் மாத்திரம்தான் 2 வாங்கினேனு?" என்றேன் நான்.

"வேறு யார் 2 வாங்கியது?"

"சிஷ்கின்."

"சிஷ்கின் தான் உனக்கு முன்மாதிரியா? நல்ல பையன் களைப் பார்த்து நடக்கக் கூடாதா? சிஷ்கின் அத்தகைய ஒளியா?"

''ஒளியுமில்லை, ஒன்றுமில்லை.''

''நீ நன்ருய்ப் படித்து நல்ல மார்க் வாங்கவேண்டும், சிஷ்கினும் அப்படிச் செய்வதற்கு உதவிசெய்யவேண்டும். மற்றவர்களைவிடப் பின்தங்கியிருப்பதில் உங்களுக்குப் பிரியமா?''

''பிரியமில்லை. நான் புதிய அத்தியாயத்தைத் துவக்கப் போகிறேன். சிரமப்பட்டு படிக்கப்போகிறேன்.''

''முன்னுலும் அப்படித்தான் சொன்னுய்.''

''முன்னுல் சொன்னேன்; இப்பொழுது செய்வேன்.''

''சரி! உன் வாக்குறுதியை எப்படி காப்பாற்றுகிருயென்று பார்ப்போம்!''

அப்பா மார்க் சீட்டில் கையெழுத்துப் போட்டுவிட்டார்; அதைப்பற்றி வேறுவார்த்தை பேசவில்லை. எனக்குக் கொஞ்சம் ஏமாற்றம்தான். நீண்ட சொற்பொழிவை எதிர்பார்த்தேன். ''சொன்ன சொற்படி நடக்கமாட்டேன், என்னிடம் பேசுவதெல்லாம் விழலுக்கு இரைத்த நீர்'' என்று அவர் தீர்மானத்துக்கு வந்துவிட்டார்போலும்! ஆனுல் வார்த்தையைக் காப்பாற்றவேண்டுமென்ற உறுதியை இது மேலும் பலப்படுத்தியது.

மறுநாள், இதைப்பற்றி சிஷ்கினுடன் பேசினேன்.

''2 மார்க்குக்காக அம்மாவிடம் வாங்கிக்கட்டிக் கொண்டாயா?''

''வாங்கிக்கொள்ளாமல்? அம்மாமட்டுமா? அத்தையும் கூடத்தான். 'இனி உன் படிப்பை நேரடியாகப் பார்வையிடப் போகிறேன்' என்று அத்தை ஏன் மிரட்டுகிருளோ, எனக்குப் புரியவில்லை. பல நாட்களாக அவள் இப்படி பயமுறுத்திக் கொண்டிருக்கிருள். என் வீட்டு வேலையைத் தினசரி மாலை நேரத்தில் பார்வையிடப்போவதாகக் கூறினுள்; ஆனுல் ஓரிரண்டு தடவைதான் செய்தாள். அந்த நாடகக் குழுவில்

சேர்ந்த பிறகு அவள் மாலை நேரங்களில் வீட்டில் இருப்பதே கிடையாது.''

''நாளைக்கு, நாளைக்கு' என்று ஒத்திப்போட்டுக் கொண்டேபோவாள். ஆனால் பல நாட்கள் என் புத்தகங்களைப் பார்க்கவேயில்லை. தீடிரென்று ஒரு நாள், என் வீட்டு வேலையைப் பார்வையிடுவதற்கு நோட்புத்தகங்களைக் கேட்பாள். ஆனால் என்னிடம் இருந்தால்தானே காட்டுவதற்கு? நான்தான் ஒன்றுமே எழுதவில்லையே; இது எப்பொழுதாவது ''ஆடியில் ஒருநாள் அல்லது ஐப்பசியில் ஒருநாள்'' நடப்பதுதான். அநேக நாட்களில் மாலை நேரங்களில் அவள் நாடகப் பயிற்சி சாலையில் இருக்கிறாள் அல்லது நாடகக் கொட்டகையில் இருக்கிறாள்.''

''நாடகப் பயிற்சிபெறும் மாணவி நடாகக் கொட்டகைக்குப் போகவேண்டாமா?'' என்று நான் கேட்டேன்.

''போகவேண்டாமென்று நான் சொல்லவில்லை. அம்மாவும் மாலைப் பள்ளிக்கூடம் போகிறாள்; ஆனால் அவள் என் படிப்பைத் தினசரி பார்வையிடப்போவதாக மிரட்டுவதில்லை; 'நன்றாகப் படி' என்று மட்டும் கூறுகிறாள். அவள் என்னிடம் ஆத்திரப்படும்பொழுதுகூட, நான் பணிவாக இருப்பேன். ஆனால் என் பாடத்தைப் பார்வையிடுவதாக அத்தை உதட்டளவில் சொல்வது எனக்குப் பிடிக்கவில்லை. ஏதாவது செய்வதற்கு ஒத்துக்கொண்டால் செய்யவேண்டும்; சொல்லிக்கொண்டே காலம் கடத்தக்கூடாது. அத்தை சொல்லிக் கொடுப்பாளென்று நான் சுய முயற்சி எடுக்காமல் காத்துக் கொண்டிருக்கிறேன். என்ன செய்வது? என் குணம் அப்படி!''

''உன் பொறுப்பைத் தட்டிக் கழிக்கிறாய். வேறு ஒருவர் மீது பழிபோடுகிறாய். உன் குணத்தை மாற்றிக்கொள்ள வேண்டும்'' என்றேன் நான்.

''அப்பா! உன்னைப்பற்றி என்ன? உயர்ந்த மார்க் வாங்கினவன் மாதிரி பேசுகிறாயே?''

"இதுவரை வாங்கவில்லை; இனி வாங்குவேன்."

"அப்படியா? நானும் வாங்குவேன்" என்று சிஷ்கின் பதில் அளித்தான்.

அன்று எங்களுடைய உடற்பயிற்சி ஆசிரியர் ஒரு நற் செய்தியை அறிவித்தார். கூடைப்பந்து ஆட்டத்துக்குக் 'கோர்ட்' தயாராகிவிட்டதாகவும் நாங்கள் ஆட்டக் குழு வைத் தயார் செய்யலாமென்றும் அவர் சொன்னவுடன் நாங்கள் மகிழ்ச்சியடைந்தோம். ஆட்டத்துக்கு எங்கள் பெயர்களைக்கொடுத்தோம். ஆனால் சிஷ்கினும் நானும் அந்த ஆட்டத்தில் சேரமுடியாது என்று உடற்பயிற்சி ஆசிரியர் கூறினர்.

"நல்ல மார்க் வாங்கியவர்களைத்தான் நான் எடுத்துக் கொள்வேன்" என்ருர் அவர்.

சிஷ்கின் அதிர்ச்சியடைந்து சோர்ந்துவிட்டான். பல நாட்களாகக் கூடைப்பந்துத் தவம் செய்தவனல்லவா? கூடைப்பந்து வந்துவிட்டது; மற்ற பையன்கள் ஆடப் போகிருர்கள்; எங்களுக்கு இடமில்லை! ஆனல் நான் இதைப் பற்றி கவலை கொள்ளவில்லை. வகுப்பிலே முன்னுக்கு வருவ தென்று முன்பே முடிவுசெய்துவிட்டேன்; ஆகவே விரைவில் என்னைக் கூடைப்பந்துக் குழுவுக்குக் கூப்பிடுவார்களென்று நான் உறுதியாக நம்பினேன்.

பாடங்கள் முடிந்தவுடன், வகுப்புக் கூட்டம் நடந்தது. எங்களில் பலர் முன்னேறியிருப்பதாக ஆல்கா நிகோலிவ்ஞ கூறினள். பாலர் சங்கத்தின் முதற் குழு முதலிடத்தில் இருப்பதாக அவள் சொன்னுள்; அந்தக் குழுவில் 2 மார்க் வாங்கியவனே கிடையாது, இருவர் மட்டும் 3 மார்க் வாங்கி யிருக்கிருர்கள். இந்த இருவர்கூட 4 மார்க் வாங்காவிட்டால், அந்தக் குழு 4-க்குக் குறையாமல் மார்க் வாங்கவோமென்ற வாக்குறுதியை நிறைவேற்றிவிடும். எங்களுடைய குழுவே மிகவும் மோசம் என்று ஆல்கா நிகோலிவ்ஞ கூறினள்;

ஏனென்றால் இங்கு இருவர்—சிஷ்கினும் நானும்—2 மார்க் வாங்கியிருக்கிறார்கள் என்றாள்.

“பார்த்தாயா? மீண்டும் நமது குழு வகுப்பின் கடை கோடியிலிருக்கிறது. இந்தக் கேவல நிலைக்கு முடிவுகாண நாம் ஏதாவது செய்யவேண்டும்” என்றான் யுரா.

“எல்லாம் இந்த இருவரால்தான்” என்று லோன்யா எங்களைச் சுட்டிக் காட்டினான்.

“நீங்கள் ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? குழுவுக்கே உங்களால் கெட்டபெயர். பிறர் முயற்சி செய்யும்போதும் மார்க்கைப்பற்றி கவலைப்படாமல் இருக்கிறீர்கள்” என்று எங்களைப் பார்த்து லோன்யா பேசினான். “இதற்கு ஏதாவது செய்யக் கூடாதா, மாலியேவ்?” என்று அவன் என்னைக் கேட்டதும் மற்றவர்களும் என்மீது பாய்ந்தார்கள்.

“உனக்கு என்ன சிரமம்? நன்றாகப் படிக்கவேண்டுமென்று நீ உணரவில்லையா?”

“நீங்கள் ஏன் இப்படி சந்தடி செய்கிறீகளென்று தெரியவில்லை. நான் சிரமப்பட்டுப் படிப்பதென்று தீர்மானித்து விட்டேன். பழைய கதையை ஏன் புரட்டுகிறீர்கள்?” என்று நான் சமாளித்துக்கொண்டேன்.

“தீர்மானம் மட்டும் போதாது. செய்கையில் காட்ட வேண்டும். உன் மார்க்குகளைப் பார்” என்றான் அலிக்.

“சென்ற கால் ஆண்டின் மார்க்குகள் இவை. நான் நேற்று முன்தினம்தான் தீர்மானம் செய்தேன்.”

“அருமையான பையன்! இந்தத் தீர்மானத்தை முன்பே எடுத்திருக்கக் கூடாதா?”

“போதும். சண்டைபோடாதீர்கள். பின் தங்கும் பையன்களுக்குத் தனி உதவி அளிக்கவேண்டும். உங்கள் குழுவில் பல கெட்டிக்காரப் பையன்கள் இருக்கிறார்கள்.

அவர்களில் ஒருவன் சிஷ்கினுக்கும் ஒருவன் மாலியேவுக்கும் உதவுவதற்கு முன்வரவேண்டும்'' என்று ஆல்கா நிகோலிவ்னு கூறினுள்.

''நான் மாலியேவுக்கு உதவுகிறேன்'' என்ருன் வான்யா.

''நான் சிஷ்கினுக்கு உதவுகிறேன்'' என்ருன் அலிக்.

ஆல்கா நிகோலிவ்னு அதற்கு இணங்கினுள். வகுப்புப் பையன்களுக்கு கைகொடுத்து உதவுவதற்கு வலிய முன் வந்த அவர்களை மெச்சினுள்.

கூட்டம் முடிந்த பின்னர், ஆல்கா நிகோலிவ்னு சிஷ் கினையும் என்னையும் ஆசிரியர் அறைக்குக் கூப்பிட்டு நீண்ட நேரம் பேசினுள்.

வீட்டு வேலையில் நாங்கள் போதுமான கவனம் செலுத் துவதில்லை, அல்லது அதற்குப் போதுமான நேரம் ஒதுக்குவ தில்லை என்று அவள் கூறினுள். எங்களுடைய தேக்கத்துக்கு அதுவே காரணமென்பது அவள் கருத்து. நாங்கள் தேவைக்குத் தக்கபடி மனப்பாடம் செய்வதில்லை; மனப் பாடம் செய்தாலும் உடனுக்குடன் மறந்துவிடுகிருேம். சிஷ்கின் தன் ருஷியப் பாடங்களை எழுதுவதற்கு நேரம் ஒதுக்கவேண்டும்; எழுதும் ஒவ்வொரு பதத்தைப்பற்றியும் சிந்திக்கவேண்டும் என்று கூறினுள். சிஷ்கின் இலக்கண விதிகளை மனப்பாடம் செய்யவேண்டுமென்றும் கூறினுள். அவன் அதிகமாகப் படிக்கவேண்டுமென்று சொன்னதுடன் அவனுடைய வீட்டு வேலையைக் கவனமாகப் பார்வையிடப் போவதாகவும் கூறினுள்.

''வித்யா! உன்னைப் பொறுத்தவரை, நீயாகப் பாடு பட்டுப் படிக்கவேண்டும். உனக்குச் சிரமமாக விருந்தால் உன் தாய் தந்தையரிடம் உதவி பெறுகிருயல்வா?'' என்று கேட்டாள்.

"இல்லை. நான் இப்போதெல்லாம் அப்பாவுக்குத் தொல்லை தருவதில்லை. அவர் வேலை செய்யும்பொழுது ஏன் தொந்தரவு செய்யவேண்டும்? கஷ்டமாயிருந்தால் யாராவது ஒரு பையனிடம்போய்த் தெரிந்துகொள்வேன்" என்றேன்.

"இரண்டும் ஒன்றே. நீயாக உன் வீட்டு வேலையைச் செய்வதற்குக் கற்றுக்கொள்ளவேண்டும் என்பதே என் யோசனை. உன் கணக்கை வைத்துக்கொண்டு வழி புரிகிற வரையில் சிந்தித்தால், கொஞ்சங் கொஞ்சமாகக் கற்றுக் கொள்வாய். எப்போதும், உனக்காகப் பிறரைச் சிந்திக்கச் சொன்னால், ஒருபோதும் கற்றுக்கொள்ளமாட்டாய். நாங்கள் ஏன் வீட்டுக்கணக்குக் கொடுக்கிறோம்? சுய சிந்தனையில் ஆர்வம் உண்டாகவேண்டும்; முயற்சி செய்யவேண்டும் என்றுதான்."

"இனிமேல் அப்படிச்செய்ய முயல்வேன்" என்றேன்.

"அதுதான் நல்ல பையனுக்கு அடையாளம். முயற்சி செய். எவ்வளவு சிரமப்பட்டுச் சிந்தனை செய்தாலும் வழி விளங்காவிட்டால், உன் வகுப்புப் பையன்களில் ஒருவரை நாடி உதவி பெறலாம்."

"வேண்டாம். நானே கணக்கைப் போட்டுவிடுவேன். முடியாவிட்டால் வான்யாவிடம் போகிறேன்."

"நீ கஷ்டப்பட்டு முயற்சி செய்தால் எந்த கணக்கையும் போட்டுவிடுவாய்" என்றாள் ஆல்கா நிகோலிவ்னா.

## 9. சுயமுயற்சியின் வெற்றி

நான் வீட்டுக்குப் போனவுடன் படிப்பில் முனைந்தேன். என் உறுதியைக் கண்டு நானே வியப்படைந்தேனென்றால் பார்த்துக்கொள்ளுங்கள்! ஆல்கா நிகோலிவ்னா கூறியமாதிரி, முதலில் கடினமான பாடத்தை எடுத்துக்கொண்டேன். அன்று வீட்டுக் கணக்கு ஒன்று இருந்தது. செயலூக்கத்துடன் கணக்கு நோட்டைத் திறந்து வீட்டுக் கணக்கைப் படித்தேன் :—

"ஒரு கடையில் எட்டு ரம்பங்களும் அதைப்போல மூன்று மடங்கு கோடரிகளும் இருந்தன. அந்தக் கடைக்காரன் 3 ரம்பங்களையும் கோடரிகளில் பாதியும் 84 ரூபிகளுக்குத் தச்சனிடம் விற்றான். மீதி ரம்பங்களையும் கோடரிகளையும் 100 ரூபிளுக்கு வேறு தச்சனுக்கு விற்றான். ஒரு ரம்பத்தின் விலை என்ன? ஒரு கோடரியின் விலை என்ன?"

முதலில் ஒன்றுமே விளங்கவில்லை. ஆகவே மீண்டும் படித்தேன். மூன்றாவது தடவையும் படித்தேன். மாணவன் கணக்கைப் போடுவதில் கஷ்டப்பட வேண்டுமென்பதற்காக, கணக்குப் பயிற்சிகளைத் தயாரிப்பவர்கள், ஒரு தொடர்புமில்லாத விஷயங்களைச் சேர்த்து குழப்புகிறார்கள்! "ஒரு கடையில் 8 ரம்பங்களும் அதைப்போல மூன்று மடங்கு கோடரிகளும் இருந்தன" என்று இந்தக் கணக்குச் சொல்கிறது. 24 கோடரிகள் என்று சொல்லித் தொலைக்கக் கூடாதா? 8 ரம்பங்கள் இருந்தால், அதைபோல மூன்று மடங்கு கோடரிகள் இருந்தால், [8×3=]24 கோடரிகள் என்று எழுதாமல் ஏன் சுற்றிவளைக்கவேண்டும்? மறுபடியும் பாருங்கள் : "மூன்று ரம்பங்களையும் கோடரிகளில் பாதியையும் 84 ரூபிளுக்குத் தச்சனிடம் விற்றான்." கோடரிகளில் பாதி என்று ஏன் போடவேண்டும்? 12 கோடரிகள் என்று

சுலபமாகச் சொல்லக்கூடாதா? 24 கோடரிகள் இருக்கும் பொழுது, அவற்றில் பாதி 12 தானே? மிச்சமுள்ள ரம்பங் களையும் கோடரிகளையும் 100 ரூபிகளுக்கு வேறு தச்சனிடம் விற்ருன் என்று இருப்பதையும் பாருங்கள். மிச்சமுள்ளவை என்று ஏன் சொல்லவேண்டும்? ஏன் இந்த மடமை? 24 கோடரிகள் இருந்து 12 விற்றுப்போய்விட்டால், மிச்சம் 12 அல்லவா? ஆரம்பத்திலேயே 8 ரம்பங்கள் இருந்து அவற்றில் மூன்று விற்றுப்போய்விட்டால் மிச்சம் 5 அல்லவா? பிறகு ஏன் அப்படிச் சொல்லக்கூடாது? எதற்காக மடத்தனமாகச் சுற்றிவளைக்கிருர்கள்? இதற்குப் பிறகுப் பள்ளிப் பையன் களுக்குக் கணக்குப் போடத் தெரியவில்லையென்று பழி சொல்லவும் அவர்கள் அஞ்சுவதில்லை!

என் முறையில், பகுத்தறிவுக்கு உகந்ததாகக் கணக் கைத் திருப்பி எழுதினேன் :—

“ஒரு கடையில் 8 ரம்பங்களும் 24 கோடரிகளும் இருந் தன. கடைக்காரன் 12 கோடரிகளையும் 3 ரம்பங்களையும் 84 ரூபிளுக்கு தச்சனிடம் விற்ருன்; 12 கோடரிகளையும் 5 ரம்பங்களையும் 100 ரூபிளுக்கு வேறு தச்சனிடம் விற்ருன். ஒரு ரம்பத்தின் விலை என்ன? ஒரு கோடரியின் விலை என்ன?”

எழுதிய பின் மீண்டும் படித்தேன். கணக்குக் கொஞ்சம் சிறியதாகிவிட்டது. ஆனல் அதை எப்படிப் போடுவதென்று எனக்குத் தெரியவில்லை; ஏனென்ருல் இந்த எண்களெல்லாம் என் மூளையில் தனித் தனியாகப் பதிய வில்லை; அவை ஒன்ருேடொன்று குழம்பித் தெளிவான சிந் தனைக்குத் தடைபோட்டன. ஆகவே எண்களைக் குறைத்துக் கணக்கைச் சுருக்க முயன்றேன். கடையில் எத்தனை ரம்பங் களும் கோடரிகளும் இருந்தன என்பது தேவையில்லை; அவை அனைத்தையும் கடைக்காரன் விற்றுவிட்டானல்லவா? ஆகவே, கணக்கை இவ்வாறு சுருக்கினேன் :

“ஒரு தச்சன் 12 கோடரிகளையும் 3 ரம்பங்களையும் 84 ரூபிளுக்கு வாங்கினுன்.

இன்னொரு தச்சன் 12 கோடரிகளையும் 5 ரம்பங்களையும் 100 ரூபிளுக்கு வாங்கினான்.

ஒரு ரம்பத்தின் விலை என்ன? ஒரு கோடரியின் விலை என்ன?"

கணக்கைச் சுருக்கிவிட்டேன். ஆனால் நான் திருப்தி யடையவில்லை. அதை மேலும் சுருக்க விரும்பினேன். இந்த ரம்பங்களையும் கோடரிகளையும் எவர் வாங்கினால் என்ன? அவர்கள் என்ன விலைக்கு வாங்கினார்களென்பதுதானே பிரச்சினை? செம்மையாக யோசித்துவிட்டுக் கடைசியாகப் பின்வருமாறு எழுதினேன் :—

"12 கோடரிகளும் 3 ரம்பங்களும் 84 ரூபிள் விலை. 12 கோடரிகளும் 5 ரம்பங்களும் 100 ரூபிள் விலை, ஒரு ரம்பம், ஒரு கோடரி விலை என்ன?"

இதற்குமேல் அதைச் சுருக்க முடியாது. ஆக அதைப் போடுவதற்கு வழிகாண முனைந்தேன். 12 கோடரிகளும் 3 ரம்பங்களும் 84 ரூபிளானால், கோடரிகளையும் ரம்பங்களையும் கூட்டி அதனால் 84ஐ வகுக்கலாமென்று முதலில் எண்ணினேன். 12 கோடரிகளும் 3 ரம்பங்களும் சேர்ந்தால் 15 என்று போட்டேன்; 84ஐ 15ஆல் வகுத்தால், மிச்சம் வருகிறது. இது தப்பு என்று எண்ணி வேறு வழி காண முயன்றேன். 12 கோடரிகளையும் 5 ரம்பங்களையும் கூட்டி 17 என்று போட்டு, 100–ஐ 17-ஆல் வகுக்க முயன்றேன். அதிலும் மிச்சம் வந்தது. பிறகு, 24 கோடரிகளையும் 8 ரம்பங்களையும் கூட்டி, எல்லா ரூபிளையும் கூட்டி, அத்தொகையைக் கோடரிகள் ரம்பங்கள் ஆகியவற்றின் தொகையால் வகுக்க முயன்றேன். அதிலும் விடை கிடைக்கவில்லை. கோடரிகளிலிருந்து ரம்பங்களைக் கழித்து, மிச்சம் கிடைக்கும் எண்ணால் ரூபிளை வகுக்க முயன்றும் பயனில்லை. ரம்பங்களையும் கோடரிகளையும் தனித் தனியாகக் கூட்டிவிட்டு, ரூபிள்களிலிருந்து கோடரிகளின் எண்ணைக் கழித்துவிட்டு மிச்சத்தை ரம்பங்களின் எண்ணால் வகுக்க முயன்

றேன். இன்னும் பல பல வழிகளில் போட்டுப் பார்த்தேன். ஒன்றிலும் பயனில்லை. ஆகவே நோட்டை எடுத்துக் கொண்டு வான்யாவிடம் ஓடினேன்.

"வான்யா, இதைக் கேள். 12 கோடரிகளும் 3 ரம்பங்களும் 84 ரூபிள் என்றால் 12 கோடரிகளும் 5 ரம்பங்களும் 100 ரூபிள் என்றால், ஒரு ரம்பத்தின் விலை என்ன, ஒரு கோடரியின் விலை என்ன என்று எப்படி கண்டுபிடிப்பது" என்று கேட்டேன்.

"நீ சொல், பார்ப்போம்."

"12 கோடரிகளையும் 3 ரம்பங்களையும் கூட்டி, 84ஐ 15 ஆல் வகுக்கவேண்டுமென்று நான் நினைக்கிறேன்."

"நில்! ரம்பங்களையும் கோடரிகளையும் எதற்காகக் கூட்டுகிறாய்?"

"அவை மொத்தம் எத்தனை என்பதைத் தெரிந்துகொள்வேன்; பிறகு அந்த மொத்த எண்ணால் 84ஐ வகுத்தால் ஒன்றின் விலை என்ன என்பதை கண்டுபிடிக்கலாம்."

"ஒன்று என்ன? ஒரு ரம்பமா அல்லது ஒரு கோடரியா?"

"ஒரு ரம்பம் அல்லது ஒரு கோடரி."

"அவை இரண்டும் ஒரே விலை இல்லை!"

"அப்படியா?"

"ஆம். அவை இரண்டுக்கும் ஒரே விலை என்று கணக்கில் சொல்லவில்லை. தனித்தனியாக ரம்பத்தின் விலையையும் கோடரியின் விலையையும் கண்டுபிடிக்கும்படி கேட்டிருக்கிறார்கள். ஆகவே அவற்றை கூட்டக்கூடாது."

"அவற்றைக் கூட்டினாலும் சரி, தனித்தனியாய் வைத்திருந்தாலும் சரி, வழி தெரியவில்லை."

"நீ கூட்டியதால்தான் விடை கிடைக்கவில்லை."

“பிறகு எப்படிப் போடுவது?”

“உன் புத்தியை உபயோகித்துப் பார்.”

“அதைத்தான் 2 மணி நேரமாகச் செய்து பார்க்கிறேன்!”

“சரி. கணக்கைக் கவனமாகப் படி. என்ன சொல்லுகிறது?”

“12 கோடரிகளும் 3 ரம்பங்களும் 84 ரூபிள்; 12·கோடரிகளும் 5 ரம்பங்களும் 100 ரூபிள் என்று சொல்கிறது.”

“இரண்டு தடவைகளிலும் வாங்கிய கோடரிகளின் எண்ணிக்கை ஒன்றே; இரண்டாவது தடவை கூடுதலாக இரண்டு ரம்பங்கள் வாங்கப்பட்டிருக்கிறது. இல்லையா?”

“ஆம், கவனித்தேன்.”

“இரண்டாவது வாங்கியவர் கூடுதலாக 16 ரூபிள் கொடுத்திருப்பதையும் கவனித்தாயா?”

“ஆம், அதையும் கவனித்தேன். முதல்தடவை வாங்கியவர் 84 ரூபிள் விலைகொடுத்தார்; இரண்டாவது தடவை வாங்கியவர் 100 ரூபிள் விலைகொடுத்தார். 100–ல் 84–ஐக் கழித்தால், மிச்சம் 16.”

“சரி. எதற்காக 16 ரூபிள் கூட்டிக்கொடுத்தார்கள்?”

“அது சுலபம். இரண்டு ரம்பம் கூடுதலாக வாங்கியதால் 16 ரூபிள் அதிகமாகக் கொடுத்தார்கள்.”

“அப்படியனால் இரண்டு ரம்பங்களின் விலை 16 ரூபிள் அல்லவா?”

“ஆமாம்.”

“அப்பொழுது ஒரு ரம்பத்தின் விலை என்ன?”

“இரண்டின் விலை 16 என்றால் ஒன்றின் விலை 8.”

"அது சரி. இப்பொழுது ஒரு ரம்பத்தின் விலைதெரியும்."

"இவ்வளவுதானு? வீட்டுமாடியிலிருந்து விழுவதைவிட சுலபம்! இதை ஏன் நானே புரிந்துகொள்ளவில்லை?"

"சரி நில். ஒரு கோடரியின் விலை என்னவென்பதை நீ கண்டுபிக்கவேண்டும்."

"அது கஷ்டமேயில்லை. 12 கோடரிகளும் 3 ரம்பங்களும் 84 ரூபிள். 3 ரம்பங்களின் விலை 24 ரூபிள். 84–ல் 24–ஐக் கழித்தால் மிச்சம் 60. அதாவது 12 கோடரிகளின் விலை 60 ரூபிள். 60–ஐ 12–ஆல் வகுத்தால் ஒரு கோடரி விலை 5 ரூபிள் என்று அறியலாம்."

வான்யாவுக்கு வந்தனம் தெரிவித்துவிட்டு வீட்டுக்குச் சென்றேன். இவ்வளவு சுலபமான கணக்கை அவன் உதவியில்லாமல் போடமுடியாமைக்காக என்னையே வெறுத்துக் கொண்டேன். ஐந்துமணி நேரமானுலும் அடுத்த கணக்கை நானே போடுவதென்று உறுதி செய்துகொண்டேன்.

மறுநாள் எங்களுக்கு வீட்டுக்கணக்கு ஒன்றும் கிடையாது. நான் பெரிதும் மகிழ்ச்சியடைந்தேன். எப்பொழுது பார்த்தாலும் கணக்குப்போட்டுக்கொண்டேயிருக்க முடியுமா?

"கணக்கிலிருந்து ஒருநாளாவது ஓய்வு கிடைத்தது நல்லது!" என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன்.

ஆனுல் அந்த ஓய்வு கிடைக்கவில்லை. பாடங்களைப் படிக்கத் தொடங்கினேன், லிக்கா என்னிடம் வந்துவிட்டாள். "வித்யா, எங்களுக்கு ஒரு கணக்குக் கொடுத்திருக்கிருர்கள். அதை என்னுல்போட முடியவேவில்லை. கொஞ்சம் சொல்லிக் கொடுக்கிருயா?"

நான் அந்தக் கணக்கைப் பார்த்தேன்; உடனே என் தேகம் சில்லிட்டுப்போய்விட்டது. என்னுல் அதைப்போட முடியாவிட்டால்? அதன் பிறகு, அண்ணனின் அதிகாரம் செல்லுமா?

ஆகவே அவளிடம் கூறினேன் : "இப்பொழுது எனக்கு வேலை அதிகம். வீட்டு வேலை குவிந்துகிடக்கிறது. வெளியே போய்வா. திரும்பிவந்ததும் உனக்கு உதவுகிறேன்."

அவள் வெளியே போயிருக்கும்பொழுது கணக்கைப் போட்டுக் கற்றுக்கொண்டால் அவள் திரும்பியவுடன் விளக்கலாம் என்று நான் எண்ணினேன்.

"சரி, என் தோழி வீட்டுக்குப்போய் வருகிறேன்" என்ருள் லிக்கா.

"சரி, போ. விரைவாகத்திரும்பாதே. இரண்டு மணி நேரம் வெளியே தங்கலாம்; மூன்று மணி நேரம்கூடத் தாமதிக்கலாம். நீண்ட தூரம் நடந்துவிட்டு வா."

அவள் போனவுடன், அவளுடைய கணக்குப் புத்தகத்தை எடுத்து அந்த கணக்கைப் படித்தேன் :—

"ஒரு சிறுவனும் ஒரு சிறுமியும் கொட்டைகளைப் பொறுக்குவதற்குக் காட்டுக்குச் சென்ருர்கள். இருவருமாக 120 கொட்டைகள் பொறுக்கினுர்கள். சிறுவன் பொறுக்கிய கொட்டைகளில் பாதி சிறுமி பொறுக்கினுள். அவர்கள் தனித்தனியாக எத்தனை கொட்டைகள் பொறுக்கினுர்கள்?"

இது மிகவும் எளிதானதாகத்தோன்றியது. இதைப் படித்தவுடன் சிரிக்கலாமென்று நினைத்தேன். இது ஒரு கணக்கா என்று எண்ணினேன். 120–ஐ 2–ஆல் வகுத்தால் 60 வருகிறது. ஆகவே சிறுமி பொறுக்கியது 60 கொட்டைகள். 120–லிருந்து இதை (60)-க் கழித்தால் சிறுவன் பொறுக்கியது எத்தனை என்பதை அறியலாம். நில். நில். இதில் ஏதோ தவறு இருக்கிறது. சிறுவனும் சிறுமியும் தலைக்கு 60 கொட்டைகள் பொறுக்குவதாக விடை வருகிறது; ஆனல் சிறுவன் பொறுக்கியதில் பாதிதான் சிறுமி பொறுக்கியதாகக் கணக்கு சொல்கிறது. சரி. 60-ஐ இரண்டால் வகுக்க வேண்டும். $\frac{60}{2} = 30$. ஆகவே பையன் 60 கொட்டைகளைப்

பொறுக்கினான்; பெண் 30 கொட்டைகளைப் பொறுக்கினாள். இவ்வாறு போட்டுவிட்டு நான் புத்தகத்தின் இறுதியில் உள்ள விடையைப் பார்த்தேன். அங்குச் சிறுவன் 80, சிறுமி 40 என்று போட்டிருந்தது.

மீண்டும் யோசிக்கத் தொடங்கினேன்; மறுபடியும் கணக்கைப் படித்தேன். இருவரும் 120 கொட்டைகளைப் பொறுக்கினார்கள் என்று சொல்கிறது. பையன் 60-ம் பெண் 30-ம் பொறுக்கியிருந்தால், மொத்தம் 90 தானாகிறது. ஆகவே இது தவறு. மீண்டும் போட்டுப் பார்த்தேன். ஆனால் 60- 30-ம் என கிடைத்தது. புத்தக விடை 40, 80 என்று ஏன் சொல்லவேண்டும்? எனக்குத் தலையும் புரிய வில்லை, வாலும் புரியவில்லை.

பன்னிரண்டு தடவைகளாவது கணக்கைப் படித்திருப் பேன். யோசித்து யோசித்துப் பார்த்தேன். ஆனால் வெளிச் சம் கிடைக்கவில்லை.

"நான்காவது பையன்களால் போட முடியாத கணக்கு களை மூன்றாவது மாணவர்களுக்குக் கொடுக்கிறார்களே!" என்று மூன்றாவது மாணவருக்காக இரங்கினேன்.

மீண்டும் யோசித்தேன். எனக்கே அவமானமாயிருந் தது. லிக்கா என்ன சொல்லுவாள்? என் சிரமத்தின் பயனோ பூஜ்யம், மூளை வெறுமையாயிருந்தது. 120 கொட்டைகள். சிறுமியைப்போல இரண்டு மடங்கு கொட்டைகளைச் சிறுவன் பொறுக்கினான். இவ்வளவுதான், வேறு எண்களே கிடை யாது. 120-ஐயும் 2-ஐயும் வைத்துக்கொண்டு. எத்தனை தடவைகள் கூட்டல், கழித்தல், பெருக்கல், அல்லது வகுத் தல் போட்டாலும் 40-ம் 80-ம் ஒரு பொழுதும் விடையாக வராது.

வேறுவழி தெரியாமல் நோட்புத்தக பக்க ஓரத்தில் ஒரு மரத்தை வரைந்தேன். அதன் கிளைகளில் 120 கொட்டைகள் தொங்குவதாகச் சித்திரித்தேன். கீழே ஒரு சிறுவனும் சிறுமி

யும் வரைந்தேன். இவ்வாறு வரையும் பொழுதே கணக்கைப்பற்றி யோசித்தேன். ஆனால் என் சிந்தனை தவறான பாதைக்குத் திரும்பிக்கொண்டேயிருந்தது. சிறுமியைப்போல இரண்டு மடங்கு கொட்டைகளைச் சிறுவன் எப்படிப் பொறுக்கினான் என்று முதலில் யோசித்தேன். அவன் மரத்தின் மேல் கிளைகளுக்கு ஏறிப்போயிருக்கவேண்டும். அவள் அடிக்கிளைகளிலிருந்து பறித்திருக்கவேண்டும் என்று ஊகித்தேன். பிறகு நானே கொட்டைகளைப் 'பறிக்க'த் தொடங்கினேன். அதாவது, அவற்றை ஒவ்வொன்றாக மரத்திலிருந்து அழித்தேன்; சிறுமிக்கும் சிறுவனுக்கும் அவற்றைக் கொடுத்தேன்; அதாவது அவர்களுடைய தலைகளுக்கு நேராக கொட்டைகளை வரைந்தேன். பிறகுதான், சிறுவனுக்கும் சிறுமிக்கும் சட்டைப் பைகளிருக்கவேண்டுமென்று உணர்ந்தேன். சிறுவனுக்கு சட்டையின் இரு பக்கங்களிலும் இரு பைகளை வைத்தேன்; சிறுமியின் மேல் சட்டையில் ஒரு பைவைத்தேன். சிறுமிக்கு ஒரே பை இருந்ததால்தான் அவள் குறைவாகப் பறித்தாளோ என்று என்று எண்ணினேன். பையனுக்கு 2 பைகளும் பெண்ணுக்கு ஒரு பையும் நான் வரைந்திருப்பதை உற்று நோககிக்கொண்டு உட்கார்ந்தேன்; கொஞ்சங் கொஞ்சமாக எனக்கு ஞானோதயம் ஏற்பட்டது. அவர்களுடைய தலைகளுக்கு நேராக வரைந்த கொடைகளை அழித்தேன். மூன்று 'பாக்கெட்டு'களிலும் கொட்டைகள் நிரம்பியிருப்பதைக் காட்டுவதற்காக, அந்தப் பைகளுக்கு தனிச்சாயல்கொடுத்தேன். இப்போது, கொட்டைகளைப் பங்குபோட்டுவிட்டேன்; பைனுடைய இருபைகளிலும் பெண்ணின் ஒருபையிலுமாக. திடீரென்று மின்னல் தோன்றியது மாதிரி எனக்கு கணக்குப் புரிந்துவிட்டது. 120–ஐ மூன்றால் வகுக்கவேண்டாமா? அப்பொழுதுதானே சிறுமிக்கு ஒரு பாகமும் சிறுவனுக்கு இரண்டு பாகங்களும் கொடுக்கமுடியும். அப்பொழுதுதான் சிறுவன் பறித்தவை சிறுமி பறித்ததைப் போல இரண்டு மடங்கு இருக்கும். 120–ஐ 3–ஆல் வகுத்தேன்; 40 வந்தது. சிறுமியின் பங்கு இதுதான். 40–ஐ 2 ஆல் பெருக்கினேன்; சிறுவனின் பங்கு 80. புத்தகத்தின்

விடைப் பகுதியிலும் இதையேதான் கொடுத்திருக்கிருர்கள். எனக்கு மகிழ்ச்சியில் தலைகால் தெரியவில்லை. நானே ஒரு கணக்கைப் போட்டேனென்ற தகவலைத் தெரிவிக்க வான்யாவிடம் ஓடினேன்.

தெரிவில் ஓடிக்கொண்டிருக்கும்பொழுது, என்னை நோக்கிச் சிஷ்கின் வந்தான்.

“சிஷ்கின், இதைக்கேள். ஒரு சிறுவனும் ஒரு சிறுமியும் காட்டுக்குப்போய் 120 கொட்டைகளைப் பொறுக்கினுர்கள். சிறுமியைப்போல இரண்டு மடங்கு கொட்டைகளைச் சிறுவன் எடுத்துக்கொண்டான். இதை எப்படிப் போடுவாய்?”

“அந்தப் பேராசை பிடித்த பையன் முகத்தை வீங்க வைப்பேன்!”

“நான் அதைக் கேட்கவில்லை. சிறுமியைப்போல சிறுவனுக்கு 2 மடங்கு கொடுப்பதற்கு எப்படிப் பிரிப்பாய்?”

“நீ எப்படியாவது பங்குபோட்டுக்கொள். எனக்கு அந்தப் பணிவேண்டாம். அவர்கள் ஏன் சமமாக பிரித்துக் கொண்டு தொலையக்கூடாது?”

“போடா, முட்டாள். அது ஒரு கணக்கு.”

“என்ன கணக்கு?”

“கணிதப் பாடத்தின் கணக்கு.”

“சரி. வாயை மூடு. நேற்று முன் தினம் நான் வாங்கிய சீமைப்பெருச்சாளிப் பன்றி செத்துவிட்டது. நீ உன் அற்பக் கணக்குகளைப்பற்றி தொல்லைகொடுக்கிருய்” என்று சிஷ்கின் சத்தம்போட்டான்.

“நிரம்ப வருத்தப்படுகிறேன்! நீ சோகத்தில் ஆழ்ந்திருப்பது எனக்குத் தெரியாது” என்று கூறி மன்னிப்புக் கேட்டேன்.

நேராக வான்யா வீட்டுக்கு ஓடினேன்.

"இதைக்கேள். ஒரு சிறுவனும் ஒரு சிறுமியும் 120 கொட்டைகளைப் பொறுக்கினர்கள்; சிறுவன் சிறுமியைப் போல 2 மடங்கு பொறுக்கினன். விடை கிடைப்பதற்கு, 120-ஐ 3-ஆல் வகுக்கவேண்டுமல்லவா?"

"ஆம். சிறுமிக்கு ஒருபாகம், சிறுவனுக்கு 2 பாகங்கள் அதனால் சிறுமியைப்போல இரண்டு பங்கு சிறுவனுக்கு" என்றான் வான்யா.

"நானே இந்தக் கணக்கைப்போட்டேன். இதைச் சிக்கலாகச் செய்திருந்தார்கள்; எவரும் போட முடியாதென்று நினைத்தார்கள். ஆனால் நான் போட்டுவிட்டேன்" என்று வான்யாவிடம் கூறினேன்.

"பலே! பலே!" என்றான் அவன்.

"இனிமேல் நானே என் கணக்குளைப் போடப் போகிறேன்."

"அப்படித்தான் செய்யவேண்டும். அதுதான் நல்ல முறை; அதிகம் கற்றுக்கொள்ளமுடியும்."

நான் வீட்டுக்குத் திரும்பினேன். ஓடிவரும் வழியில் யுராவைச் சந்தித்தேன்.

"யுரா, கேள். ஒரு சிறுவனும் ஒரு சிறுமியும் கொட்டை பொறுக்குவதற்குக் காட்டுக்குப் போனார்கள்......"

"போனார்களா? போகட்டும். நீ ஏன் வீட்டில் உட்கார்ந்து படிக்காமல் நாடோடியாகத் திரிகிறாய்?"

"நான் படித்துக்கொண்டுதானிருக்கிறேன். உண்மையாக."

"படித்துக் கிழிக்கிறாய்! நீயும் உன் நண்பன் சிஷ்கினும் வகுப்புக்கே அவமானம்!"

"நான் நிஜமாகப் படிக்கிறேன். சிஷ்கினுடைய சீமைப் பெருச்சாளி செத்துவிட்டது. நீ எங்கே போகிருய்?"

"எப்படிப் படிக்கிருய் என்று பார்க்க உன் வீட்டுக்குப் போனேன். நீ வீட்டில் இருக்கவில்லை."

"யுரா நான் என் பாடத்தைப் படித்துக்கொண்டிருந் தேன். இது சத்தியம். நானே ஒரு கணக்கைப்போட்டேன். அதைப்பற்றி வான்யாவிடம் சொல்லுவதற்காக ஒரு பாய்ச்ச லில் போய்வந்தேன். நீ என்ஞேடு வா, உனக்குக் காட்டு கிறேன்" என்று நிமிர்ந்து நின்று பதில் அளிந்தேன்.

நாங்கள் இருவரும் வீட்டுக்குப்போஞேம். கொட்டை களைப்பற்றிய கணக்கை அவனுக்கு காட்டினேன்.

"இதுவா? இது மூன்ருவது கணக்கு!" என்ருன் யுரா.

"ஆமாம்! நான் சென்ற ஆண்டுக் கணக்கை திரும்பப் போடுகிறேன். அதை நான் நன்கு அறிந்திருக்கிறேஞ என்று பார்க்கவேண்டாமா? போனஆண்டு நான் சரியாகக் கணக்குப்போடவில்லை, பார். அதை ஈடு செய்ய வேண்டாமா?"

"இதுதான் சரியான பேச்சு. முன்ஞல் நடந்ததை நீ தெரிந்துகொண்டால், மற்றவர்களைப் பிடிப்பது சுலபம்."

யுரா போய்விட்டான். உடனே லிக்கா வந்துவிட்டாள். அவளுக்கு நான் கணக்கை விளக்கினேன். கிளைகளில் கொட்டைகள் தொங்க மரத்தை வரைந்து, இரண்டு பாக் கெட்டுகளுடன் சிறுவனும் ஒரு பாக்கெட்டுடன் சிறுமியும் மரத்தடியில் நிற்பதை வரைந்து படத்தின் உதவியுடன் விளக்கினேன்.

"வித்யா! எவ்வளவு தெளிவாகச் சொல்லிக்கொடுக் கிருய்! அற்புதமாயிருக்கிறது! நாஞக இதை ஒருபோதும் போட்டிருக்கமாட்டேன்" என்ருள் லிக்கா.

''இது அ, ஆ மாதிரி! உனக்குக் கணக்குப் போடுவதில் கஷ்டமிருந்தால் என்னைக்கேள். சுலபமாகப்போடுவதற்கு நான் சொல்லிக்கொடுக்கிறேன்.''

ஜனங்கள் எப்படி மாறுகிறார்களென்பதே ஒரு வேடிக்கைதான். நான் எப்பொழுதுமே உதவி தேவைப் படுகிறவனாக இருந்தேன்; இப்பொழுது மற்றவருக்கு உதவு கிறேன். ஆனால் பெரிய வேடிக்கை என்னவென்றால், நான் இன்னும் கணக்கில் 2 மார்க் வாங்குவதுதான்!

# 10. விளையாட்டுக் குணம்

மறுநாள் பொழுதுவிடிந்தது; ஜன்னல் வழியாக வெளியே பார்த்தேன். பனிக்காலம் தொடங்கிவிட்டது. வீட்டின் பின்புறமெல்லாம் உறைபனியால் மூடியிருந்தது. எங்கும் வெண்மையாகவிருந்தது; தரையும் கூரையும் மரங்களும் மரங்களின் கிளைகளும் உறைபனியில் மறைந்திருந்தன. கிளைகளின் மீதிருந்த பனி, சரிகைமாதிரியிருந்தது. பனிப் பரப்பில் சறுக்குவதற்கென்று அணியப்பெறும் மிதியடியை—அம்மா பரிசாகத் தந்ததை-அணிந்துகொண்டு குளத்துக்குப் போக விருப்பம்தான்; "பனி உறைந்திருக்கிறதா, சுலபத்தில் உடைந்து கரைகிறதா?" என்று பார்க்க ஆசைதான்; ஆனல் பள்ளிக்கூடம் போகவேண்டுமே! பள்ளிக்கூடம் முடிந்தவுடன் வீட்டு வேலையில் முனைந்துவிட்டேன்; அது முடிந்ததும் லிக்காவின் கணக்குப் புத்தகத்திலிருந்து பல கணக்குகளைப் போட்டுப்பார்த்தேன்.

சென்ற ஆண்டு கணக்கை அ முதல் ஃ முடிய போட்டு விடுவதென்று தீர்மானித்துவிட்டேன். பல கணக்குகள் சுலபமாகத்தானிருந்தன; சில கணக்குகள் தொல்லைதந்தன. எனக்கு அதுபற்றிக் கவலையில்லை. ஒரு கணக்கைப்போட்டு முடிக்காமல் அடுத்த கணக்குக்குப்போவதில்லை. ஒரே நாளில் புத்தகம் முழுவதையும் முடிக்கமுடியுமா? இரண்டு அல்லது மூன்று வாரத்தில்தான் முடித்தேன். இந்த நாட்களில், பனி விளையாட்டுக்கு மாலை நேரம் மாத்திரமே கிடைத்தது. இருந்தாலும் சென்ற ஆண்டுக் கணக்குகளைப்போட்டது எவ்வளவு பயனுள்ளதாக இருந்தது! அதற்குப் பிறகு, நான்காவது கணக்குகளை எவருடைய உதவியுமில்லாமல் போட்டேன். நான்காவதிலுள்ள பல கணக்குகள் மூன்ருவது கணக்குகள் மாதிரியேதான்; அவற்றைக் காட்டிலும் கொஞ்சம் கஷ்டம். ஆனல் கடினமான கணக்குகளைக்

கண்டு நான் இப்பொழுது அஞ்சுவதில்லை; அவற்றைப் போடுவதில்தான் எனக்கு அலாதியான ஆனந்தம். கணக்கு என்றால் பேயோ பூதமோ என்று பயந்தகாலம் போய்விட்டது. என் மனத்திலிருந்து ஒரு பாரம் இறங்கிவிட்டமாதிரி இருந்தது. ஆல்கா நிகோலிவ்னாவுக்கு என்னிடம் பரம திருப்தி; அவள் எனக்கு நல்ல மார்க் கொடுத்தாள். நான் பின்தங்கி விட்டதாக மற்ற பையன்கள் தொல்லை கொடுப்பதுமில்லை. என் முன்னேற்றத்தைப்பார்த்து அப்பாவும் அம்மாவும் அகமகிழ்ந்தனர். என்னைக் கூடைப்பந்து ஆட்டத்தில் சேர்த்துக் கொண்டார்கள். அங்கு ஒன்றுவிட்டொருநாள் 2 மணி நேரம் விளையாடினேன். கூடைப்பந்து இல்லாதபொழுது பனியில் நடந்து விளையாடுவேன்; அல்லது பனிச் செருப்பு அணிந்து ஹாக்கி ஆடுவேன்! விளையாட்டுக்குக் குறைவா?

சிஷ்கின் தன் பாடங்களில் கவனத்தை செலுத்துவதற்குப் பதிலாகச் சீமைப் பெருச்சாளிகளும் சுண்டெலிகளும் ஆமைகளும் வாங்கி வளர்ப்பதில் முனைந்துவிட்டான். அவன் மூன்று முள்ளெலிகளைக்கூட வாங்கினான். ஒரு பையனுக்கு மூன்று முள்ளெலிகள் எதற்காக? இந்தப் பிராணிகளுக்குத் தீனி போடுவதற்கும் அவற்றைப் பராமரிப்பதற்குமே அவனுக்கு நேரம் சரியாகவிருந்தது. அவையும் ஏதாவது நோய்களை வரவழைத்துக்கொண்டேயிருந்தன; செத்துக்கொண்டும் இருந்தன. இவற்றுக்கும் மேலாக, லாப்ஸிக் வேறு இருந்தது. லாப்ஸிக் ஒரு நாய்க்குட்டி. அது பெரியதாக இருந்தது; ஆனால் இளவயது, ஓயாத விளையாட்டு; கறுத்த மேனி; மேலெல்லாம் ரோமம்; நீண்ட காதுகள். ஒருநாள் சிஷ்கின் இந்தநாய்க்குட்டியைத் தெருவில் கண்டான். அது அவனோடு வந்துவிட்டது.

இவ்வளவு அலுவல்களுக்கிடையே சிஷ்கினால் படிக்க முடியுமா? அவனுடைய தாயார் இருபது தடவைகள் சொன்ன பிறகுதான் வீட்டு வேலையில் உட்காருவான். வேலை முடிந்து வீட்டுக்கு வந்தவுடன் "பாடங்களைப் படித்துவிட்டாயா?" என்பதே அம்மாவின் முதல் கேள்வியாயிருந்தது.

"இன்னும் இல்லை; இதோ, ஒரு நிமிஷத்தில்" என்று சிஷ்கின் பதிலளிப்பான்.

"இப்பொழுதே படிக்க உட்கார்."

"ஒரு நிமிஷம் அம்மா, ஆமைக்குத் தீனிபோட்டு விட்டுப் படிக்கிறேன்."

அவனுடைய தாயார் சமையல் வேலையைக் கவனிக்கப் போவாள்; சிஷ்கின் ஆமைக்கு உணவு அளிப்பான். அதற்குப் பிறகு, சீமைப்பெருச்சாளிக்குக் கூடு கட்டவேண்டுமென்று ஞாபகம் வரும்; அதில் உட்கார்ந்துவிடுவான். கொஞ்ச நேரத்தில் அவன் தாயார் திரும்பிவந்து பார்த்தால் கூடுகட்டிக்கொண்டிருப்பான்.

"எப்பொழுது படிக்கப்போகிறாய்?"

"ஒரு நிமிஷத்தில் அம்மா!"

"அரைமணிக்கு முன்னால் அப்படித்தான் சொன்னாய். போ, புத்தகத்தைக் கொண்டுவா."

"கூடுகட்டிவிடுகிறேன், அம்மா."

"அதை முடிக்க மூன்று நாட்களாகும். அதை நிறுத்தி விட்டுப் பாடம்படி."

"சரி; அதை நாளைக்குச் செய்கிறேன். இப்பொழுது முள்ளெலிக்குத் தண்ணீர் வைக்கிறேன்" என்று அவன் வேண்டாவெறுப்புடன் கூறுவான்.

அதன் பிறகு இதர பிராணிகளுக்கு குடி தண்ணீர் வேண்டுமா என்று பார்ப்பான். இதற்குள் ஒரு முள்ளெலியைக் காணவில்லை என்பதைக் கண்டு, அதைத்தேடிக் கொண்டு வீடு முழுவதும் அலைவான். அரைமணி கழித்து அவனுடைய அம்மா வந்து மீண்டும் படிப்பைப்பற்றி கேட்பாள்.

"ஒரு நிமிஷம் அம்மா. முள்ளெலி எங்கோ தொலைந்து விட்டது."

இந்த முறையில் தினந்தோறும் ஒன்று மாற்றி ஒன்று சிஷ்கினுக்கு அலுவல் இருந்தது. அவன் தாயார் அருகில் இல்லாவிட்டால் அவனுக்குப் படிப்பு நினைவே இருக்காது. கடைசியில் இவன் படிக்க உட்காரும்பொழுது, நேரமாகித் தூக்கம் வந்துவிடும்! அவனால் எதையும் உருப்படியாகப் படிக்க முடியவில்லை. ஆனால் எப்படியோ 3 மார்க் வாங்கி விடுவான்; சில சமயங்களில் 4 மார்க் கூட வாங்கிவிடுவான். ருஷிய மொழிப் பாடத்தில்தான் சுத்த மோசம். நான் சொல்லிக் கொடுக்காவிட்டால் வகுப்பில் கேள்விகளுக்குப் பதில் சொல்லியிருக்கமுடியாது. வகுப்பில் ஒருவருக்கும் மறைமுகமாக சொல்லிக்கொடுப்பது கிடையாது; சொல்லிக் கொடுத்தால் சுவரொட்டிப் பத்திரிகையில் பிரபலமடைய வேண்டுமல்லவா? ஆனால் நான் மட்டும் சிஷ்கினுக்கு அந்த உதவியைச் செய்துகொண்டிருந்தேன். என்ன இருந்தாலும் அவன் நண்பன் அல்லவா? ஆனால் என் உதவி அவனுக்கு நன்மை செய்யவில்லை. ஆசிரியர் சொல்வதை எழுதும் (டிக்டேஷன்) பயிற்சியிலும், கட்டுரை எழுதுவதிலும் சிஷ்கினுக்கு 2 மார்க்குக்குமேல் கிடையாது. அதனால் அந்தப் பாடங்கள் உள்ள நாட்களில் அவன் பள்ளிக்கே வாரான். ஆல்கா நிகோலிவ்னா, மறுநாள் 'டிக்டேஷன்' வைத்துக் கொள்ளப்போவதாக ஒரு தடவை கூறினாள். மறுநாள் சிஷ்கின் நோயுற்றவன் மாதிரிப் பாசாங்கு செய்தான். தலை வலிப்பதாகத் தாயாரிடம் கூறினான். அன்று பள்ளிக்கும் போகாமல் ஓய்வு எடுக்கும்படி தாயார் கூறினாள். வேலை முடிந்து வந்தவுடன் டாக்டரைக் கூப்பிடுவதாகவும் சொன்னாள். ஆனால் அவள் வீடு திரும்பியபொழுது, தலைவலி நின்றுவிட்டதாகவும் டாக்டர் தேவையில்லையென்றும் சிஷ்கின் கூறிவிட்டான். சிஷ்கினுக்கு உடல் நலம் சரியில்லாமலிருந்ததால் அவனை அன்று வீட்டிலே இருக்கச் சொன்னதாக அவன் தாயார் ஆசிரியருக்குக் கடிதம் எழுதிக்கொடுத்தாள். எல்லாம் இனிது முடிந்தது. அடுத்த தடவை வியாசம் எழுதும் நாள் வந்தபொழுது சிஷ்கினுக்கு மறுபடியும் தலைவலி வந்தது; அவன் தாயார் மீண்டும் ஆசிரியருக்கு 'லீவ்

கேட்டு' எழுதினுள். அன்றும் அவள் வீடு திரும்பியபொழுது சிஷ்கின் சுகமாகிவிட்டதைப் பார்த்து வியப்படைந்தாள். ஆனால் அவளுக்குச் சந்தேகம் எழவில்லை. இதே நிகழ்ச்சி மூன்ருவது தடவை நடைபெற்றபொழுதுதான், அவளுக்கு ஐயம் ஏற்பட்டது. தான் பாசாங்கு செய்ததாக சிஷ்கின் முதலில் ஒப்புக்கொள்ளவில்லை; ஆனல் பள்ளிக்குப்போய் உண்மையை அறிந்து வரப்போவதாகத் தாயார் கூறிய வுடன் அவன் உண்மையை ஒப்புக்கொண்டுவிட்டான்.

அவன் தாயாருக்குத் தாங்கமுடியாத கோபம். அன்று தான் சிஷ்கின் நாய்க்குட்டியைக் கொண்டுவந்திருந்தான். கண்ட பிராணிகளைக்கொண்டு வந்து அவற்ருேடு பொழுதைக் கழிப்பதாகத் தாயார் சிஷ்கினைத் திட்டாத நாள் கிடையாது. ஆகவே அன்று அவன் முன்னெச்சரிக்கையாக நாய்க்குட்டியை ஒளித்துவைத்திருந்தான். அவனுடைய தலைவலி நடிப்புக்காக அவன் தாயார் திட்டிக் கொண்டிருந்த தருணத்தில், அந்த லாப்ஸிக் நாய்க்குட்டி அறைக்குள் எழுந்தருளியது!

"இது என்ன?"—அம்மாவின் கேள்வி.

"இது......இது......ஒரு நாய்!" சிஷ்கின் உளறினுன்.

"நாய்க்குட்டியா! யாரைக்கேட்டு இதைக்கொண்டு வந்தாய்? 'இது வீடா அல்லது விலங்குகளின் காட்சி சாலையா? பாடம் படிக்காமல் இவற்ருேடு பொழுதைக் கழிக்கிருய்! எல்லா மிருகங்களும் உடனே தொலையவேண்டும். எலிகள், சுண்டெலிகள், முள்ளெலிகள் அனைத்தும் ஒழிய வேண்டும்! அடுத்த நிமுஷம், இந்த நாய் இங்கிருக்கக் கூடாது!"

இந்த நேரத்தில் தாயாருடன் வாக்குவாதம் செய்ய முடியாது என்பதை சிஷ்கின் அறிவான். அவனுடைய அன்புக்குரிய பிராணிகளைப் பிரிந்திருக்கவேண்டுமேயென்று அவன் துக்கப்பட்டான். அவற்றை அவனுக்குத் தெரிந்த பையன்களுக்குப் பிரித்துக்கொடுத்தான். ஒரு முள்ளெலியை

மட்டும் எவரும் வாங்கிக்கொள்ளவில்லை. அதை எடுத்துக் கொண்டு என்னிடம் வந்தான். வீட்டில் நடந்தவற்றை விவரித்தான். முள்ளெலியை வளர்க்க எனக்குப் பிரியமில்லை. முன்பு சிஷ்கின் கொடுத்த சுண்டெலிகளே வீடு நிறையப் பெருகிவிட்டன. தவிர, இந்த முள்ளெலி நோயாளி மாதிரி தளர்ச்சியுற்று இருந்தது. ஆனல் அதற்கு நோயில்லையென்றும் அது குளிர்கால ஒடுக்கத்தின் முன்னறிவிப்பு என்றும் அவன் கூறினன். பிறகு நான் முள்ளெலியை எடுத்துக் கொண்டேன். அது, குளிர்கால உறக்கம் முடிந்து வசந்த காலத்தில் விழித்துக்கொள்ளும்பொழுது, தான் அதைத் திரும்பிப்பெற்றுக்கொள்வதாக சிஷ்கின் கூறினன்.

ஆனல் நாய்க்குட்டியைவிட்டுப்பிரிய அவனுக்கு மனமில்லை. அதை மேன் மாடத்தில் ஒளித்துவைத்தான். புகைபோக்கிக்கு அருகில் அதற்கு ஒரு படுக்கை தயார்செய்தான். அதை உத்தரத்தில் கட்டிப்போட்டான். மேன் மாடத்தில் குளிர் அதிகம். ஆனல் புகைபோக்கி வெப்பமாகவிருந்தது. ஆகவே நாய்க்குட்டி குளிரைப் பொருட்படுத்தவில்லை. உண்மையில், நாய்க்குட்டி சில நேரங்களில் கஷ்டப் பட்டிருக்கவேண்டும்; ஏனென்ருல் மேன் மாடத்தில் குளிர் அதிகமாகும்பொழுது புகைபோக்கியில் உஷ்ணம் அதிகமாகும். ஒருபக்கம் சில்லிட்டுப் போகச்செய்யும் குளிர், மறு பக்கம் கொதிக்கும் உஷ்ணம், இரண்டுக்குமிடையே நாய்க் குட்டிக்கு சித்திரவதைதானே! நாய்க்குட்டிக்குச் சளிபிடித் துக் காய்ச்சல் வரப்போகிறதேயென்று சிஷ்கின் பயந்தான். அவன் அதற்கு ரகசியமாகத் தீனிகொண்டுவந்து கொடுத் தான். அது தனிமையில் தவிக்கக்கூடாதென்பதற்காக, ஓய்வு நேரத்தில் அத்துடன் விளையாடினன். அவன் தாயார் வீட்டில் இல்லாதபொழுது நாய்க்குட்டியை கீழேகொண்டு வந்து விளையாடுவான். தாயார் வீட்டுக்குவரும் நேரத்தில் திரும்ப மேன் மாடத்துக்குக் கொண்டுபோய்விடுவான். ஒரு நாள் இவன் நேரத்தில் நாயை ஒளித்து வைக்கவில்லையோ அல்லது அம்மா முன்னல் வந்துவிட்டாளோ, சிஷ்கின் கையுங்களவுமாகப் பிடிப்பட்டுவிட்டான்!

“இந்த நாய் இங்கே எப்படி வந்தது? நீ படிக்கமுடியாத தற்கு இதுதான் காரணமா? இதைத் தொலைத்து முழுகென்று அப்பொழுதே சொல்லவில்லையா?”

பாவம், சிஷ்கின் உண்மையை ஒப்புக்கொள்ளவேண்டி யிருந்தது! தாயார் சொன்னபொழுது நாயைத் துரத்தவில்லை, அது மேன் மாடத்திலேயே இருந்தது என்று அவன் ஒப்புக் கொண்டான். நாய்க்குட்டியிடம் ஆசையிருப்பதால்தான் அதை இவ்வளவு தூரம் பாராமரித்து வருவதாக அவன் சொன்னான். வீடு வாசல் இல்லாத நாய்க்குட்டியைப் பனிக் காலத்தில் நிராதரவாக வீதியில்விட விருப்பமில்லை என்று கூறினான்.

“நீ படிப்பில் ஒழுங்காயிருந்தால், இந்த நாய்க் குட்டியை அனுமதிக்கலாம். ஆனால் சொன்னவார்த் தையைக் கேட்காதபொழுது நான் என்ன செய்யமுடியும்?” என்று அவன் தாயார் கேட்டாள். “நாய்க்குட்டியைப் பற்றியே கவலைப்பட்டுக்கொண்டிருந்தால் எப்படிப் படிக்க முடியும்? பாடம் படிக்க உட்கார்ந்தால், மேன் மாடத்தில் தனிமையில தவிக்கும் நாய்க்குட்டியை நினைத்து வருத்தப் படுகிறேன். படிக்கமுடியுமா?” என்று சிஷ்கின் கூறினான்.

அவன் தாயார் அவனிடம் இரக்கப்பட்டாள். “சரி, தினந்தோறும் பள்ளிக்கூடம் முடிந்தவுடன் பாடங்களைப் படிப்பதானால் நீ நாயை வைத்துக்கொள்ளலாம்” என்று அவள் கூறினாள்.

அதேமாதிரி சிஷ்கின் வாக்களித்தான். “சொற்படி நடக்கிறாயாவென்று பார்ப்போம். உன் பள்ளிக்கூட வேலையை நான் தினசரிப் பார்வையிடப்போகிறேன்” என் றாள் அவன் தாயார்.

மறுநாள் பள்ளிக்கூடம் முடிந்து வீட்டுக்குப்போகும் வழியில், சிஷ்கின் இந்தக்கதை முழுவதையும் விவரித்தான்.

“என் வீட்டுக்கு வா. நாய்க்குட்டிக்கு நான் அளிக்கும் பயிற்சியைக் காட்டுகிறேன். லாப்ஸிக் புத்திசாலி. தன்

வாயில் தடிக்கம்பை பிடித்துகொள்ள அது கற்றுக்கொண்டு விட்டது'' என்ருன் சிஷ்கின்.

''இதைச்செய்வதற்கு அபார மூளைவேண்டுமா?''

''உனக்குவேண்டாம். நாய்க்கு?''

நாங்கள் அவன் வீட்டுக்குப்போனேம். சிஷ்கின் சர்க்கரைக் கிண்ணத்தை எடுத்து வைத்துக்கொண்டு லாப்ஸிக்கைக் கூப்பிட்டான். லாப்ஸிக் சர்க்கரைக் கிண்ணத்தைப் பார்த்ததும் மேல்நோக்கிப் பாய்ந்து வாலை ஆட்டத் தொடங்கியது. சர்க்கரைக் கிண்ணம் அதற்குப் பழகிய பொருள் என்பது எளிதில் விளங்கிற்று. சிஷ்கின், அதன் மூக்குக்குக் கீழ் கம்பை வவைத்துவிட்டு, ''உன் வாயால் கம்பைப் பிடித்துக்கொள்; சர்க்கரை தருகிறேன்'' என்று கூறினன்.

அது கம்பைவிட்டுவிட்டு கிண்ணத்தையே பார்த்தது.

''கிண்ணம் கிடக்கட்டும். கம்பைப் பிடித்துக்கொள்'' என்று சிஷ்கின் கத்தினன்.

ஆனல் லாப்ஸிக்குக்குக் கம்பைப்பற்றி அக்கறையில்லை. சிஷ்கின் பலவந்தமாக அதன் வாயைத் திறந்து பற்களுக்கிடையே கம்பை வைத்தான்; ஆனல் அதை விட்டவுடன், நாய்க்குட்டி வாயைத் திறந்தது; தரையில் விழுந்தது கம்பு.

''அட, ஆந்தை! நேற்றுக் கற்றுக்கொடுத்ததையெல்லாம் இன்று மறந்துவிட்டாயே! மீண்டும் அடியிலிருந்து ஆரம்பிக்கவேண்டுமா?'' என்று அவன் திட்டினன்.

அவன் மீண்டும் லாப்ஸிக் வாயில் கம்பை வைத்தான்; அது வாயைத் திறக்க முடியாதபடி பிடித்துக்கொள்ளுமாறு என்னிடம் கூறினன். இவ்வாறு அது சிறிது நேரம் கம்பை வைத்திருந்த பிறகு, நாங்கள் அதற்கு ஒரு சீனிக்கட்டியைப் பரிசுகொடுத்தோம். இதைப்போல நாங்கள் பல தடவைகள் செய்தோம். கம்பை வாயில் வைத்திருக்கும்பொழுதெல்லாம் சீனி கிடைக்குமென்று லாப்ஸிக் உணரும்வரை, இதைச்

செய்தோம். ஆகவே எங்கள் உதவியில்லாமல் அது கம்பை பிடித்துக்கொள்ளத் தொடங்கியது. சீனியைத் தின்பதற்கு அது உடனுக்குடன் கம்பைப் போட்டுவிடும்; ஆனல் அப் பொழுது சிஷ்கின் அதற்குச் சீனி கொடுக்கமாட்டான். மீண்டும் அது வித்தையை நிறுத்திச் செய்தபிறகே சீனி யைக் கொடுப்பான். அன்று மாலை நான் வீட்டுக்குப்போகும் பொழுது அதிக நேரமாகிவிட்டது; என் திட்டத்திலிருந்து தவறிவிட்டேன். கோடை விடுமுறையில் ஒரு நாயை வாங் கிப் பழக்குவதென்று முடிவுசெய்தேன்; பள்ளி முடிகிறவரை அதைப்பற்றிச் சிந்திக்கக்கூடாது. ஏனென்ருல் அது அதிக நேரத்தைக் களவாடிவிடுகிறது. அப்பொழுதுதான் கணக் கில் நல்ல மார்க் வாங்கத்தொடங்கியிருக்கிறேன். முறை யாகப் படிக்காவிட்டால் மீண்டும் 2 வாங்கிவிடுவேன். நாய் களுக்குக் கற்றுக்கொடுப்பதற்கு முன்னல் என் படிப்பைக் கவனித்துக்கொள்ளவேண்டுமென்று முடிவுசெய்தேன்.

ஆனல் சிஷ்கின் ஒழிந்த நேரமெல்லாம் நாய்க்குட்டி யைப் பழக்கினன். அது கம்பைப் பற்களுக்கிடையில் வைத் திருக்கத் தெரிந்துகொண்டுவிட்டது. சில சமயங்களில் கம்புடன் நடப்பதற்கும் கற்றுக்கொண்டுவிட்டது. தன் நாய்க்குப் பல வித்தைகளை கற்றுக்கொடுக்கமுடியுமென்று சிஷ்கின் கூறினன். ஆனல் மேற்கொண்டு அந்த ‘ஆசிரியர்’ வேலைசெய்ய அவனுக்கு விருப்பமில்லை. ஏனென்று கேட்டால், அது அவனுடைய குணம். அவனுக்கு எதுவும் சீக்கிரத்தில் அலுத்துவிடும். ஆகவே ஒன்றைவிட்டு வேருென்றைப் பற்றுவதே அவனுக்கு வழக்கமாகிவிட்டது.

# 11. சர்க்கஸ்

சர்க்கஸுக்குப் போய்வரவேண்டுமென்று நாங்கள் பல நாட்களாக ஆவல் கொண்டிருந்தோம். ஆகவே எல்லோருக்கும் டிக்கட் வாங்கி வருவதாக வாலட்யா கூறியதும் நாங்கள் துள்ளிக்குதித்தோம். வகுப்பு மாணவர்கள் சேர்ந்தால்போல சினிமாக்களுக்குப் போயிருக்கிறோம்; இதுவரை சர்க்கஸுக்குப் போகவில்லை. நான் தனியாக சர்க்கஸுக்குப்போய்வந்து நாளாகிவிட்டது. சிஷ்கின் சிறு பையனாக இருந்தபோதே சர்க்கஸுக்குப் போனானும்; ஆகவே அதைப் பற்றிய நினைவுகூடத் தெளிவாக இல்லை. ஏதோ பெரிய பெரிய மிருகங்களைப் பார்த்த நினைவுதான் அவனுக்கு இருக்கிறது; அவை சிங்கங்களா, புலிகளா, குதிரைகளா வென்றுகூட அவனால் சொல்லமுடியவில்லை.

சர்க்கஸில் உலகம் மாதிரி உருண்டையாக ஒரு உலோகக் கூண்டு இருக்கிறதாம்; அதில் ஒரு மோட்டார் சைக்கிளை ஒருவர் ஓட்டுகிறாராம். கூண்டுக் கம்பிகளின் இடைவெளி வழியாக அதைப் பார்க்க முடியுமாம். இதைப் பற்றிய சுவரொட்டிகளை நாங்கள் பார்த்திருக்கிறோம்; இதைப் பார்த்தவர்களிடம் கதைகேட்டு பரபரப்படைந்திருக்கிறோம். ஆகவே இதைப் பார்க்கவேண்டுமென்று துடித்தோம். அந்த மோட்டார் சைக்கிள் ஓட்டுபவர் கூண்டுக்குள் வெகுவேகத்தில் சுற்றுகிறாராம். முதலில் கூண்டின் அடிபாகத்தில் சுற்றுகிறார்; பிறகு படிப்படியாக மேலே செல்கிறார். அந்த உருண்டைக் கூண்டின் 'மத்தியரேகை'யைத் தாண்டியவுடன், அடிப்பாகம் மறைந்துவிடுகிறது; கூண்டின் மேல் பாதி தலைகீழாகக் கவிழ்த்த கிண்ணம் மாதிரித் தோற்றமளிக்கிறது; இந்தப் பாகத்தில் அவர் எதையும் பிடித்துக்கொள்ளாமல் மோட்டார் சைக்கிளை ஓட்டுகிறார். அவருடைய பயங்கர வேகத்திலிருந்து ஏதோ ஒரு சக்தி

உண்டாகிறதாம். இதை விரிமைய சக்தி (Centrifugal force மையத்தை விட்டோடும் சக்தி) என்கிறார்கள். அது எப்படியோ அவர் விழாதபடி காப்பாற்றுகிறதென்று சொல்கிறார்கள். அவருடைய வேகம் குறைந்துவிட்டால், 'விரிமைய சக்தி' குறைந்து அவர் விழுந்துவிடுவாராம்.

எல்லோருக்கும் டிக்கட் கிடைக்காதென்று சில பையன்கள் சொன்னார்கள். 5 மார்க் வாங்கியவர் மட்டுமே போக முடியுமென்று அவர்கள் சொன்னார்கள். சிஷ்கின் நீங்கலாக ஏனையோரெல்லாம் போகமுடியுமென்று வேறு சிலர் கூறினார்கள். டிக்கட்டுகளெல்லாம் தீர்ந்திருக்குமென்றும் எவரும் போகமுடியாதென்றும் வேறு சிலர் சொன்னார்கள்.

கடைசியில் டிக்கட்டுகளை வாங்கியாகிவிட்டது; எல்லோரும் போனோம்; சிஷ்கினும்கூட. ஆட்டம் தொடங்குவதற்கு நேரமிருக்கும்பொழுதே நாங்கள் போய்விட்டோம்; ஆனால் அதைப்பற்றி எங்களுக்கு வருத்தமில்லை. தாமதப்பட்டுப் போவதற்கு, நேரத்தில் முந்திக்கொள்வதே மேலானது; தாமதமாகிவிட்டால் இடம் கிடைக்காமல் போய்விடலாம். எங்களுடைய இடங்களில் அமர்ந்ததும், சர்க்கஸ் அரங்கத்தை உற்று நோக்கினோம். அரங்கத்தில் சமக்காளம் விரித்திருந்தார்கள். கூரையிலிருந்து பலவகைப்பட்ட கயிறுகளும் வடங்களும் தொங்கின. தவிர, கயிற்றூஞ்சல்களும் வளையங்களும் கயிற்றேணிகளும் தொங்கின. கொஞ்சம் கொஞ்சமாகக் கொட்டகை நிரம்பிவிட்டது. நகரமே கொட்டகையில் குழுமிவிட்ட மாதிரி இருந்தது. நான் அவர்களை எண்ணத்தொடங்கினேன்; ஆனால் 230 வந்தவுடன் கணக்குத் தவறிவிட்டது. மீண்டும் எண்ணத் தொடங்கினேன்; அதற்குள் ஏராளமான விளக்குகளுக்கு பித்தானை அமுக்கிவிட்டார்கள்; கொட்டைக்குள் ஒரே வெளிச்சம், பகல் மாதிரியிருந்தது. எங்கும் ஜீவகளை ததும்பி, இன்பகரமாயிருந்தது. ஆட்டம்தொடங்க நேரமாகுமென்று நினைத்துக் கூட்டத்தைப் பார்த்துக்கொண்டிருந்தேன்; திடீரென்று கைதாளங்கள் கதறின; முரசுகள் முழங்கின; 'பிடில்'கள் பண்ணிசைத்தன;

கொம்புகள் ஊதின. மல்லர்கள் அரங்கத்துக்கு ஓடிவந்தனர். அவர்கள் காற்றில் பாய்ந்தார்கள். கரணம் அடித்தார்கள். அந்தரத்தில் நின்று வித்தைசெய்தார்கள், அங்கேயே ஒருவரையொருவர் கைகளால் பிடித்துக்கொண்டார்கள். இவற்றையெல்லாம் எவ்வளவு சுலபமாகவும் துல்லியமாகவும் செய்தார்கள் தெரியுமா? அவற்றைப்பார்த்துப் பரவசமடைந்ததுடன், அரங்கத்தில் பாய்ந்து அவர்களுடன் கரணம் அடிக்க வேண்டுமென்று தோன்றியது. காட்சிநேரம் முழுவதும் மல்லர்களின் வித்தைகளையே பார்த்துக்கொண்டிருக்கலாம்; ஆனால் கொஞ்சநேரத்தில் போய்விட்டார்கள். அவர்களுக்குப் பதிலாக மிருகங்களைப் பழக்குபவர் கரடிகளுடன் வந்தார். இந்தக் கரடிகளுக்குத்தான் என்ன சாமர்த்தியம்! அவை கொடி மாதிரி கட்டியிருந்த கயிற்றின்மீது நடந்தன; கயிற்றூஞ்சல்களில் ஆடின; உருண்டுகொண்டிருக்கும் பீப்பாய்கள்மீது பாதம் தவறுமல் நடந்தன. இரண்டு கரடிகள் சைக்கிள் சவாரிகூடச் செய்தன!

அடுத்தபடியாக சில வித்தைக்காரர்கள் வந்தார்கள்; அவர்கள், கைகளாலல்ல, கால்களால் வித்தைசெய்தார்கள். "ரோலர்" மாதிரி மரத்தால்செய்து சாயம் பூசிய சாமான்களை அவர்கள் தமது பாதங்களால் ஆடினார்கள். நேராகப் படுத்துக்கொண்டு, அந்தச் சாமான்களைப் பாதங்களாலடித்து சுழற்றினார்கள். அவற்றை வட்ட வடிவத்தில் சுற்றிய மாதிரியே, பாதங்களால் முன்னுக்கும் பின்னுக்குமாகவும் பந்தடித்தார்கள். அநேகர் கையால் செய்ய முடியாத பல வித்தைகளை அவர்கள் பாதங்களால் செய்தார்கள்.

பிறகு நாய்கள் வந்தன. அவை பாய்ச்சல் வித்தை செய்தன; கரணமடித்தன; பின்னங்கால்களால் மட்டும் நடந்தன; ஒன்று சிறு வண்டியிலேறி இன்னொன்று இழுக்க, வண்டி விளையாட்டு ஆடின; கால்பந்தாடின. பிறகு தன்னிடம் கணக்குப்போடத் தெரிந்த நாய் ஒன்று இருப்பதாக நாய்களுக்குப் பயிற்சி அளித்து வித்தை காட்டிய பெண்மணி கூறினாள். அவர்கள் ஒரு மணியைக்கொண்டு வந்து

போட்டார்கள்; அதன்மீது ஒரு கறுப்பு நாய்க்குட்டியை அமர்த்தினுர்கள். அந்தப் பெண்மணி, நாய்க்குமுன் மூன்று மரக்கட்டைகளை வைத்தாள்; அவற்றை எண்ணும்படி நாயிடம் கூறினுள். நாய்க்கு பேசக்கூடத் தெரியாது; அது எப்படி எண்ண முடியுமென்று எங்களுக்குப் புரியவில்லை. நாய் பேசவில்லை; ஆனுல் அது மும்முறை குரைத்தது. எல்லோருக்கும் ஒரே மகிழ்ச்சி; அனைவரும் கைகொட்டினுர்கள். நாய்களின் ஆசிரியரான பெண்மணி, அந்த நாய்க்குட்டியிடம் புகழ்ச்சியாகச் சில வார்த்தைகள் கூறினுள்; அதற்கு ஒரு சீனிக்கட்டியும் கொடுத்தாள். பிறகு நாய்க்கு முன் ஐந்து கட்டைகளைவைத்து எண்ணச் சொன்னுள். நாய் ஐந்து தடவைகள் குரைத்தது.

பிறகு அந்தப் பெண்மணி, அட்டையில் பெரிதாக அச்சடித்திருந்த எண்களை ஒன்றன்பின் ஒன்ருகக் காட்டினுள். ஒவ்வொரு தடவையும் நாய் பிசகில்லாமல் குரைத்தது.

எங்களுக்குத் திகைப்பூட்டிய விஷயமென்னவென்ருல், இந்த நாய்க்குட்டி கூட்டல் கழித்தல் கேள்விகளுக்கும் விடை தந்ததே.

"2-ம் 2-ம் எவ்வளவு?" என்று அவள் கேட்டாள். நாய் 4 தடவைகள் குரைத்தது.

"4-ம் 3-ம் எவ்வளவு?"

நாய் 7 தடவைகள் குரைத்தது.

"10-விருந்து 4-ஐக் கழி."

நாய் 6 தடவைகள் குரைத்தது.

இந்த அதிசயத்தைக் கண்டு அகலக் கண் விரித்துச் சொல்லிழந்து இருந்தோம்.

இதற்குப் பிறகு, இரண்டு வித்தைக்காரர்கள் வந்தனர். அவர்கள் தட்டுக்களையும் வேறு பல சாமான்களைம் எறிந்து எறிந்து பிடித்தனர். ஒவ்வொருவரும் ஒரே சமயத்தில் நான்கு தட்டுக்களை தூக்கிப்போட்டு விளையாடினர்;

ஒருவருக்கொருவர் தட்டுக்களை எறிந்து பிடித்து விளையாடினர். இந்தத் தட்டுக்கள் உயிருள்ள ஜந்துக்கள் மாதிரி முன்னுக்கும் பின்னுக்கும் பறந்ததைப் பார்த்தபொழுது, ரோமஞ் சிலிர்த்தது.

அட, கோமாளியை மறந்துவிட்டேன்! அவன் வெளிர் நீலக்காற்சட்டையும் இஞ்சிக்கலர் சட்டையும் பச்சைத் தொப்பியும் அணிந்திருந்தான். அவன் மூக்கைப்போல செக்கச் செவேலென்ற மூக்கு நான் பார்த்ததே கிடையாது. வித்தைக்காரர்கள் செய்தவற்றையெல்லாம் அவனும் செய்தான்; ஆனால் எல்லாம் கேலியாகவே இருந்தது. படுத்த நிலையிலேயே பாதத்தால் 'ரோலர்களை'ப் பந்தடித்த வித்தைக்காரர்கள் திரைக்குப்பின் போனவுடன், அவன் மூன்று மரக்கட்டைகளுடன் வந்து வித்தை செய்யத்தொடங்கினான். கொஞ்ச நேரத்தில், ஒரு கட்டை அவன் தலையில் ஓங்கி அடித்தது, ஓடியேவிட்டான். கரடிகள் சைக்கிள் விட்ட பிறது, அவன் சைக்கிள்மீது வந்தான்; நேராகவந்து அந்த மேடையின் எல்லைக் கோட்டுப் பிடிச்சுவர்மீது மோதினான்; சைக்கிள் நொறுங்கிவிட்டது. குதிரை சவாரி செய்கிறவர்கள் வந்தவுடன், தனக்கும் ஒரு குதிரைவேண்டுமென்று கெஞ்சினான். ஆனால் விழுந்துவிட்டால் என்ன செய்வதென்ற பயம்! ஆகவே கூரையிலிருந்து தொங்கும் வடத்துடன் தன்னைக் கட்டிவிடவேண்டுமென்றான். பிறகு, குதிரையின் வாலைப் பிடித்துக்கொண்டு ஏறப்பார்த்தான்; அது உதைத்தது. பிறகு ஒரு ஏணி வைத்து ஏறப்பார்த்தான். தன்னை ஏற்றிவிடும்படி ஒரு சவாரிக் காரனைக் கெஞ்சினான். அவன் ஏற்றிவிட உதவினான்; ஆனால் குதிரைமீது ஏறவேண்டிய கோமாளி, சவாரிக்காரன் முதுகிலேயே உட்கார்ந்துவிட்டான்! சவாரிக்காரனும் அவனைத் தூக்கிக்கொண்டு நாலுகால் பாய்ச்சலில் அரங்கத்தைச் சுற்றிச் சுற்றி வந்தான்.

கடைசியில் கோமாளியைக் குதிரைமீது உட்கார வைத்தார்கள். அது நாலுகாற் பாய்ச்சலில் புறப்படவே கோமாளி

விழுந்துவிட்டான். அவனைக் கூரையிலிருந்து தொங்கும் வடத்தில் கட்டியிருந்ததால் தரையில் விழவில்லை. அதற்குப் பதிலாகக் கைகால்களைப் பரப்பிக்கொண்டு, சர்க்கஸ் அரங் கத்தை சுற்றிச் சுற்றிப் பறந்தான். கொட்டகையெல்லாம் ஒரே கொட்டம், கும்மாளம்! எதையும் சரியாகச் செய்ய அவனால் முடியவில்லை; ஆனால் எல்லோரையும் சிரிக்கவைத் தான்.

காட்சியின் கடைசி அம்சம் மோட்டார் சைக்கிள் சவாரி. நாங்கள் இடைவேளையில் வெளியே போகவில்லை! தயாரிப்புக்களைப் பார்த்துக்கொண்டிருந்தோம். அவர்கள் முதலில் கூண்டின் மேல்பாதியைக் கோர்த்தார்கள் அதில் குறைந்த பட்சம் இருபதுபேருக்கு இடமிருந்தது. பிறகு அந்தப் பாதியை கூரைக்கு அருகில் ஏற்றித் தொங்கவிட்டார் கள். பிறகு, கீழ்ப் பாதியைக் கோர்த்தார்கள். அதற்குள் இரண்டு மோட்டார் சைக்கிள்களையும் இரண்டு சைக்கிள் களையும் வைத்தார்கள். இந்தப் பாதியைத் தூக்கி மேல் பாதியுடன் சேர்த்தார்கள். இந்தக் கூண்டின் அடியில், ஏணி வாசல் மாதிரி ஒரு துவாரம் இருந்தது. அதிலிருந்து ஒரு கயிற்றேணி தொங்கியது.

கடைசியாக, இடைவேளை முடிந்தது; கொட்டகையில் மக்கள் நிரம்பிவிட்டனர்; விளக்குகள் மீண்டும் எரிந்தன; மோட்டார் சைக்கிள் சவாரிக்காரர்கள் அரங்கத்துக்கு வந் தார்கள். அவர்கள் நீலநிற உடையணிந்திருந்தனர்; தலைக் காப்பும் வைத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் மூவர்; இருவர் ஆண்கள், ஒருவர் பெண். பேண்டு வாத்தியம் வாசிக்கத் தொடங்கியதும் ஏணிமீது ஏறினார்கள். ஒருவர் பின் ஒருவராக ஏணி வாசல் வழியாக கூண்டுக்குள் போன வுடன், அந்த வாசலை உள்பக்கத்திலிருந்து மூடினார்கள்; கூண்டைச் சுற்றிச் சுற்றிச் சைக்கிள்விடத் தொடங்கினர் கள். முதலில் மெதுவாக சைக்கிள் விட்டார்கள்; சைக்கிள் கள் கூண்டின் அடிப்பாகத்தில் வட்டமிட்டன. ஆனால் அவை மென்மேலும் வேகம் பெற்று வட்டமிட்டுக்கொண்டே

உயர ஏறின. சைக்கிள் சவாரிக்காரர்கள் கிடை மட்டத்துக்கு வந்துவிட்டனர். அவர்கள் ஏன் விழவில்லை என்பது புரியவே யில்லை. அவர்கள் முறைபோட்டுச் சவாரிசெய்தார்கள்; ஆண்களைப்போலவே பெண்ணும் திறமையாகச் சவாரி செய்தாள்.

பிறகு, அவர்களில் ஒருவர் மோட்டார் சைக்கிளை சவாரிக்கு ஆயத்தம் செய்தார். எந்திரத் துப்பாக்கியைச் சுடுவது மாதிரி ஒரு பயங்கரமான சப்தம் உண்டாகியது. மோட்டார் சைக்கிள் சவாரிக்காரர் பயங்கர வேகத்தில் சவாரி செய்தார். சில சமயங்களில் அவர் கூண்டின் உச்சியிலிருந்து அடிக்கு வரும்பொழுது, தலைகீழாகவே சவாரி செய்தார்! விழுந்துவிடுவாரென்று நாங்கள் பயந்தோம். இன்னொரு மோட்டார் சைக்கிள்காரரும் தன் வாகனத்தில் சவாரி தொடங்கினர்! இருவரும் என்ன பாடுபடுத்தினர்கள்; காதுகள் பிய்ந்துவிடும்போலிருந்தது! இரண்டாவது நபர் கூண்டின் அடிப்பாகம் வந்து நின்றுவிட்டார். ஆனால் முதல் நபரோ மேல்பாகத்தில் சுற்றிச் சுற்றி சவாரிசெய்தார்.

அப்பொழுது, கூண்டின் கீழ்ப்பாதியை இறக்கிவிட்டார்கள். கீழ்ப்பாதியைத் தரையில் வைத்தவுடன், இரண்டாவது மோட்டார் சைக்கிள்காரரும் பெண்ணும் வெளியேறினர். ஆனால் முதல் மோட்டார் சைக்கிள்காரர் மேல்பாதியில் சுற்றிச் சுற்றி ஓட்டிக்கொண்டிருந்தார். "என்ஜின் பழுதாகிவிட்டால் என்னவாகும்?" என்று எனக்குள் எண்ணினேன்.

என்ஜின் கோளாராகிவிடுமென்று நான் சில சமயங்களில் பயந்தபோதிலும், எல்லாம் இனிது முடிந்தது. மீண்டும் கூண்டின் கீழ்ப்பாதியை உயர்த்தி மேல்பாதியுடன் சேர்த்தார்கள். சைக்கிள்காரர் தன் வேகத்தைக் குறைத்துக் கீழ்ப்பாதியில் சுற்றினர். வட்டம் சுருங்கிக்கொண்டே வந்தது. இறுதியில், அவர் நிறுத்திவிட்டு, ஏணி வாசல்வழியாகத் தவழ்ந்து ஏணி மூலம் இறங்கினர். சர்க்கஸ் கரகோஷத்தால் அதிர்ந்தது.

அதுதான் ஆட்டத்தின் முடிவு. ஆட்டம் முடிந்து விட்டதேயென்று எங்களுக்கு எவ்வளவு துக்கம்! கொட்டகையை விட்டுப்போவதில் எங்களுக்கு எவ்வளவு வெறுப்பு! எனக்கு வயது வந்தவுடன் தினந்தோறும் சர்க்கஸுக்குப் போகவேண்டுமென்று முடிவுசெய்தேன். சரி, தினசரியில்லாவிட்டால், வாரத்துக்கு ஒருநாளாவது போகவேண்டும். எனக்கு ஒருபொழுதும் சர்க்கஸிடம் அலுப்பு சலிப்பு ஏற்படாது!

# 12. வித்தையும் விபரீதமும்

அந்த முள்ளெலி மாரிக்கால உறக்கத்தைப்பற்றித் தன் தீர்மானத்தை மாற்றிக்கொண்டது போலும். இராக்காலத்தில் அறையில் அலைந்துகொண்டேயிருந்தது; காகிதங்களிடம் விஷமம் செய்தது. ஒருவரும் தூங்கமுடியவில்லை. இதற்கு என்ன உணவு அளிப்பது என்று கேட்பதற்காகச் சிஷ்கினிடம் சென்றேன். அவன் அறைக்குள் போனவுடன், சிஷ்கின் கையில் பெட்டியுடன் படுத்திருப்பதைப் பார்த்தேன்; அவனுடைய கால்களைத் தூக்கி ஆட்டிக்கொண்டிருந்தான்.

"என்ன செய்கிறாய்?" என்று கேட்டேன். நான் வித்தைக்காரனாகப் போகிறேன். இதோ பார், இந்தப் பெட்டியைப் பாதங்கள் மீது வைத்து வித்தை செய்வேன்."

அவன் பெட்டியைத் தூக்கிப் பாதங்களில் வைத்து, அது விழாதிருக்கச் செய்ய முயன்றான்; முடியவில்லை.

"வித்யா! உதவி செய்யேன்!" என்றான்.

பெட்டியையெடுத்து அவன் பாதங்கள் மீது வைத்தேன். அவன் தன் கால்களை நேராக நிமிர்த்தி நிறுத்திய வண்ணம் கொஞ்சநேரம் பெட்டி விழாமல் செய்திருந்தான். ஆனால் அதைக் கொஞ்சம் திருப்ப முயன்றவுடன் பெட்டி கீழே விழுந்துவிட்டது.

"இப்படிச் செய்யக்கூடாது. பாதங்களிலுள்ள 'பூட்ஸு' களின் அடித்தோல்கள் சறுக்கிவிடுகின்றன; ஆகவே பூட்ஸுகளைக் கழற்றவேண்டும்" என்றான் சிஷ்கின்.

பூட்ஸுகளைக் கழற்றிவிட்டு மீண்டும் படுத்துக்கொண்டான், கால்களை உயர்த்தினான். நான் பெட்டியை அவனுடைய பாதங்கள்மீது வைத்தேன்.

“இப்போது பரவாயில்லை!”

மீண்டும் பெட்டியைப் பாதங்களால் திருப்ப முயன்றான்; அது விழுந்தது. இந்தத் தடவை அது அவன் இரைப்பை மீது விழுந்தது. வயிற்றைப் பிடித்துக்கொண்டு பெருமூச்சு விட்டான், புலம்பினான்.

“இது வலிக்கிறது. பெட்டிக்குக் கனம் அதிகம். இலேசானதாக எடுக்கவேண்டும்” என்றான்.

இலேசான பொருளைத் துருவித் துருவித் தேடினோம். தகுதியானதாக ஒன்றும் கிடைக்கவில்லை. ஆகவே, சிஷ்கின் ‘சோபா’வின் மெத்தையை எடுத்து சுற்றிக் கட்டினான். அது தலையணைமாதிரியிருந்தது.

“இது மிருதுவாக, நன்றாக இருக்கிறது; மேலே விழுந்தால் கூட வலிக்காது” என்று கூறினான்.

அவன் மீண்டும் படுத்தான்; நான் அந்தத் தலையணையை அவன் உள்ளங்கால்கள் மீது வைத்தேன். அதைச் சுழற்ற முயன்றான், முடியவில்லை.

“முதலில் என் பாதங்களால் அதைப் பிடிப்பதற்கு பழகிக்கொள்கிறேன். சர்க்கஸ் வித்தைக்காரன் கூட அப்படிச் செய்தான். அதை எறி, நான் பிடிக்கிறேன்” என்றான் சிஷ்கின்.

நான் தலையணையை எடுத்துக்கொண்டுபோய் எறிந்தேன். அது அவன் பாதத்தில் படவில்லை; தலைமீது விழுந்தது.

“அட கழுதை; என்ன செய்கிறாய்? பாதத்தை குறிவை, தலையையல்ல!”

நான் மீண்டும் எறிந்தேன், அவன் பாதங்களைச் சுழற்றிச் சுழற்றிப் பார்த்தான், முடியவில்லை. இருபது தடவைகள் எறிந்தேன்; அவனால் ஒருதடவைதான் பாதங்களில் பிடிக்க முடிந்தது.

நானே செய்து பார்க்கலாமென்று ஆசைப்பட்டேன். ஆனால் ஒரு தடவைகூட வெற்றி அடையவில்லை. யாரோ என் மீதமர்ந்து சவாரி செய்தமாதிரி, என் முதுகு வலித்தது; ஆகவே அதைக் கைவிட்டேன்.

"சரி, தலையணைப் பயிற்சி போதும். நாற்காலி வித்தை செய்யலாம்" என்றான் சிஷ்கின்.

அவன் நாற்காலியில் உட்கார்ந்து, மெதுவாகப் பின் பக்கம் சாய்ந்தான். நாற்காலியை இரண்டு பின்னங்கால்களில் மட்டும் நிறுத்தச் செய்வது அவன் நோக்கம். ஆனால் நாற்காலி பின்பக்கம் வளைந்து வளைந்து விழுந்துவிட்டது. சிஷ்கின் தரையில் விழுந்துவிட்டான்; நல்ல வலி, பிறகு நான் முயன்றேன்; எனக்கும் அதே கதிதான்.

"இப்படிப்பட்ட வித்தைகளை நாம் இப்பொழுதே கற்க முடியாது போலிருக்கிறது. கைகளால் வித்தை செய்வோம், முதலில்" என்றான் சிஷ்கின்.

"எதை வைத்துக்கொண்டு?" என்று கேட்டேன்.

"தட்டுக்களைக் கொண்டுதான். சர்க்கஸில் செய்கிற மாதிரி."

அவன் இரண்டு தட்டுக்களைக் கொண்டுவந்தான்.

"நீ உன் தட்டை எறி; நான் என் தட்டை எறிகிறேன். நான் என் தட்டை எறிந்தவுடன் நீ எறி. நீ என் தட்டைப் பிடித்துக்கொள்; நான் உன்தட்டைப் பிடித்துக்கொள்கிறேன்" என்று அவன் விளக்கினான்.

"தட்டுக்களைத்தான் உடைப்போம்" என்றேன் நான்.

"அப்படியானால் ஒரு தட்டுடன் தொடங்குவோம்; பிறகு இரண்டு, மூன்று, நான்கு தட்டுடன் விளையாடலாம்; அதற்குப் பிறகு நாம் நிஜமான வித்தைக்காரர்களாகிவிடுவோம்" என்றான் அவன்.

நாங்கள் தட்டை இரண்டு தடவைகள் எறிந்து ஆடினோம். அதற்குள் அது விழுந்து உடைந்துவிட்டது.

“அது பயனில்லை. எல்லாத் தட்டுக்களையும் உடைப்பதற்குத்தான் இது வழி. நாம் ஒன்றும் கற்க மாட்டோம். உடைய முடியாத பொருளைக்கொண்டு பழகலாம்” என்றான் சிஷ்கின்.

அடுக்களைக்குச் சென்று, சின்ன ‘இனாமல்’ கிண்ணத்தைக் கொண்டு வந்தான். அதை வைத்துக்கொண்டு வித்தை செய்தோம். கொஞ்ச நேரத்தில் அது தற்செயலாக ஜன்னல் மீது அடித்தது. எங்களுடைய அதிர்ஷ்டம், ஜன்னல் கண்ணாடி சுக்கு நூறாகவில்லை; ஆனால் விரிந்திருந்தது.

“இது மோசம்; இதற்கு ஏதாவது செய்யவேண்டும்” என்றான் சிஷ்கின்.

“விரிந்த இடத்தில் ஒட்டும் காகிதத்தை ஒட்டிவிடலாம்” என்றேன் நான்:

“அது மேலும் மோசமாக்கிவிடும். வழிநடைப் பலகணியிலிருந்து ஒரு கண்ணாடியைக் கொண்டுவந்து இங்குப் போட்டுவிடுவோம். இதை அங்குப் போட்டுவிடுவோம். பாதையிலுள்ள பலகணியின் கண்ணாடி விரிந்திருந்தால், ஒருவரும் கவனிக்கப் போவதில்லை” என்றான் சிஷ்கின்.

விரிந்த கண்ணாடியை எடுக்க முயன்றோம். ஆனால் விரிந்த கண்ணாடி இரண்டாகப் போய்விட்டது.

“பரவாயில்லை. வழிநடைச் சாளரத்துக்கு அது போதும்” என்றான்.

பிறகு, வழிநடைச் சாளரக் கண்ணாடியைக்கொண்டு வந்தோம். அது அறையின் ஜன்னலுக்குப் பெரியதாக இருந்தது. போடமுடியவில்லை.

“இந்த கண்ணாடியை அளவுக்கேற்றாற்போல வெட்ட வேண்டும். கண்ணாடி வெட்டும் கருவி யாரிடமிருக்கிறது, தெரியுமா?” என்று சிஷ்கின் கேட்டான்.

"வாஸ்யாவிடம் இருக்கலாம்."

இருவரும் வாஸ்யாவிடம் சென்று அதை வாங்கிவந்தால், கண்ணாடி மறைந்துவிட்டது.

"பலே! இது எங்குத் தொலைந்தது!" என்று சிஷ்கின் உறுமினான். அதே நேரத்தில் அவன் கண்ணாடியை மிதித்தான். அது தரையில் கிடந்தது. அவன் காலடியில் நற நறவென்று சப்தம் செய்தது.

"இந்தக் கண்ணாடியை எந்த மடையன் தரையில் போட்டான்?" என்று சத்தம் போட்டான்.

"நீதான்" என்றேன் நான்.

"நீயென்று சொல்" என்றான் அவன்.

"நான் தொடவில்லை. நீ அதைத் தரைமீது போட்டிருக்கக் கூடாது. கண்ணாடி தரைமீது கிடந்தால், கண்ணுக்குப் புலப்படாது."

"பிரகஸ்பதி அப்பொழுதே சொன்னால் என்ன?"

"அப்போது அதைப்பற்றி யோசிக்கவில்லை."

"யோசிக்கவில்லையாம்! இப்பொழுது உன்னால் நான் அம்மாவிடம் வசவு வாங்கவேண்டும். அது ஐந்து துண்டுகளாகிவிட்டது. இதை ஒட்டி வழிநடை ஜன்னலிலேயே பொருத்திவிடுவோம். இரண்டாக உடைந்ததையே இங்குப் போடலாம்."

நாங்கள் ஐந்து துண்டுகளையும் ஒட்டமுயன்றோம்! ஆனால் இந்த உறைபனிக்காலத்தில் பசை ஒட்டவில்லை. ஆகவே இரண்டாகப்போன கண்ணாடியை ஜன்னலில் வைக்கமுயன்றோம்; அதற்குள் அதன் ஒருபாகத்தை சிஷ்கின் கீழேபோட்டுத் தூள் தூளாக உடைத்துவிட்டான். அந்தச் சமயத்தில் அவன் தாயார் உள்ளே வந்தாள். என்ன நடந்ததென்பதை விளக்குவதற்கு சிஷ்கின் முயன்றான்.

“சின்னக் குழந்தையைவிட நீ மோசம்! உன்னை வீட்டில் தனியே விட்டுச் செல்வதே பேராபத்து. அடுத்தபடி என்ன செய்வாயென்று ஆண்டவனுக்குத்தான் தெரியும்.”

“நான் கண்ணுடியைப் பொருத்திவிடுவேன், பார். துண்டுகளைச் சேகரிக்கப்போகிறேன்” என்றுன் சிஷ்கின்.

“ஒன்றும் செய்யவேண்டாம். உன்னுல் முடியாது. ஜன்னல் பளிங்கு பதிக்கிறவனைக் கூப்பிடவேண்டும். இது என்ன?”

“ஒரு தட்டை உடைத்தேன்?”

“ஓ!” என்று மட்டுமே அவன் தாயார் சொன்னுள்; அவளுடைய கண்களை மூடிக்கொண்டாள். ஏதோ தலைவலி வந்த மாதிரி இரண்டு கைகளையும் புருவங்களிலே வைத்துக் கொண்டாள். பிறகு கைகளை எடுத்துவிட்டு, “இவற்றை யெல்லாம் சுத்தம் செய்துவிட்டுப் பாடங்களைப்படி! அதைப் பற்றி நினைக்கவுமில்லையே!”

தட்டுச் சிதறல்களை எடுத்துக்கொண்டு, குப்பைக் கூடைக்குச் சென்றோம்.

“உன் தாயாருக்கு இளகியமனது. நான் இந்த மாதிரி என் வீட்டில் செய்திருந்தால், நாள் முழுவதும் பேசுவார்கள்” என்றேன்.

“கவலைப்படாதே, இங்கும் நிறையப் பேசுவார்கள். ஸினு அத்தை வந்தபின் நடப்பதைப்பார். அவள் எனக்குக் கொடுக்கும்பொழுது உனக்கும் கிடைக்கும்.”

அவள் வரும்வரை காத்திருக்க எனக்குப் பிரியமில்லை; உடனே விடைபெற்றுக்கொண்டேன்.

அடுத்தநாள் சிஷ்கினை வீதியில் சந்தித்தேன். அன்று தான் பள்ளிக்கூடத்திற்கு வரப்போவதில்லையென்று கூறினுன். அவன் டாக்டரிடம் போய்க்கொண்டிருந்தான். உடம்பு சௌகரியமில்லையாம். பள்ளிக்கூடத்தில், ஆசிரியர்

சிஷ்கினைப்பற்றி கேட்டபொழுது, அவன் டாக்டரிடம் சென்றதைப் பார்த்ததாக நான் கூறினேன்.

"பள்ளிக்கூடம் முடிந்தபிறகு அவனைப்போய்ப்பார்" என்று ஆல்கா நிகோலிவ்னு கூறினுள்.

அன்று எங்களுக்கு டிக்டேஷன் இருந்தது. பள்ளிக்கூடம் முடிந்து விட்டுக்கு வந்தவுடன், வீட்டுப்பாடங்களை முடித்துவிட்டு சிஷ்கினைப் பார்க்கச்சென்றேன். அவன் தாயார் வீட்டுக்கு வந்துவிட்டாள். என்னைக் கண்டவுடன் சிஷ்கின் வாய்மீது விரலை வைத்தும் தலையை அசைத்தும் சைகை காட்டினுன். எதைப்பற்றியோ நான் மௌனமாயிருக்கவேண்டுமென்கிருனென்று ஊகித்தேன். அவனுடன் வழி நடைக்குச் சேன்றேன்.

"நான் பள்ளிக்கூடத்திற்கு வரவில்லையென்று அம்மாவிடம் சொல்லாதே" என்ருன் அவன்.

"சரி, நீ ஏன் வரவில்லை? வைத்திய விடுதியில் என்ன சொன்னுர்கள்?"

"ஒன்றும் சொல்லவில்லை."

"ஏன்?"

"அதுவா? அங்கு ஒரு மோசமான கன்னெஞ்ச டாக்டர் இருக்கிருர். எனக்குச் சுகமில்லையென்று சொன்னுல், நான் சுகமாயிருப்பதாக அவர் கூறுகிருர். காலையில் தும்மின தும்மல்களில் தலையே பிய்ந்துவிடும் போலிருந்ததென்று நான் கூறினேன். பரவாயில்லை; நன்ருகத்தும்மினுல், புத்தி தெளிவடையும் என்று அவர் கூறினுர்."

"ஒருவேளை உனக்கு நோயில்லையோ?"

"எனக்கு என்ன நோய்?"

"பிறகு டாக்டரிடம் ஏன் போனுய்?"

"உடல் நலமில்லை என்று காலையில் அம்மாவிடம் கூறினேன். அப்படியானுல் டாக்டரைப்போய்ப்பாரென்று அவள்

சொன்னாள். முன்பே பல லீவ்லெட்டர்கள் எழுதிவிட்டாளாம். இனி எழுதமாட்டாளாம்.''

''சுகமாயிருக்கும்பொழுது எதற்காகப் பொய் சொல்கிறாய்?''

''மடையா! இன்றைக்கு டிக்டேஷன் என்று ஆசிரியர் சொல்லவில்லையா? நான்வந்து 2 மார்க் வாங்குவதில் புண்ணியமா புருஷார்த்தமா?''

''இப்போ என்ன செய்வாய்? நாளைக்கு டீச்சர் கேட்பாளே ஏன் வரவில்லையென்று!''

''எனக்குப் புரியவில்லை. நாளைக்கும் பள்ளிக்கு வரமாட்டேன். ஆல்கா நிகோலிவ்னா கேட்டால் எனக்கு உடம்பு சுகமில்லையென்று சொல்லிவிடு.''

''இது தப்பு. அறியாப்பிள்ளை வேலை. உண்மையை ஒப்புக்கொண்டு அம்மாவிடம் லீவ்லெட்டர் எழுதி வாங்கு.''

''அது நடக்காது. அம்மா இனி எழுத மாட்டாள். எனக்கு இதுவே தொழிலாகி விடுமாம்.''

''வேறு என்ன செய்வது? தினம் பள்ளிக்கு 'டிமிக்கி' கொடுக்க முடியுமா? அம்மாவிடம் சொல்லு, புரிந்து கொள்வாள்.''

''சரி, தைரியத்தை வரவழைத்துக்கொள்ள முடிந்தால் சொல்கிறேன்.''

மறுநாளும் சிஷ்கின் பள்ளிக்கு வரவில்லை. அம்மாவிடம் சொல்லத் தைரியமில்லை என்று அனுமானித்தேன். ஆல்கா நிகோலிவ்னா அவனைப்பற்றி விசாரித்தாள். நோய்வாய்ப் பட்டிருப்பதாகக் கூறினேன். என்னவென்று கேட்டபொழுது காய்ச்சல் என்றேன்.

சிஷ்கின் பொருட்டு ஒரு பச்சைப் பொய் கூறினேன். ஆனால் ஒருவரிடமும் சொல்லாதேயென்று அவன் கேட்டுக் கொண்டிருக்கும்போது, நான் காட்டிக் கொடுக்க முடியுமா?

# 13. புரியாத பாடம்

பள்ளி முடிந்தவுடன் சிஷ்கின் வீட்டுக்குப்போனேன். அவனுக்காக ஆல்கா நிகோலிவ்னுவிடம் பொய்சொன்ன தகவலைத் தெரிவித்தேன். அவன் தாயாரிடம் உண்மையைச் சொல்லப் பயந்ததாலும், அவளுடைய குறிப்பு இல்லாமல் பள்ளிக்கு வரப் பயந்ததாலும், காலைப்பொழுதெல்லாம் டவுனில் அலைந்ததைப்பற்றிக் கூறினுன்.

“இனி என்ன செய்வாய்? இன்ருவது சொல்வாயா? சொல்லிவிடு.”

“அதுதான் புரியவில்லை. எனக்கு இன்னெரு யோசனை இருக்கிறது. நான் சர்க்கஸில் சேர்ந்தால் என்ன?”

“சர்க்கஸிலா?”

“ஆம், என்னை வித்தைக்காரனுகச் சேர்த்துக் கொள்ளும்படி அவர்களிடம் கூறுவேன்.”

“சர்க்கஸில் நீ என்ன செய்வாய்?”

“மற்றவர்கள் செய்வதைச் செய்கிறேன். அந்த நாய்களைப் பழக்கியிருக்கும் பெண்மாதிரி நான் லாப்ஸிக்கைப் பழக்குகிறேன்; அவர்கள் நிச்சயமாக என்னை எடுத்துக் கொள்வார்கள்.”

“எடுக்காவிட்டால்?”

“நிச்சயம் எடுப்பார்கள்.”

“படிப்பு?”

“நான் இனி பள்ளிக்குப் போகமாட்டேன். ஆனல் என்னை ஆசிரியரிடம் காட்டிக்கொடுக்காதே. தோழனுக இரு.”

"பள்ளிக்குப் போகாமலிருப்பதை உன் அம்மா கண்டு பிடித்துவிடுவாள். பலநாள் திருடன் ஒருநாள் பிடிபடுவான்!"

"அதற்கு நாளாகும். அதற்குள் நான் சர்க்கஸ் வித்தைக் காரனுகிவிடுவேன். எல்லாம் சரியாகிவிடும்."

"உன்னுல் லாப்ஸிக்கைப் பழக்க முடியாவிட்டால்?"

"நிச்சயம் முடியும். ஏன் முடியாது? இதோபார். லாப்ஸிக்!"

லாப்ஸிக் பரபரப்பாக ஓடிவந்தது.

சிஷ்கின் சீனிக்கிண்ணத்தை எடுத்துக்கொண்டான்.

"லாப்ஸிக்! உனக்கு எண்ணுவதற்கு சொல்லிக்கொடுப் போம். நல்ல நாயாகப் படித்தால் சீனி கிடைக்கும்; இல்லா விட்டால் கிடைக்காது."

லாப்ஸிக் கிண்ணத்தைப் பார்த்துச் சப்புக்கொட்டியது.

"நக்கவேண்டாம். எண்ணவேண்டும்" என்று சொல்லி

விட்டு, சிஷ்கின் 10 சீனிக்கட்டிகளே எடுத்துவைத்தான். ஒன்றுென்ருக பெஞ்சின்மீது வைக்கும்பொழுது உரக்க எண்ணிஞன்.

"10 இருப்பதை பார்த்தாயா, லாப்ஸிக்?"

அது வாலே ஆட்டியது; சீனியிடம் விரைந்தது.

சிஷ்கின் அதன் மூக்குமீது தட்டிஞன். "முதலில் எண்ணு."

"எடுத்த எடுப்பிலேயே 10 எண்ணுமென்று எப்படி எதிர் பார்க்கிருய்? குழந்தைகளுக்குக்கூட அப்படி சொல்லிக் கொடுப்பதில்லேயே!" என்றேன் நான்.

"5—அல்லது 3-ல் தொடங்கலாமா?"

"ஆம், 3—ல் தொடங்கு" என்றேன்.

‘‘2-லேயே தொடங்குவோம்’’ என்றான் சிஷ்கின்.

2-கட்டிகளை தவிர மற்றவற்றை பெஞ்சியிலிருந்து எடுத்தான்.

‘‘லாப்ஸிக், இதோபார். இரண்டே கட்டிகள் இருக்கின்றன. ஒன்றை எடுத்தால் ஒன்றுதான் மிச்சம். அதை திருப்பிவைத்தால் 2 தான் உள்ளன, பார்த்தாயா? இப்போதுசொல். இங்கு எத்தனை சீனிக்கட்டிகள் உள்ளன?’’

லாப்ஸிக் நிமிர்ந்து நின்றது, வாலை ஆட்டியது, பிறகு பின்னங்கால்களில் அமர்ந்துகொண்டு சப்புக்கொட்டியது.

‘‘அது எப்படி பதில் சொல்லும்? மனிதமொழி தெரியுமா?’’ என்றேன் நான்.

‘‘மனித மொழி பேசவேண்டாம். நாய் மொழியிலேயே சொல்லட்டும். லாப்ஸிக், வள்-வள்! வள்-வள்! இது இரண்டு.’’

லாப்ஸிக் என்னைப் பார்த்தது; சிஷ்கினைப் பார்த்தது; ஒன்றுமே பேசவில்லை.

‘‘ஏன் இந்த மௌனம்? உனக்குச் சீனி வேண்டாமா?’’ என்றான்.

அது பதில் உரைக்கவில்லை; சீனியை அடையமுயன்றது.

‘‘வராதே! உதவாக்கரை நாயே!’’ என்று சிஷ்கின் கத்தினான். அது பின்வாங்கிச் சப்புக்கொட்டிக்கொண்டேயிருந்தது.

‘‘சொல். வள்–வள், வள்–வள் என்று சொல்’’ என்று நாங்கள் பன்னிப்பன்னிக் கூறினோம்.

‘‘அதற்கு விளங்கவேயில்லை’’ என்று சிஷ்கின் கத்தினான். அவனுக்கு நிலைகுலைந்துவிட்டது.

‘‘நாய் மனது நோகச் செய்யவேண்டும். அதுதான் வழி. நான் உனக்கு சொல்லிக்கொடுக்கிறேன். அப்பொழுது சீக்கிரம் படித்துக்கொள்ளும்.’’

"சரி, சொல்லிக்கொடு. எனக்கும் அது பிடிக்கும்" என்றேன்.

"நீ தவழும் குழந்தை மாதிரி நின்றுகொண்டு குரை. உன்னைப் பார்த்து அது படித்துக்கொள்ளும்" என்ருன் சிஷ்கின்.

நான் அம்மாதிரியே செய்தேன்.

"சொல்லு; இங்கு எத்தனை சீனிக் கட்டிகள் இருக்கின்றன?" என்று சிஷ்கின் கேட்டான்.

"வள்–வள்" என்று உரக்கக்குரைத்து விடைதந்தேன்.

"நல்ல நாய்!" என்று சிஷ்கின் என் தலையில் தட்டிக்கொடுத்தான்; என் வாயில் ஒரு சீனிக் கட்டியைப் போட்டான்.

நான் சத்தம் கேட்கும் வகையில் சீனியை நற நறவென்று கடித்தேன், லாப்ஸிக் பார்த்து பொருமைப் படவேண்டுமென்று. லாப்ஸிக், நாவில் நீர் ஊறி வழிய, என்னைப் பார்த்தது.

"இதோபார், லாப்ஸிக். ஒரு சீனிக்கட்டி மிச்சமிருக்கிறது 'வள்' என்பது ஒன்று. இப்போ சொல்."

லாப்ஸிக் பொறுமையிழந்து சீறியது; தரையின்மீது வாலால் அடித்தது. அதன் தடுமாற்றத்தை விழிகளும் வெளியிட்டன.

"பதில்! பதில்!" என்று சிஷ்கின் வற்புறுத்தினுன்.

தான் குரைக்கவேண்டுமென்று சிஷ்கினுக்குத் தெரியவில்லை.

"மகாமட்டி இது!" என்று சொல்லிவிட்டு, "நீ குரை" என்று என்னைப் பார்த்துச் சிஷ்கின் கூறினுன்.

நான் 'வள்' என்று குரைத்ததும், இன்னெரு சீனிக் கட்டியும் என் வாய்க்குள் திணிக்கப்பட்டது.

லாப்ஸிக் சப்புக்கொட்டிவிட்டுச் சீறியது.

"ஒரு நிமிஷத்தில் அதை மனம் நோகச் செய்வோம்," என்ருன் சிஷ்கின்.

மீண்டும் ஒரு கட்டியை எடுத்துவைத்தான்.

"முதலில் விடைதரும் நாய்க்கு இந்தக்கட்டி; எண்ணு."

'வள்' என்று நான் கத்தினேன்.

"இது நல்ல நாய்! லாப்ஸிக்! நீ மட்டி" என்ருன் சிஷ்கின்.

அவன் சீனிக்கட்டியை எடுத்து லாப்ஸிக்கிடம் கொடுப்பது மாதிரி ஆசைகாட்டிவிட்டு என் வாயில் போட்டுவிட்டான். நான் நற நறவென்றுச் சத்தஞ்செய்து கடித்தேன். ஒன்றும் புரியாத நாய்க்குட்டி சப்புக்கொட்டியது, சீறியது, தலையை ஆட்டியது.

"பொருமையா? குரைப்பவனுக்குத்தான் சீனி, குரைக்காதவனுக்குகிடையாது" என்று சிஷ்கின் சந்தோஷத்துடன் கூறினன்.

இன்னொரு சீனிக்கட்டியை லாப்ஸிக் முன் வைத்து எண்ணச் சொன்னன்.

லாப்ஸிக் தன் உதடுகளை நக்கியது, தலையை ஆட்டியது, எழுந்தது, உட்கார்ந்தது, சீறியது.

"எண்ணு, எண்ணு. இல்லாவிட்டால் சீனிகிடையாது."

லாப்ஸிக் விரைப்பாக நின்றது; கொஞ்சம் பின் வாங்கியது; திடீரென்று பயங்கரமாகக் குரைத்தது.

"சபாஷ்! சீனி உனக்குத்தான்" என்று சிஷ்கின் கத்தினன். சீனிக்கட்டியை அதன் வாயில்போட்டான்.

லாப்ஸிக் அதைக் கண நேரத்தில் விழுங்கிவிட்டது.

"மீண்டும் செய்," என்ருன் சிஷ்கின்.

'வள்,' என்றது லாப்ஸிக். இன்னொரு சீனிக்கட்டி அதன் வாய்க்குள் சென்றது.

"மீண்டும் செய்."

'வள்!'

சிஷ்கினுக்கு ஒரே பரபரப்பு! உற்சாகம்! "அதற்குப் புரிகிறது. இனிமேல் சொல்லிக் கொடுத்துவிடலாம்" என்று கத்தினன். அந்த நேரத்தில் சிஷ்கின் தாயார் வேலை முடிந்து வீட்டுக்கு வந்தாள்.

"சீனிக் கிண்ணம் மேஜையில் என்ன செய்கிறது?" என்று அவள் கேட்டாள்.

"லாப்ஸிக்குக்குக் கற்றுக்கொடுப்பதற்காகக் கொஞ்சம் சீனி எடுத்துக்கொண்டேன்."

"உன் முட்டாள் தனத்தின் புதிய அமிசமா?"

"இல்லை, அம்மா. அது எண்ணுகிறது, நீயே பார்."

ஒரு சீனிக்கட்டியை எடுத்துவைத்து, "லாப்ஸிக். உனக்கு எண்ணத் தெரியுமென்று அம்மாவுக்குக் காட்டு" என்ருன் சிஷ்கின்.

'வள்' என்றது லாப்ஸிக்.

"இவ்வளவுதானு? ரொம்பப் படித்துவிட்டதாகத் தோன்றவில்லையே," என்ருள் தாயார்.

"என்ன, அம்மா? லாப்ஸிக் மனிதப் பிறவியா? இப்பொழுதுதான் 1 வரை எண்ணுவதற்கு சொல்லிக் கொடுத்திருக்கிருேம். அடுத்தபடி 2 வரை சொல்லிக்கொடுப்போம். சீக்கிரத்தில் அது பல எண்களைப் படித்துவிடும்."

"அப்படியா? சர்க்கரையை இனி ஒளித்துவைக்க வேண்டும்" என்று சிஷ்கின் தாயார் கூறினுள்.

"நானா தின்கிறேன்? கல்விக்காகத்தானே?" என்று மனம் நொந்தவன் மாதிரி சிஷ்கின் கேட்டான்.

அவன் தாயார் சிரித்தாள். "கல்வி? உன் சொந்தக் கல்வி என்னவாயிற்று? உன் பாடங்களைப் படித்து விட்டாயா?"

"இன்னும் செய்யவில்லை. ஒரே நிமிஷத்தில் ஆரம்பிப் பேன்."

"நான் வீடுவருவதற்குள் வீட்டுப் பாடங்களை முடித்து விட்டுத் தயராயிருப்பேனென்று வாக்குறுதி அளிக்க வில்லையா?"

"ஆமாம், அம்மா. லாப்ஸிக்கால் மறந்துவிட்டேன்."

"இனி மறக்காதே, மறந்தால் சீனியை மறைத்து விடுவேன்."

சிஷ்கினும் நானும் சேர்ந்து உட்கார்ந்து படித்தோம். வீட்டுவேலை என்னவென்றே அவனுக்குத் தெரியாதல்லவா? வீட்டுப் பாடங்களை முடித்தபின், லாப்ஸிக்கை படிப்பிக்கப் போனோம்.

"சீனிக்கட்டியை எண்ணத் தெரிந்தால் மட்டும் போதாது. அதற்கு இலக்கங்களே தெரியவேண்டும்" என்றான் சிஷ்கின்.

நாங்கள் ஒரு அட்டையை எடுத்து 1 என்று எழுதி, லாப்ஸிக்கிடம் காட்டினோம்.

"லாப்ஸிக், இது 1; ஒரு சீனிக்கட்டி மாதிரியேதான். இப்போ நீ சொல்லு" என்று சிஷ்கின் விளக்கினான்.

'வள்' என்று லாப்ஸிக் பதிலளித்தது.

"நல்ல நாய். சீக்கிரமாகப் படித்துவிட்டது. அடுத்தபடி இரண்டு எண்ண சொல்லிக்கொடுப்போம்" என்று சிஷ்கின் திருப்தியோடு சொன்னான்.

லாப்ஸிக் முன் இரண்டு சீனிக்கட்டிகளை வைத்து 'எண்ணு' என்ருன் சிஷ்கின்.

'வள்' என்றது லாப்ஸிக்.

"ஒன்றல்ல, 2 கட்டிகள் உள்ளன. யோசித்துப்பார்."

'வள்' என்றது லாப்ஸிக்.

"அட வள்ளே! 'வள்–வள்' என்று சொல்லவேண்டு மென்று தெரிந்தும் 'வள்' என்று சொல்கிருய், பூசணிக்காய்த் தலையே!" என்று சிஷ்கின் பரிகசித்தான், கோபித்தான். அது 'வள்' என்று மீண்டும் குரைத்தது. "அடமட்டி! இங்கு எத்தனை கட்டிகள் இருக்கின்றன என்பதை உன்னுல் பார்க்கமுடியாதா?"

லாப்ஸிக் பயத்துக்கு இரையாகிப் பின்வாங்கியது.

"கூச்சல்போடாதே! நாய்களிடம் நன்னயத்துடன் நடந்துகொள்ளவேண்டும். இல்லாவிட்டால் அவை பீதி யடைகின்றன. பிறகு எதையும் போதிக்கமுடியாது" என்று நான் கூறினேன்.

சிஷ்கின் தன் குரலைத் தாழ்த்தி, ஒன்றுக்கும் இரண்டுக் கும் உள்ள வேற்றுமையை விளக்கினுன்.

"இப்போ எண்ணு" என்று உத்திரவிட்டான். அது 'வள்' என்றது.

"இன்னெருரு தடவை, இன்னெருரு தடவை" என்று நான் தூண்டிவிட்டேன்.

லாப்ஸிக் என்னை ஓரக்கண்ணுல் பார்த்தது. நான் விறு விறுப்புடன் தலையை ஆட்டிச் சைகை காட்டினேன். இன்னெருதடவை அது கூச்சத்தோடு குரைத்தது.

"ரைட்! அதுதான் இரண்டு" என்று கத்திய சிஷ்கின் அதற்கு ஒரு சீனிக்கட்டிகொடுத்தான்.

"இன்னெருதடவை பார்ப்போம்" என்ருன் சிஷ்கின்.

ஆனல் லாப்ஸிக் ஒருதடவைதான் குரைத்தது.

"இன்னொருதடவை குரை" என்று நான் போனதடவை மாதிரி மெல்லிய குரலில் கூறினேன்.

"நீ சொல்லிக்கொடுக்காதே. அதுவாகத் தெரிந்து கொள்ளவேண்டும். சொல் லாப்ஸிக்" என்ருன் சிஷ்கின்.

லாப்ஸிக் மீண்டும் குரைத்தது.

"சரிதான். ஆனல் இடைநேரமில்லாமல் இரண்டு தடவை குரைக்கவேண்டும்" என்ருன் சிஷ்கின்.

மீண்டும் இதைச் செய்யச் செய்தான் சிஷ்கின். அது ஒருதடவை குரைத்தது; நாங்கள் மேலும் காத்திருப்பதைப் பார்த்து இன்னொருதடவை குரைத்தது. தொடர்ச்சியாக இருதடவைகள் குரைப்பதற்கு மெள்ளமெள்ளப் பழக்கிவிட்டோம். அன்று எல்லாம் நன்ருகத்தானிருந்தது; ஆனல் மறுநாள் பார்த்தால் நாய்க்கு ஒரே குழப்பமாயிருந்தது. நாங்கள் 3-ஐக் காட்டினல் அது 4,5 தடவைகள் குரைத்தது. நாங்கள் 10-ஐக் காட்டினல் அது 2 தடவைகள் குரைத்தது; இப்படிப்பட்ட அறிவீனமான காரியங்கள் பலவற்றை செய்தது. சிஷ்கினுக்கு கோபம்வந்தது; நாயைத் திட்டினன். அது வேண்டுமென்றே இப்படிச் செய்வதாக அவன் எண்ணினன். சில சமயங்களில் லாப்ஸிக் பிசகில்லாமல் பதில் கூறியது; அது அநேகமாகத் தற்செயலானதாகத்தான் இருக்கவேண்டும்; ஆனல் நாய்க்குப் புரிந்துவிட்டதாகவே சிஷ்கின்எ ண்ணினன்.

"சரியாகப் பதில் சொல்கிறது, பார்த்தாயா? அதற்குத் தெரியும். ஆனல் அடுத்த தடவைகேட்டால் பதில் சொல்லாது" என்ருன்.

நாய்க்கு எண்ணி எண்ணி களைப்புவந்துவிட்டதாகச் சிஷ்கின் எண்ணினன். தவருன பதில்களைச் சொன்னல், இனி இந்தப் பரீட்சை வைக்கமாட்டார்களென்று எண்ணி அது இம்மாதிரி செய்வதாக அபிப்ராயப்பட்டான். உதாரண

மாக, சிஷ்கின் 5-ஐக் காட்டினுன்; நாய் நான்கு தடவைகள் குரைத்தது.

"அது 4 அல்ல; நன்ருகப்பார்" என்ருன் சிஷ்கின் அன்பாக.

அது மீண்டும் நான்குதடவைகள் குரைத்தது.

அவன் 4-ஐ எடுத்துவைத்து "இது என்ன?" என்று கேட்டான்.

"வள், வள், வள், வள், வள்," என்றது லாப்ஸிக்.

"பார்த்தாயா? 5-ஐக் காட்டினுல் 4 என்கிறது. 4-ஐக் காட்டினுல் 5 என்று சொல்கிறது. நீயோ இது வேண்டுமென்று சொல்லவில்லை என்கிருய். அதன் வெடுவெடுப்புக்குக் காரணத்தை நான் அறிவேன். காலையில் தற்செயலாய் அதன் பாதத்தை மிதித்துவிட்டேன். அதற்குப் பழி வாங்குகிறது."

சிஷ்கின் சொல்வது எனக்கு விளங்கவில்லை; ஆனுல் எங்களுடைய பயிற்சி பெரிய தோல்வி என்பது எனக்கு விளங்கியது. எங்களுடைய பாடம் அதற்குப்புரியவில்லை. ஒருவேளை எங்களுடைய முறை பிசகோ, அல்லது இந்த நாய்க்குட்டிக்கு மூளை இல்லையோ, தெரியவில்லை.

"அம்மாவிடம் உண்மையை ஒப்புக்கொண்டுவிட்டுப் பள்ளிக்கூடத்திற்கு வா" என்றேன் நான்.

"இனி அதெல்லாம் முடியாது. இத்தனை நாட்கள் பள்ளிக்கூடத்திற்கு போகாமலிருந்த பிறகா? அம்மாவுக்கு இது தெரிந்தால் அவளுக்கு என்ன நேருமென்ற எனக்கு பயமாயிருக்கிறது."

"ஆல்கா நிகோலிவ்ஞுவிடம் யோசனை கேட்கக் கூடாதா?"

"அவளிடம் போகமுடியாது. அவமானமாயிருக்கிறது."

"உனக்கு வெட்கமாயிருந்தால், நான் சொல்கிறேன்."

"நீயா? என்னைக் காட்டிக்கொடுக்க விரும்புகிருயா? நல்ல நண்பன் நீ!"

"காட்டிக்கொடுக்கப் போகிறேனென்று சொன்னேனு? அப்படி நான் கருதவேயில்லை. உனக்குப் பேசுவதற்கு வெட்கமாயிருக்கிறதென்ருய்; நான் உதவலாமென நினைத்தேன்."

"அறியாக் கழுதை! நீ சொல்வதென்ருல் எனக்கு பன் மடங்கு அதிகமாக வெட்கமாயிருக்கும். இதைவிட மேலான யோசனை சொல்லமுடியாதென்ருல் பேசாமலிரு."

"என்னசெய்வது? லாப்ஸிக் ஒரு தோல்வி. உனக்கு சர்க்கஸில் வேலைக்கிடைக்காது. ஒருவேளை, லாப்ஸிக்குக்குச் சொல்லிக் கொடுக்கலாமென்று இன்னும் நினைக்கிருயா?"

"இல்லை. அதில் பயனில்லை. என்னைக்கேட்டால் லாப்ஸிக் பலே மோசடிக்காரன் அல்லது வடிகட்டிய முட்டாள்; அத்துடன் மாரடிக்கமுடியாது. இன்னெரு நாய்தான் வாங்க வேண்டும். இல்லாவிட்டால், மல்லன் ஆகிவிடலாமென்று பார்க்கிறேன்."

"அது எப்படி?"

"நான் கரணம்போடுவேன்; கைகள்மீது நடப்பேன். செய்து பார்த்திருக்கிறேன். மோசமில்லை. கைமேல் அதிக நேரம் நிற்கமுடியாதென்பது மட்டுமே குறை. அது பழக்கமாகும்வரை, யாராவது என் கால்களைப் பிடித்துக்கொள்ள வேண்டும். நீ என் கால்களைப் பிடித்துக்கொள், நான் காட்டுகிறேன்."

அவன் கைகளைக் கீழே ஊன்றிக்கொண்டான்; நான் அவன் கால்களைத் தூக்கிப் பிடித்துக்கொண்டேன். அவன் கைகளால் அறையில் நடந்தான். ஆனல் சீக்கிரத்தில் கைகள் களைத்துச் சோர்ந்துவிட்டன. அவன் விழுந்தான்; தரைமீது தலைமோதியது.

" எழுந்துகொண்டு, நெற்றி வீக்கத்தைத் தடவிக் கொண்டே, "இதுபரவாயில்லை, என் கைகளில் கொஞ்சங் கொஞ்சமாகப்பலம் ஊறிவிடும். பிறகு உதவியில்லாமல் நடப் பேன்" என்ருன்.

"மல்லனுவதற்கு நாள் பிடிக்கும்" என்றேன் நான்.

"பரவாயில்லை. கார்கால விடுமுறை சீக்கிரம் வரப் போகிறது. அதுவரை எப்படியாவது சமாளித்துவிடுவேன்."

"அதற்குப் பிறகு என்னசெய்வாய்? இந்த 'லீவ்' வந்தது தெரியாமல் போய்விடும்."

"சரி, கோடை லீவ் இருக்கிறது."

"அது ரொம்ப நாட்களுக்குப் பிறகு."

"பரவாயில்லை."

சிஷ்கின் அலாதியான பையன்! எந்தக் கேள்விக்கும் அவனிடம் விடை தயாராயிருக்கிறது. அவன் எதையும் கற்பனை செய்தாலே போதும்; முன்பே கைகூடிய காரிய மாகவே அதை நினைத்துவிடுவான். இதெல்லாம் வெற்றுரை என்பதை நான் உணர்ந்தேன். சில நாட்களில் அவன் வேறு ஏதாவது யோசனை வைத்திருப்பான் என்பதையும் நன்கறிவேன்.

# 14. சஞ்சலம் நீங்கியது

**சி**ஷ்கின் பள்ளிக்கூடம் போவதில்லையென்ற விஷயம் அவனுடைய தாயாருக்கும் அத்தைக்கும் தெரியாது. அவன் தாயார் தினந்தோறும் வீட்டுக்கு வந்தவுடன் அவன் நோட் புத்தகங்களைப் பார்ப்பது மெய்; ஆனால் அவள் வருவதற்கு முன் நான்போய் வீட்டுப் பாடங்களைச் செல்லிவிடுவதால், அவற்றைச் சிஷ்கின் செய்துவிடுவான். தாயார் கண்டு பிடித்துவிடுவாளென்ற பயத்தில், முன்னைவிட இப்பொழுது முறையாக வீட்டுப் பாடங்களை எழுதிப் படித்தான். ஒவ் வொரு நாளும் பையை எடுத்துக்கொண்டு வீட்டைவிட்டுக் கிளம்புவான்; பள்ளிக்குப் போவதிற்குப்பதிலாக ஊரைச் சுற்றுவான். அவனுடைய அத்தை பிற்பகலில்தான் பயிற்சி சாலைக்குப் போவாள்; ஆகவே அவன் பள்ளி நேரத்தில் வீட்டிலிருக்கமுடியாது. ஆனால் வீதியில் திரிவதும் பாதுகாப் பானதல்ல. ஒரு நாள், அவன் எங்களுடைய ஆங்கில ஆசிரியர்மீது மோதிக்கொள்ள விருந்தான். வேகமாகப் பக்கத்துத் தெருவுக்குள் புகுந்துகொண்டான், அவளுடைய பார்வையிலிருந்து தப்புவதற்காக. இன்னொரு நாள், அண்டை வீட்டுக்காரியைப் பார்த்துவிட்டான்; அவள் போகும்வரையில் பக்கத்துக் கதவண்டை ஒளிந்துகொண் டான். தெருக்களில் நடப்பதற்கே பயந்தான். தெரிந்தவர் களைச் சந்திக்காமலிருப்பதற்காக, வெகுதூரம் போய்விடு வான். அப்பொழுது, தெருவில் போகிறவர்களும் வருகிறவர் களும் தன் விவகாரத்தைத் தெரிந்துகொண்டு தன்னையே விறைத்துப் பார்ப்பதாக அவனுக்குத் தோன்றும். கடுங் குளிர்காலம்; ரொம்ப நேரம் வீதியில் இருக்கமுடியாது; அடிக்கடி ஏதாவதொரு கடையில் குளிர் காய்வான்.

இந்த விவகாரத்தில் எனக்கு வெறுப்பு ஏற்பட்டது. என்னசெய்வதென்று தெரியவில்லை. ஒரு நிமிஷம்கூடச்

சிஷ்கினை மறக்கமுடியவில்லை. என் பக்கத்துக்காலி இடம் அவனை நினைவூட்டிக்கொண்டேயிருந்தது. நாங்கள் குளிர் தெரியாத வகுப்பறையில் உட்கார்ந்திருக்கும்பொழுது, தன்னந்தனியாக நகரத்தில் திரிந்தும் தெரிந்தவர்களைக் கண்டால் திருடன் மாதிரி ஒளிந்துகொண்டும் குளிர் காய்வதற்காகக் கடைகளுக்குசென்றும் காலங்கழிக்கும் சிஷ்கினைப் பற்றி நான் எண்ணுவேன். அவனைப்பற்றிய சிந்தனையால் என் பாடங்களைக்கூடச் சரிவர கவனிக்கமுடியவில்லை. வீட்டிலும் அவனைப்பற்றிய நினைவுதான். இரவிலும் அவனுக்கு ஒரு வழி காண்பதற்காகப் பலபல யோசனைசெய்து மண்டையை உடைத்துக்கொள்வேன். உறங்கமுடியாது. நான் ஆல்கா நிகோலிவ்னுவிடம் கூறினுல், அவள் உடனே அவனைப் பள்ளிக்குகொண்டுவந்துவிடுவாள்; ஆனுல் காட்டிக் கொடுத்தவன் என்ற கெட்டபெயர் எனக்கு வருமென்று பயந்தேன். இதைப்பற்றி யாரிடமாவது பேசவேண்டுமென்று துடித்தேன்; ஆகவே லிக்காவிடம் வாய்கொடுத்தேன்.

"லிக்கா, உன் வகுப்பு மாணவிகள் ஒருவரையொருவர் காட்டிக்கொடுப்பார்களா?"

"நீ என்ன சொல்கிருய்? விளங்கவேயில்லை."

"ஒரு சிறுமி, ஏதாவது செய்யக்கூடாததைச் செய்கிருள். வேறு யாராவது இதைப்பற்றி 'டீச்சரிடம்' சொல்வாளா? இது மாதிரி உன் வகுப்பில் நடந்திருக்கிறதா?"

"ஓ! அன்றைக்கு பெட்ரோவா ஜன்னல் மீதிருந்த பூச்செடிச்சட்டியை உடைத்துவிட்டாள். இன்னெரு பெண் செய்தாளென்று எண்ணிக் குற்றம் செய்யாத பெண்ணைத் தண்டிக்கப்போனுர் டீச்சர். ஆனுல் பெட்ரோவா உடைத்ததை பார்த்தவள் நான். ஆகவே டீச்சரிடம் சொன்னேன்."

"சொன்னுயா? குடும்பத்திலேயே கோள்சொல்லிஇருப்பதாக நான் ஒருபொழுதும் நினைக்கவில்லை."

"நான் கோள்சொல்லவில்லை. உண்மையைச் சொன்னேன். இல்லாவிட்டால், டீச்சர் ஒரு நிரபராதியை தண்டித்திருப்பாள்."

"இருந்தாலும், இது கோள் சொல்வதுதான்; எங்கள் வகுப்பில் எவரும் காட்டிக்கொடுக்கமாட்டோம்" என்றேன் நான்.

"அப்படியானால் ஒருவர் மீதொருவர் பழி சொல்வீர்களா?"

"எதற்கு?"

"இதைக் கேள். உதாரணமாக, நீ வகுப்பறையிலுள்ள பூச்செடிச் சட்டியை உடைக்கிறாய்; வேறு ஒருவன்மீது டீச்சர் குற்றஞ்சாட்டுகிறாள்......"

"எங்கள் அறையில் பூச்செடிச் சட்டி இல்லை. கள்ளிச் செடிதான் இருக்கிறது!"

"எதுவாயிருந்தாலென்ன? நீ கள்ளிச்செடியின் சட்டியை உடைக்கிறாய்; சிஷ்கின் செய்ததாக 'டீச்சர்' நினைக்கிறார். நீ உண்மையை ஒப்புக்கொள்ளாவிட்டால், மற்றவர்களும் மௌனம் சாதித்தால், சிஷ்கின் மீது பழி வருமல்லவா?"

"ஓ! சிஷ்கினுக்கு வாயில்லையா? தான் செய்யவில்லையென்று அவன் சத்தியஞ்செய்வான். அத்துடன் முடிந்தது."

"இருந்தாலும், அவனைச் சந்தேகிப்பாரல்லவா?"

"அதனாலென்ன? செய்யாதவன் செய்ததாக மெய்ப்பிக்க முடியுமா?"

"எங்கள் பள்ளியில் இப்படிப்பட்ட விஷயங்களை அனுமதிப்பதில்லை. ஒருவரைக் காரணமில்லாமல் சந்தேகிப்பதற்கு இடமே கூடாது. யாராவது தவறு செய்தால் தானே ஒத்துக்கொள்ளவேண்டும்; ஒத்துக்கொள்ளாவிட்டால், மற்றவர்களில் ஒருவர் உண்மையை எடுத்துரைக்கவேண்டும்" என்றாள் லிக்கா.

"நீங்களெல்லோரும் வத்தி வைப்பவர்கள்!"

"அதெல்லாம் வீண் பேச்சு. பெட்ரோவா யோக்கியப் பொறுப்புடன் நடந்துகொண்டாளா? 'டீச்சர்' அவளுக்கு பதிலாக இன்னொருத்தியை தண்டிக்கப் போகிருள்; அப்பொழுதும் கம்மென்று உட்கார்ந்திருக்கிருள்; தான் தப்பி விட்டோமென்ற மகிழ்ச்சி. நானும் சொல்லாமலிருந்தால், உண்மையை மறைத்த பழி என்னையும் சாரும். அது நேர்மையா?"

"சரி, சரி. இதுஒரு விசேஷமான நிலைமை. ஆனல் யாராவது ஒரு பெண், வீட்டுக்குத் தெரியாமல் பள்ளிக்கு டிமிக்கி கொடுத்துவந்திருக்கிருளா? அந்த மாதிரி நடந்திருக்கிறதா?"

"இல்லை. அப்படி நடந்ததே கிடையாது"

"எப்படி நடக்கும். பெண்கள் நல்லவர்கள், சாதுக்கள். அப்படிப்பட்ட கெட்டகாரியம் செய்வார்களா?" என்றேன் நான்.

"எப்படியிருந்தாலென்ன? எங்களுடைய வகுப்பு நல்ல வகுப்பு. சரி. நீ ஏன் கேட்கிருய்? அந்த மாதிரி உங்கள் பள்ளியில் நடந்திருக்கிறதா?" என்று லிக்கா கேட்டாள்.

"சே! சே! ஒருகாலுமில்லை."

"அப்போ ஏன் கேட்டாய்?"

"சும்மா! தெரிந்துகொள்வதற்குத்தான்."

அதற்குப் பிறகு நான் லிக்காவுடன் உரையாடவில்லை. ஆனல் சிஷ்கின் விஷய சிந்தனையை நிறுத்த முடியவில்லை. அம்மாவின் யோசனையைக் கேட்கப் பேராவலாக இருந்தேன். ஆனல் அவள் உடனே பள்ளிக்குத் தெரிவித்து, குட்டை உடைத்துவிட்டால்! பயமாயிருந்தது. நான் இயற்கையாயில்லை என்பதை அம்மா கண்டுவிட்டாள். நான் ஏதோ சொல்ல விரும்புகிறேனென்பதைத் தெரிந்துகொண்ட

வள் மாதிரி அவள் என்னைச் சில சமயங்களில் பார்த்தாள். எனக்கு ஏதாவது சொல்லவேண்டும்போலிருந்தால், அம்மா அதை உடனே புரிந்துகொண்டுவிடுவாள். ஆனால் அவளாகக் கேட்கமாட்டாள். நானாகப் பேசும்வரை காத்திருப்பாள். ஏதாவது நடந்தால், வன்முறை மரியாதைக்கு காத்திருப்பதைவிட நானே உண்மையை ஒப்புக்கொள்வது மேலானதென்று அவள் சொல்லியிருக்கிறாள். அவள் எப்படித்தான் ஊகிக்கிறாளோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்! மூளையில் நான் யோசிப்பதையெல்லாம் முகம் கண்ணாடி மாதிரி பிரதிபலித்துப் பறைசாற்றுகிறதுபோலும்! அம்மாவை அடிக்கடி பார்த்தபடியாக அமர்ந்திருந்தேன். சொல்வதா வேண்டமா என்ற வாதம் மனத்திலே. அம்மாவும் என் பேச்சுக்காகக் காத்திருப்பவள் மாதிரி அடிக்கடி என்னைப் பார்த்தாள். இது மாதிரி ரொம்ப நேரமாகிவிட்டது. நான் புத்தகத்தைப் படிப்பதுபோல நடித்தேன்; அம்மா தையல் வேலை செய்வதுபோல பாசாங்கு செய்தாள். கடைசியில் அம்மா பொறுமை இழந்து சிரித்துவிட்டாள்.

"சொல்லவேண்டியதைச் சொல்!" என்றாள்.

"எதைச் சொல்வது?" என்றேன் ஒன்றும் புரியாத மாதிரி.

"மனதிலிருப்பதைச் சொல்."

"என் மனதிலா? ஒன்றுமில்லையே," என்றேன். ஆனால் 'தடதட' வென்று என்னையுமறியாமல் சொல்லிவிடவிருந்தேன்; அதற்குள் நல்ல வேளையாக அம்மாவே—பேசிவிட்டாள் :—

"ஏதோ சொல்லவேண்டுமென்று துடித்துக்கொண்டிருக்கிறாய். அவ்வளவுதான் எனக்குப் புரிகிறது. மூன்று நாட்களாகத்தான் உன் முகத்தில் உரித்துவைத்திருக்கிறதே! சொல்லு, சொல்லு. எப்படியும் நீ சொல்லாமலிருக்கப் போவதில்லை. இப்போதே சொல்லிவிடு. பள்ளியில் ஏதாவது தகராறு?"

"இல்லை. பள்ளியிலில்லை; ஆமாம் ஆமாம். பள்ளியில் தான்!"

"மீண்டும் 2 மார்க் வாங்கவில்லையே!"

"அதெல்லாமில்லை."

"பின்னர் என்ன தகராறு?"

"என்னைப்பற்றிய தகராறு அல்ல."

"யாருடையது?"

"......சிஷ்கின் விஷயம்."

"சிஷ்கினுக்கு என்ன?"

"அவனுக்கு படிப்பில் பிரியமில்லை."

"அப்படியா?"

"பள்ளிக்கூடத்தையே அவன் பொருட்படுத்தவில்லை."

அளவுக்கு மீறிச் சொல்லிவிட்டதாக நான் அச்சப்பட்டேன். அம்மா நாளைக்கே டீச்சரிடம் போய் சொல்லி விட்டால்......?

"பாடங்களைப் படிப்பதில்லை, குறைந்த மார்க் வாங்கினான் என்று சொல்கிறாயா?" என்று அம்மா கேட்டாள். நல்லவேளை! அவள் புரிந்துகொள்ளவில்லை.

"படிப்பதில்லை; ருஷிய மொழியில் 2 வாங்கியிருக்கிறான். ருஷிய மொழிப் பாடத்தை தொடுவதேயில்லை. மூன்றாவதிலிருந்தே அதில் பின்தங்கியிருக்கிறான்."

"அப்படியானால் எப்படி நான்காவதுக்கு வந்தான்?"

"எனக்குத் தெரியாது. எங்கள் பள்ளிக்கூடத்திற்கே அவன் இந்த ஆண்டுதான் வந்தான்."

"உன் டீச்சர் அவன்பால் அதிக கவனம் செலுத்த வேண்டும். அவன் பின்தங்குவதை அனுமதிக்கக்கூடாது."

"அது சரி. அவன் குள்ளநரியாச்சே, என்ன செய்வது? மற்ற பையன்களிடமிருந்து வீட்டுப் பாடங்களைக் காப்பி அடித்துவிடுகிறான். டிக்டேஷன், வியாசம் ஆகிய வகுப்புகள் உள்ள நாட்களில் பள்ளிக்கூடத்துக்கு மட்டம்போடுகிறான்."

"நீ கைகொடுக்கவேண்டும். அவனைப் பற்றி கவலைப் படுகிறாய், ஏன் உதவக் கூடாது?"

"சுயமுயற்சியில் நாட்டமில்லாதவனுக்கு எப்படி உதவி செய்வது?"

"நன்றாகப் படிப்பதின் அவசியத்தை உணர்த்தவேண்டும். உன்னைப் பற்றியவரையில் நீயாகவே சமாளித்துக் கொண்டாய். ஆனால் அவனுக்கு உதவி தேவை. நல்ல நண்பன் ஒருவனிருந்தால், அவன் திருந்திவிடுவான்."

"நான் நல்லநண்பனல்லவா?"

"நீ கவலைப்படுவதைப் பார்த்தால் நல்ல நண்பன் போலத்தான் தோன்றியது."

அம்மாவிடம் முழு உண்மையையும் கூறவில்லையே என்று நான் வெட்கப்பட்டேன். சிஷ்கினிடம்பேசி முடிவு காணவேண்டுமென்று ஓடினேன்.

இந்த நாட்களில் சிஷ்கினும் நானும் மிகவும் நெருங்கியவர்களாகிவிட்டோம்; உயிர்த்தோழர்கள்தான். நாள் முழுவதும், எனக்கு அவனைப்பற்றிய நினைவுதான்; அவனுக்கும் என்னிடம் பற்றுதலும் பாசமும் ஏற்பட்டுவிட்டன. பள்ளித் தோழர்களின் பிரிவால் அவனை ஒரு தனிமை உணர்ச்சி பற்றிக்கொண்டிருந்தது. என்னைத் தவிர எவருமில்லையென்று அவன் கூறுவதுண்டு.

நான் சிஷ்கின் வீட்டுக்குப்போனபொழுது அவனும் அவனுடைய அன்னையும் அத்தையும் 'டீ' சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். மேஜை மீதிலிருந்த விளக்கு மங்கலான

வெளிச்சம் தந்தது. கோடைகாலத்தில், சூரியன் அஸ்த மித்தவுடன், இருள் சூழும் முன், மங்கலாக விருக்கிறதே தெரியுமா? அந்த அந்தி நேரம் மாதிரி இருந்தது. என்னைப் பார்க்க அவர்களுக்கு மகிழ்ச்சி. என்னை உட்காரவைத்து டீ குடிக்கச் சொன்னார்கள். பிறைச்சந்திர வடிவில் தனியாகச் செய்த ரொட்டியும் கொடுத்தார்கள். சிஷ்கினுடைய அத்தையும் அன்னையும் என் அம்மா அப்பாவைப்பற்றி விசாரித்தார்கள். என் தந்தை எங்கே வேலை செய்கிறார், என்ன வேலை செய்கிறார் என்பனவற்றைப் பற்றிக்கேட்டனர். சிஷ்கின் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டேயிருந்தான். ஒரு வார்த்தை பேசவில்லை. அவனுடைய ரொட்டியில் பாதியை டீயில்போட்டான். அது கொஞ்சம் கொஞ்சமாக உப்பியது; அதனால் டீ கோப்பையை நிரப்பிவிட்டது. ஆனால் அதையும் கவனிக்காமல் ஏதோ மனோராஜ்யம் செய்துகொண்டிருந்தான்.

"என்ன சிந்தனை, சிஷ்கின்?" என்று அவன் தாயார் கேட்டாள்.

சிஷ்கின் திடுக்கிட்டான். "அப்பாவைப்பற்றி எண்ணிக் கொண்டிருந்தேன், அம்மா. அவரைப்பற்றி கொஞ்சம் சொல்லு."

"என்ன சொல்வது? சொல்வதற்கிருந்ததையெல்லாம் சொல்லிவிட்டேன்."

"அப்படியானால் இன்னொரு தடவை சொல்லு."

"அப்பாவைப்பற்றி பேசக் கேட்பதில் அவனுக்கு அலுப்புத் தட்டுவதேயில்லை. ஆனால் அப்பாவை அவனுக்குத் தெரியாது" என்று அவனுடைய அத்தை கூறினாள்.

"எனக்குத் தெரியும், நினைவு இருக்கிறது."

"எப்படித் தெரியும்? யுத்தம் தொடங்கி, உன் தந்தை போர்முனைக்குச் சென்றபொழுது, விவரம் தெரியாத சிசுவாக விருந்தாய்."

"இருந்தாலும் எனக்கு நினைவு இருக்கிறது; நான் என் கட்டிலில் படுத்திருந்தேன். அப்பா வந்து என்னை எடுத்துக் கொண்டு முத்தம்கொடுத்தார்."

"அதெல்லாம் உனக்கு நினைவிலிருக்கமுடியாது. அச் சமயத்தில் நீ பிறந்து 21 நாட்கள் தானயிருந்தன."

"எனக்கு ஒரு வயதுக்கு மேலாகியிருந்தபொழுது அப்பா லீவில் வந்தாரே?"

"வந்தார். அந்த ஊர் வழியாக அவருடைய பட்டாளம் போய்க்கொண்டிருந்தபொழுது, அவர் வீட்டை எட்டிப் பார்த்துவிட்டு உடனே போய்விட்டார். அதைப்பற்றி அம்மா சொல்லியிருப்பாள்; உனக்கே ஞாபகமிருப்பதாக எண்ணிக் கொள்கிறாய்."

இதைக் கேட்டுப் புண்பட்ட சிஷ்கின் "இல்லை. எனக் கெல்லாம் ஞாபகமிருக்கிறது. நான் தூங்கிவிட்டேன்; அப் போதுதான் விழித்தேன். அப்பா என்னை எடுத்து முத்த மிட்டார். அவர் அணிந்திருந்த நீலக்கோட்டு கரடுமுரடாக இருந்தது, குத்தியது. அப்புறம் அவர் போய்விட்டார். அதற்குமேல் நினைவில்லை" என்றான்.

"அந்த வயதுக் குழந்தை எதையும் ஞாபகம் வைத்துக் கொள்ளமுடியாது" என்றாள் ஸினா அத்தை.

இதற்குள் சிஷ்கினுக்கு அழுகையே வந்துவிட்டது. "எனக்கு ஞாபகம் இருக்கிறது; இல்லையா, அம்மா, அதோ, அம்மா சொல்வாள்."

"நினைவிருக்கலாம், கண்ணே. அவருடைய கோட் முள் முள்ளாகக் குத்திற்று என்கிறாயே; அதனால் உனக்கு நினைவு இருக்கத்தான் செய்கிறது" என்று தாயார் ஆறுதலாகக் கூறினாள்.

"நிச்சயமாக. அந்தக் கோட் ரொம்ப முள்ளாக விருந் தது. நன்கு நினைவு இருக்கிறது. அவரை மறக்கவேமுடி

யாது. ஏனென்றால், அவர் என் அப்பா, அவர் யுத்தத்தில் கொல்லப்பட்டார்.''

அன்று மாலை முழுவதும் சிஷ்கின் மிக மிக அமைதியாயிருந்தான். அவனுடைய அலாதியான மனோநிலையைப் பார்த்தபின், திட்டமிட்டபடி பேசாமல் வீடு திரும்பினேன்.

அன்று இரவு நீண்டநேரம் தூங்கவில்லை; சிஷ்கினைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்தேன். அவன் நன்றாகப் படித்தால் எவ்வளவு நேர்த்தியாக இருக்கும்! நானும் மோசமாயிருந்தேன்; ஆனால் சுயமுயற்சியால் திருந்திவிட்டேன். ஆனால் அது சிஷ்கினைவிட எனக்கு சுலபமாயிருந்தது; எனக்கு அப்பா இருக்கிறாரல்லவா? எப்பொழுதுமே அவர் மாதிரியிருக்க ஆசைப்படுகிறேன். அவருடைய வேலை முறையை நேசிக்கிறேன்.

ஆனால், பாவம்! சிஷ்கினுக்குத் தந்தையில்லை. அவன் குழந்தையாயிருந்தபொழுதே அவர் சண்டையில் செத்துவிட்டார். •சிஷ்கினுக்கு உதவவேண்டுமென்று பெரிதும் விரும்பினேன். தினந்தோறும் அவனோடு ருஷ்யப் பாடம் படித்தால், எல்லாம் சரியாகிவிடுமென்று தீர்மானித்தேன். இந்த யோசனையால் ஏற்பட்ட பரபரப்பிலும் உற்சாகத்திலும் மெய்ம்மறந்தேன்; அவன் பள்ளிக்கு வராமலிருக்கும்வரை கூட்டுப் படிப்பால் பலனில்லையென்பதை மறந்துவிட்டேன். பள்ளிக்கு வரவேண்டுமென்று அவனிடம் வற்புறுத்துவதெல்லாம் வீண். ஏனென்றால் அவனுக்கு உறுதிப்பாடுகிடையாது. இவ்வளவு நாட்களுக்குப் பிறகு அம்மாவிடம்போய் உண்மையை ஒப்புக்கொள்ளும் தைரியம் அவனுக்கில்லை. நான் உறுதியாயிருக்கவேண்டும். மறுநாள் பள்ளி முடிந்தவுடன் போய்ப் பேசவேண்டும். அம்மாவிடம் விஷயத்தைக் கூறி பள்ளிக்குவர அவனாகப் பிரயத்தனம் செய்ய மறுத்தால், நான் இனி ஆல்கா நிகோலிவ்னாவிடம் புளுகமாட்டேனென்று அவனிடம் கூறுவேன்; இம்மாதிரி அவனைப் பாதுகாப்பது அவனுக்கே தீங்காகும். அவனுடைய நன்மைக்

காகத்தான் என்பதை அவன் புரிந்துகொள்ளாவிட்டால், நாம் என்னசெய்வது? என்னோடு சண்டை போட்டுக்கொள் ளட்டும்; அதைப் பொறுத்துக்கொள்வேன். நான் வேறு ஒன்றும் செய்திருக்க முடியாதென்பதை அவன் பிற்பாடு உணர்வான்; மீண்டும் சிநேகிதமாகிவிடுவான். நான் இந்த முடிவுக்கு வந்ததும், ஒரு பாரம் இறங்கிய மாதிரி இருந்தது. முன்பே அம்மாவிடம் இதைப்பற்றி சொல்லாமலிருந்ததற்காக வெட்கப்பட்டேன். அப்பொழுதே எழுந்திருந்து அம்மா விடம் சொல்லவிரும்பினேன். ஆனால் நேரம் அதிகமாகி விட்டது; எல்லோரும் ஆழ்ந்த உறக்கத்திலிருந்தார்கள்.

# 15. குட்டு வெளிப்பட்டது

அடுத்த நாள், நான் திட்டமிட்டதற்கு நேர்மாருகச் சம்பவங்கள் நிகழ்ந்தன. பள்ளி முடிந்தவுடன் சிஷ்கினிடம் போய் கடைசியாகப் பேசிவிடுவதென்று தீர்மானித்திருந்தேன். ஆனால் சிஷ்கினுக்குச் சுகமில்லையென்று நான் பள்ளி மாணவர்களிடம் சொல்லிவந்ததால், எங்களுடைய குழு முழுவதும் அவனைப்போய்ப் பார்ப்பதென்று முடிவு செய்தது. ஆகவே பாடங்கள் முடிந்த நிமிஷமே சிஷ்கினை எச்சரிப்பதற்காக வீட்டுக்கு ஓடினேன்.

"உனக்குத் தெரியுமா, வித்யா? நான் கைகளை ஊன்றிக் கொண்டு நிற்பேன். சுவர் ஓரத்தில் ஆரம்பிக்கவேண்டும். பல்டி அடித்து விழாமல் சுவர் பாதுகாக்கிறது."

"கைமீது நிற்பதற்கு இது வேளையல்ல; உடனே படுத்துக்கொள்" என்றேன் நான்.

"ஏன்?"

"நீ வியாதியஸ்தனல்லவா?"

"நான் நோயாளியா?"

"அப்படித்தான் என்னை சொல்லச் சொன்னாய்; நானும் பள்ளி மாணவர்களிடம் சொன்னேன்."

"அதனாலென்ன?"

"உன்னைப் பார்க்கப் பையன்களின் படை வருகிறது."

"அப்படியா!" அடுத்த நிமிஷமே, தான் அணிந்திருந்த நேர்த்தியான உடையோடும் பூட்ஸோடும் சிஷ்கின் படுத்துக்கொண்டான். போர்வையால் உடம்பு முழுவதும் மூடிகொண்டான்.

"அவர்கள் வந்தவுடன் என்ன சொல்வது?" என்ருன்.

"எனக்குத் தெரியாது. நோய் இருப்பதாகச் சொல்; வேறு என்ன சொல்வது?"

சிறிதுநேரத்தில் பையன்கள் வந்தார்கள். வழி நடையில் கோட்டுகளை அகற்றிவிட்டு அவர்கள் அறைக்குள் வரிசையாக வந்தனர். சிஷ்கின் போர்வையை முகவாய்க்கட்டை வரை இழுத்துக்கொண்டான்; அவர்களைச் சஞ்சலத்துடன் பார்த்தான்.

"ஹலோ, சிஷ்கின்!" என்று பையன்கள் அவனை நன் முகத்துடன் விசாரிக்கத் தொடங்கினுர்கள்.

"ஹலோ!" என்று அவன் பதிலுக்குக் கூறியது, சரியாக் கூட காதில் விழவில்லை; அவ்வளவு மெலிந்ததாகயிருந்தது குரல்!

"எப்படித்தேறி வருகிருயென்பதைக் காண வந்தோம்" என்ருன் யுரா.

"நல்லது! நன்றி! உட்காரக்கூடாதா?"

"எப்படி இருக்கிறது உடம்பு?" என்று வான்யா கேட்டான்.

"ரொம்ப மோசம்!"

"இன்னும் படுத்த படுக்கையில்தானு?"

"ஆமாம்"

"எப்போதும் படுத்திருப்பதென்ருல் பயங்கரமாகத் தானிருக்கும்" என்ருன் லோன்யா.

"ஆம்."

"நாள் முழுவதும் தன்னந்தனியாக இருக்கிருயா?"

"ஆம். அம்மா வேலைக்குப்போகிருள்; அத்தை நாடகப் பயிற்சி சாலைக்குப்போகிருள்."

“இனி நாங்கள் அடிக்கடி வருகிறோம். முன்னால் வராத தற்கு மன்னித்துவிடு. சீக்கிரம் சுகமாகிப் பள்ளிக்கூடத்திற்கு வந்துவிடுவாயென்று நினைத்தோம்.”

“அதைப்பற்றிப் பரவாயில்லை. வித்யா தினந்தோறும் வருகிறான்.”

“நாங்களும் தினசரி வருகிறோம். சரிதானே?” என்று ஸ்லாவா கேட்டான்.

“நல்லது, நல்லது.” என்று சஞ்சலத்துடன் பதில் அளித்தான் சிஷ்கின். வரவேண்டாமென்று சொல்ல முடியுமா?

“என்ன நோய்?” என்று யுரா கேட்டான்.

“கால்கள், கைகள் எங்கும் உபத்திரவம்.”

“அப்புறம்? கால்களில்கூட வலியா?”

“ஆம். தலையில்கூடத்தான்.”

“எப்பொழுதும் வலிக்கிறதா?”

“இ...இ...இல்லை! எப்போதுமில்லை. வலிக்கிறது, நிற் கிறது, மீண்டும் பயங்கரமாக வலிக்கிறது.”

“எங்கள் மாடியில் அப்படித்தான் ஒரு பையன் நோயுற் றிருந்தான். அது கீல்வாதமாம். உனக்கும் கீல்வாதமோ?” என்றான் வாஸ்யா.

“இருக்கலாம்,” என்று சிஷ்கின் பதிலளித்தான்.

“டாக்டர் என்ன சொல்கிறார்?” இது வான்யாவின் கேள்வி.

“இந்த டாக்டர்களைத் தெரியாதா? நாக்கை நீட்டு, அ—ஆ என்று சொல்லு என்பதுதான் அவர் சொல்வது.”

“என்ன சிகிச்சை தருகிறார்கள்?”

“ஏதோ ஒரு மருந்து.”

"என்ன மருந்து?"

"என்னவென்று தெரியாது; ஏதோ ஒருவகை 'மிக்சர்.'"

"கசக்கிறதா, இனிக்கிறதா?"

"கசப்பாய்க் கசக்கிறது" என்று சொல்லும்பொழுது சிஷ்கின் முகம் கோணியவிதத்தைப் பார்த்தால், வேம்பாகக் கசக்கும் மருந்தைச் சாப்பிட்டவன் மாதிரித் தோன்றியது.

"எனக்கு வியாதி வந்தபொழுதும் ஒரு 'மிக்சர்' கொடுத்தார்கள். அது கசந்தது. உட்கொள்ளவே எனக்குப் பிடிக்கவில்லை" என்ருன் டிமா.

"எனக்கும் பிடிக்கவில்லை."

"பரவாயில்லை. குடித்துவிடு. சீக்கிரம் குணமாகும்."

"அதனுல்தான் குடிக்கிறேன்."

"கசப்பாயிருப்பதால் கவலைப்படாதே. குடித்தவுடன் சீனியை அள்ளி வாயில்போட்டுக்கொள்; ருசி மாறிவிடும்" என்ருன் லோன்யா.

"ரைட்! அம்மாதிரி செய்துபார்க்கிறேன்."

"பாடங்களைப்பற்றிக் கவலைப்படாதே. நீ சுகமானவுடன், நடந்த பாடங்களில் தேர்ச்சியடைவதற்கு நாங்கள் உதவுகிருேம்!"

"பார்க்கலாம்!"

அச்சமயத்தில், சிஷ்கினுடைய பாதரட்சை போர்வைக்கு வெளியே வந்திருந்தது. யாராவது அதை கவனித்திருக்கவேண்டுமென்று நான் நினைத்தேன். ஆனல் அவர்கள் அனைவரும் அவனேடு பேசுவதில் ஈடுபட்டிருந்தார்கள். யாரும் கவனிக்காத சமயத்தில் அதைப் போர்வையால் மூடினேன்.

"பேசியது போதுமென்று நினைக்கிறேன். அவன் தளர்ச்சியுற்றிருக்கிறான், சோர்ந்துபோகச் செய்யாதீர்கள்" என்றேன்.

பையன்கள் விடைபெற்றுச்செல்ல எழுந்தார்கள்.

"சிஷ்கின், போய்வருகிறோம். நீ சீக்கிரம் சுகமடைய வேண்டும். நாளைக்கு வந்து உன்னைச் சந்திக்கிறோம்."

அவர்கள் போனவுடன் சிஷ்கின் படுக்கையைவிட்டு வெளியே பாய்ந்தான். ஆனந்தம் தாங்கமுடியாமல் அறையில் துள்ளினான்.

"அருமையாக இருந்ததல்லவா? எவரும் ஊகிக்க முடியவில்லை" என்று சத்தம்போட்டான்.

"இதில் என்ன ஆனந்தம்? விளையாடவேண்டாம், நாமிருவரும் முக்கியமான விஷயத்தைப்பற்றிப் பேச வேண்டும்."

"எதைப்பற்றி?"

"நீ பள்ளிக்கூடத்திற்கு வருவதைப்பற்றி."

"வரவேண்டுமென்று எனக்குத் தெரியும். ஆனால் இனி எப்படிவருவது? அது முடியாதகாரியமென்பதை நீயே அறிவாய்."

"அதெல்லால் ஒன்றுமில்லை. உன்னிடம் கடைசியாகப் பேசிவிடுவதென்று இன்று தீர்மானித்தேன். நீ நாளைப் பள்ளிக்கூடத்திற்கு வராவிட்டால் எல்லாவற்றையும் ஆல்கா நிகோலிவ்னாவிடம் கூறிவிடுவேன்."

"ஏன்?" என்று கேட்டான் ஆச்சரியமடைந்த சிஷ்கின்.

"ஏனா? நீ பள்ளிக்கூடத்திற்கு வரவேண்டும்; அலைந்து திரிந்து நேரத்தை வீண் செய்யக்கூடாது. எப்படியும் நீ மல்லன் ஆகப்போவதில்லை."

“ஏன்? நான் கைகளையூன்றி நடக்கக் கற்றுக்கொண்டு விட்டேன்.”

அவன் சுவரண்டைசென்று தன் கைகளை ஊன்றி, தலை கீழாக நின்றான்.

அந்த சமயத்தில் கதவு திறந்தது, லோன்யா பிரவேசித்தான்.

“என் கையுறைகளை மறந்துவிட்டேன்” என்று கூறிய அவன், எதிரே நடப்பதைப் பார்த்துவிட்டு, “ஹா! இது என்ன? நீ என்ன செய்கிறாய்?” என்று பிரமிப்புடன் கேட்டான்.

சிஷ்கின் எழுந்துநின்றான்; அவன் முகத்தில் அசடு வழிந்தது.

“அப்படியானால் உண்மையிலேயே உனக்கு வியாதி இல்லை.”

“நிஜமாக, நோய்தான்” என்றான் சிஷ்கின், முகமெல்லாம் நெருப்புமாதிரி சிவந்தவனாக.

அவன் புலம்பத் தொடங்கினான், நொண்டிக்கொண்டே சென்று படுத்தான்.

“இந்தப் பாசாங்கெல்லாம் வேண்டாம். கைகால்கள் வலிக்கிறதென்றாய்; கைகளை ஊன்றி நின்றதை என் கண்களால் பார்த்தேன்.”

“நிஜமாக வலிக்கின்றன.”

பொய் சொல்லாதே! இவ்வளவு சீக்கிரமாக எப்படி உடைகளை அணிந்துகொண்டாய்? உடைகளை அணிந்தபடியே படுத்திருந்திருக்கவேண்டும்.”

“சரி, நீ ஒருவரிடமும் சொல்லமாட்டேனென்று சத்தியம் செய்தால் உனக்கு ஒரு ரகசியம் சொல்வேன்.”

“நான் எதற்காகச் சத்தியம் செய்வது?”

"இல்லாவிட்டால் சொல்லமாட்டேன்."

அந்தச் சந்தர்ப்பத்தில், வழிநடையில் கால்மிதி சப்தம் கேட்டது. கதவு திறந்தது. வான்யா தலையை உள்ளே நீட்டிக்கொண்டே, "லோன்யா, வரவில்லையா? உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறோம்" என்றான்.

"வான்யா, இங்கே வா. சிஷ்கினுக்கு ஒரு நோயுமில்லை."

"அப்படியா?" என்று கேட்டுக்கொண்டே வான்யா வந்தான்.

"யாருக்கு நோய் இல்லை?" என்று வழிநடையில் யுரா கேட்டது காதில்விழுந்தது. அவனும் மற்றவர்களும்கூட அறைக்குள் வந்தனர்.

"சிஷ்கினுக்குத்தான் சொல்கிறேன்" என்றான் லோன்யா.

"அது எப்படி?"

"நான் உள்ளே வந்தேன்; அவன் தலைகீழாக நின்று கொண்டிருந்தான்."

"ஏன் எங்களை ஏமாற்றுகிறாய்?" என்று மற்றவர்கள் கேட்டனர்.

"ஏமாற்றும் எண்ணமே கிடையாது, கொஞ்சம் வேடிக்கைசெய்தேன்" என்று சிஷ்கின் நொண்டிச் சமாதானம் கூறினான்.

"இதுதான் விளையாட்டா?"

சிஷ்கின் ஒரு குலுக்குக் குலுக்கிக்கொண்டான்.

"நல்ல பையன்! நாங்கள் உன்னைப்பற்றி கவலைப்படு கிறோம், உன்னைப் பார்க்க வருகிறோம்; நீ எங்களிடம் விளை யாடுகிறாய். வியாதி வந்திருப்பதாகப் பாசாங்கு செய்கிறாய்! நல்ல வேடிக்கை இது!" என்றான் வான்யா.

"இனிமேல் இதுமாதிரி செய்யமாட்டேன். நிஜமாக," என்று உளறினான் சிஷ்கின்.

“நீ ஏன் பள்ளிக்கூடம் வருவதில்லை? பள்ளிக்கூடம் வராமலிருப்பதற்காகத்தானே இந்தப் பாசாங்கு செய்து வருகிறாய்?” என்று யுரா கேட்டான்.

“எல்லாவற்றையும் சொல்லிவிடுகிறேன். ஆனால் ஆத்திரப்படக் கூடாது. உங்களை ஏமாற்ற விரும்பவில்லை. விஷயம் என்னவென்றால் நான் சர்க்கஸ் வித்தைக்காரனாக விரும்பினேன்.”

“சர்க்கஸ் வித்தைக்காரனா?”

“ஆம். சர்க்கஸில் மல்லன் வேலைபெற விரும்பினேன்.”

“உனக்குப் புத்தித் தடுமாற்றமா?”

“இல்லை.”

“உனக்குச் சர்க்கஸில் வேலை கிடைக்குமென்று எப்படி நினைக்கிறாய்?” என்று வான்யா கேட்டான்.

“சர்க்கஸ் வித்தைக்காரர்கள் எங்கிருந்து வருகிறார்கள்?”

“அது ஒருபுறமிருக்கட்டும். நீ ஏன் பள்ளிக்கூடம் வரவில்லை?”

“இனிமேல் படிக்க விருப்பமில்லை. படித்திருப்பது போதும்.”

“எதற்குப் போதும்?”

“சர்க்கஸ் வித்தைக்காரனாவதற்குப் போதாதா?”

“சர்க்கஸ் வித்தைக்காரர்களுக்குக் கல்வியே தேவையில்லை என்பது உன் நினைப்பா?”

“ஏன்? நான் கொஞ்சம் கல்வி பெற்றிருக்கவில்லையா?”

“கல்வி! பதங்களுக்குச் சரியாக எழுத்துக் கூட்டத் தெரியாது, படித்துவிட்டாயாம்!” என்று யுரா கேலி செய்தான். “உயர்தரப் பள்ளிக்கூடப் படிப்பை முதலில் முடிக்க வேண்டும்; பிறகுதான் சர்க்கஸ் பள்ளிக்கூடம் போக

முடியும். சர்க்கஸ்காரர்களும் இதரர்களைப் போலக் கற்றவர்களாக இருக்கவேண்டும். ஆல்கா நிகோலிவ்னுவின் யோசனையைக் கேள்'' என்று யுரா மேலும் விளக்கினன்.

''டீச்சர் என்ன சொல்வாளென்று எனக்குத் தெரியாதா?'' என்றுன் சிஷ்கின்.

''என்னைக் கேட்டால், அவன் மூளையில் ஏதோ பைத்தியக்காரத்தனமான யோசனை உதித்திருக்கிறது! அதற்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டு நாளைக்குப் பள்ளிக்கூடம் வரட்டும்'' என்றுன் ஐகார்.

''வராவிட்டால் நாம் டீச்சரிடம் சொல்லிவிடுவோம்.''

''அப்படியானுல் நீங்கள் அனைவரும் கோள் சொல்பவர்கள், வத்தி வைப்பவர்கள்!''

''இல்லை இல்லை! உனக்கு எச்சரிக்கை கொடுத்துவிட்டோம்'' என்றுன் யுரா.

''நாளை மட்டும் பள்ளிக்கூடம் வராமலிருந்து பார். அப்போது தெரியும். சோம்பேறியாகத் திரிந்ததெல்லாம் போதும். நீ உதவாக்கரையாகவும் உருப்படாதவனுகவும் வளர விரும்புகிருயா?'' என்று யுரா கடிந்துகொண்டான்.

அந்த நேரத்தில் வழி நடையில் கால்நடை ஒலி மீண்டும் கேட்டது. யாரோ கதவைத் தட்டினுர்; கதவைத் திறப்பதற்குப் பதிலாக, சிஷ்கின் போர்வைக்குள் புகுந்துகொண்டான். நான் கதவைத் திறந்தேன்; அங்கு ஆல்கா நிகோலிவ்னு நின்றுகொண்டிருந்தாள்.

''குழு முழுவதும் இங்கு இருக்கிறதா? எல்லோரும் வந்து நோயாளியைப் பார்க்க முடிவுசெய்தீர்களா?'' என்று கேட்டுக்கொண்டே டீச்சர் உள்ளே வந்தாள்.

பையன்கள் 'கப்சிப்'பென்றிருந்தார்கள். என்ன சொல்வதென்று ஒருவனுக்கும் தெரியவில்லை. சிஷ்கின்

பிதுங்கிய கண்களுடன் பேந்தப் பேந்த விழித்தான்; போர்வையை முகவாய்க் கட்டைவரை இழுத்துக்கொண்டான்; தலையைக்கூட மூடிக்கொள்வான் போலிருந்தது.

"சிஷ்கின்! ரொம்பக் கஷ்டப்படுகிருய் போலிருக்கிறது. என்ன உபத்திரவம்?"

"ஒன்றுமில்லை. அவனுக்கு ஒரு நோயுமில்லை" என்ருன் யுரா.

"அப்படியா?"

"ஆம். சுகமாயிருக்கிருன்."

குட்டு வெளிப்பட்டதென்பதைச் சிஷ்கின் பார்த்தான். போர்வையை நீக்கிவிட்டு எழுந்தான். படுக்கையின் முனையில், தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். ஆல்கா நிகோலிவ்ன ஒவ்வொருவராக எங்களை உற்று நோக்கினுள். என்னிடம் வந்தவுடன் "வித்யா, சிஷ்கினுக்கு காய்ச்சலென்று என்னிடம் சொல்லவில்லையா?" என்ருள்.

என்னை வெட்கம் பிடுங்கித் தின்றது. பூமி பிளந்து என்னை விழுங்கக்கூடாதாவென்று தோன்றியது.

"ஏன் பதில் சொல்லாமல் நிற்கிருய்? நீ பொய் சொன்னயல்லவா?"

"நான் சொல்லவில்லை. அவன்தான். உங்களிடம் அப்படிச் சொல்லவேண்டுமென்று அவன் சொன்னுன்."

"என்னை ஏமாற்றும்படி சிஷ்கின் உன்னிடம் சொன்னுனு?"

நான் தலையை ஆட்டினேன்.

"அவன் சொன்னபடி நீ செய்தாயா?"

நான் மீண்டும் தலையை ஆட்டினேன்.

"நீ செய்தது சரியா?"

"அவன்தான் செய்யச் சொன்னான்."

"என்னிடம் பொய்சொல்லி அவனுக்கு நலம் புரிந்ததாக நினைக்கிறாயா?"

"இல்லை."

"பிறகு ஏன் அப்படிச் செய்தாய்?"

"ஒரு நண்பனை காட்டிக் கொடுக்கக்கூடாதென்று."

"காட்டிக் கொடுப்பதா? யாரிடம்? விரோதியிடமா? அப்படியானால் நான் உங்களுக்கு விரோதியா?"

எனக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை; தரையை வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்றேன்.

"என் மாணவர்கள் என்னைத் தங்களுடைய சத்துருவாகக் கருதுகிறார்களென்று எனக்குத் தெரியாது" என்றாள் ஆல்கா நிகோலிவ்னா.

"நாங்கள் அப்படிக் கருதவில்லை. ஆல்கா நிகோலிவ்னா."

"பின்னர், ஒருவரும் என்னிடம் ஏன் சொல்லவில்லை?"

"ஒருவருக்கும் தெரியாது. இன்று அவனைப் பார்க்க வந்தபொழுதுதான் நாங்களும் தெரிந்துகொண்டோம்."

"சரி. அதைப்பற்றி பிறகு பேசிக்கொள்வோம். சிஷ்கின், நீ சொல்லு. ஏன் பள்ளிக்கூடத்திற்கு வராமலிருந்தாய்?"

"பயமாகவிருந்தது" என்று அவன் முணு முணுத்தான்.

"என்ன பயம்?"

"அம்மாவிடம் கடிதம் வாங்கிவரச் சொல்வீர்களென்று பயந்தேன்."

"என்ன கடிதம்?"

"டிக்டேஷன் இருந்த நாளில் பள்ளிக்கு வராமலிருந்ததற்காக."

"டிக்டேஷன் இருந்த நாளில் நீ ஏன் வரவில்லை?"

"பயமாயிருந்தது."

"எதைப்பற்றிப் பயந்தாய்?"

"டிக்டேஷனில் 2 மார்க் வாங்குவேனென்று."

"ஆக, வேண்டுமென்று டிக்டேஷன் நாளில்வராமலிருந்தாய்; அம்மாவிடம் கடிதம் கிடைக்காத காரணத்தால் நீ பள்ளிக்கூடத்திற்கு வரவேயில்லை."

"ஆமாம்."

"பள்ளிக்கூடத்துக்கு வராவிட்டால் என்ன செய்வதென்று நினைத்தாய்?"

"தெரியாது."

"ஏதாவது திட்டம் இருந்திருக்கவேண்டுமே!"

"சர்க்கஸ் வித்தைக்காரனுகத் திட்டமிட்டான்" என்ருன் யுரா.

"அப்படியா? உயர்தரப் பள்ளிப்படிப்பை முடிக்காமல் நீ சர்க்கஸ் பள்ளிக்கூடத்தில் பிரவேசிக்க முடியாது. அப்புறம், சர்க்கஸ் பள்ளியில் ஐந்தாண்டுகள் பயிலவேண்டும். ஒரு இரவில் சர்க்கஸ் வித்தைகாரனுகலாமென்று நினைத்தாயா?"

"முடியாது போலிருக்கிறது" என்ருன் சிஷ்கின்.

"பார்த்தாயா? சரியாக யோசிக்காமல், பள்ளிக்கு வருவதை நிறுத்தினுய், இது மடத்தனமல்லவா?"

சிஷ்கின் பதில்பேசவில்லை.

"இப்பொழுது என்ன செய்யப்போகிருய்?"

"எனக்குத் தெரியாது."

"யோசனை செய்துபார்."

சிஷ்கின் சிறிதுநேரம் மௌனமாயிருந்தான். பிறகு புருவத்தைச் சுருக்கிக்கொண்டே "நான் பள்ளிக்குத் திரும்பிவரப்பிரியப்படுகிறேன்" என்ருன்.

"அதுதான் சிறந்த வழி. நானும் அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை, புதிய வழியில் சென்று பாடங்களை உன்னிப்பாகப் படிப்பேனென்று வாக்களிக்க வேண்டும்."

"நான் உறுதியாகக் கூறுகிறேன்," என்றான் சிஷ்கின்.

"சரி. நாளைக் காலையில் பள்ளிக்கூடத்துக்கு வா. நீ தொடர்ந்து படிப்பதை அனுமதிக்கும்படி டைரக்டரிடம் கேட்கிறேன்."

"சரி" என்றான் சிஷ்கின்.

வீட்டுக்குப்போய்ப் பாடங்களை எழுதிப் படிக்குமாறு ஆல்கா நிகோலிவ்னா எங்களிடம் கூறினாள்.

பிறகு, சிஷ்கின் அவளிடம் கூறினான் :

"ஆல்கா நிகோலிவ்னா, ஆல்கா நிகோலிவ்னா, தயவு செய்து என் தாயாரிடம் சொல்லாமலிருங்கள்."

"ஏன் ?"

"சிரமப்பட்டுக் கவனமாகப் படிக்கிறேன், இது உறுதி. அம்மாவிடம் மட்டும் சொல்லாமலிருங்கள்."

"அம்மாவைத் தொடர்ந்து ஏமாற்ற விரும்புகிறாயா? என்னையும் அதற்கு உடந்தையாக இருக்கச் சொல்கிறாயா?"

"இனிமேல் ஒரு பொழுதும் அம்மாவை ஏமாற்றமாட்டேன். அவள் மனதை அலட்டிக்கொள்ளக் கூடாதென்பதற்காகத்தான் சொல்கிறேன்."

"ஆனால் நீயும் நானும் சேர்ந்து அவளை ஏமாற்றுகிறோமென்று அம்மா பார்த்தால் அதிகமாக அலட்டிக்கொள்வாளல்லவா ?"

"ஆமாம்."

"அதனால்தான் அம்மாவிடம் சொல்லிவிடுவோம். அக்கறையோடு படிப்பதாக நீ உறுதி கூறினால், உன்னிடம்

கடுமையாக நடந்துகொள்ளவேண்டாமென்று உன் தாயாரிடம் சொல்கிறேன்.''

''உறுதியாகச் சொல்கிறேன்.''

''சரி. உன் புத்தகங்களைக்கொண்டுவா. ஒரு பாடத்தைப் படிப்போம்'' என்ருள் ஆல்கா நிகோலிவ்ன.

மற்ற பையன்களோடு நானும் வீட்டுக்குப் போய்விட்டேன். ஆகவே அதன்பின் என்ன நடந்ததென்று எனக்குத் தெரியாது.

# 16. டைரக்டருடன் பேட்டி

அடுத்தநாள் சிஷ்கின் பள்ளிக்கு வந்தான். முதலில் அவனுக்கு ஒரு மாதிரியாயிருந்தது. பையன்கள் தன்னைக் குத்திக்காட்டி பரிகசிப்பார்களென்று எதிர்பார்த்தவன் மாதிரி அவன் நடந்துகொண்டான். அதனால் ஒருவரும் அம்மாதிரி செய்யாததைக்கண்டு அவன் அமைதியாகி எனக்கருகில் அமர்ந்தான். கடைசியில் அந்தக் காலி ஸ்தானத்துக்கு ஆள் வந்துவிட்டது! பெரிய சுமை இறங்கிய மாதிரி எனக்கு உணர்ச்சி ஏற்பட்டது. எல்லாம் நல்லபடியாக முடிந்தது.

ஆல்கா நிகோலிவ்னு சிஷ்கினிடம் ஒன்றும் சொல்லவில்லை. வழக்கம்போல் பாடங்கள் நடந்தன. இடைவேளையில் வாலட்யா வந்தார். சிஷ்கின் செய்ததைப் பையன்கள் அவரிடம் சொன்னுர்கள். அவர் சிஷ்கினிடம் ஒரு பிரசங்கம் அடிப்பாரென்று நினைத்தேன்.

"உன் சினேகிதன் தவறு செய்வதை அறிந்திருந்தும் நீ அவனுக்கு உதவவில்லை. அவனிடம் பேசிப் பார்த்திருக்க வேண்டும். அவன் கேட்காவிட்டால் உன் டீச்சரிடம் அல்லது என்னிடம் அல்லது இதர பையன்களிடம் சொல்லிருக்க வேண்டும். ஆனுல் நீ பேசாமலிருந்தாய்."

"நான் அவனுடன் பேசவில்லையா? பல தடவைகள் பேசிப் பார்த்தேன். என்ன செய்வது? பிடிவாதமாயிருந்தான்."

"சரி என்ன காரணம்? படிப்பில் பின் தங்கியிருந்ததால் தானே இந்த நிலைக்குவந்தான். படிப்பில் உதவினுயா? இவன் குறைந்த மார்க் வாங்குவது உனக்குத் தெரியாது?"

"தெரியும். எல்லாம் இந்த ருஷியப் பாடத்தில் அவனுக்குள்ள பலவீனம்தான். எப்பொழுதுமே அவன் ருஷியப்

பாடங்களை நோட்புத்தகத்தைப் பார்த்து எழுதிக்கொள் வான்."

"பார்த்தாயா? நீ உண்மையான நண்பனுயிருந்தால், காப்பி அடிப்பதை அனுமதித்திருக்கமாட்டாய். உண்மை யான தோழன் சில சமயம் கண்டிப்பாயிருக்கவேண்டும்; தன் தோழனுடயை குறைகளைப்பற்றி பராமுகமாயிருக்கக் கூடாது. உன் நண்பனின் நடத்தையில் அக்கறை காட்டாத நீ உயிர்த்தோழனு? இது உண்மையான நட்பு அல்ல; உத வாக்கரை நட்பு."

நான் சிஷ்கினுக்கு நல்ல நன்பனுக நடக்கவில்லை யென்று பையன்கள் சொன்னுர்கள். "பள்ளிக்கூடம் முடிந்த வுடன் இதை விவாதித்து முடிவுகட்டுவோம்" என்ருர் வாலட்யா. அதற்கு நாங்கள் இணங்கினேம்.

ஆனுல் பாடங்கள் முடிந்ததும் ஆல்கா நிகோலிவ்னு என்னையும் சிஷ்கினையும் கூப்பிட்டு டைரக்டர் எங்களைப் பார்க்க விரும்புகிருரென்று சொன்னுள்.

"எதற்தாக?" என்று நான் கேட்டேன். எனக்கு ஒரே பீதி.

"அவரே சொல்வார், உடனே போங்கள். பயப்படா தீர்கள். அவர் உங்களை விழுங்கிவிடமாட்டார்!"

நாங்கள் டைரக்டரின் அலுவல் அறைக்குச்சென்ருேம். கதவு திறந்திருந்தது; வாசலில் நின்று வணக்கம் தெரிவித் தோம்.

ஐகார் அலெக்ஸாண்ட்ரோவிட்ச் எழுதிக்கொண்டிருந் தார்.

எங்களை வாழ்த்திவிட்டு, மேஜைக்கு அருகிலுள்ள 'சோபா'வைக் காட்டி, "உள்ளேவந்து உட்காருங்கள்" என்ருர். அவர் தொடர்ந்து எழுதினுர்.

சோபா, டைரக்டர் மேஜைக்கருகில் இருந்தது. ஆகவே அதில் உட்காருவதற்கு அச்சப்பட்டோம். இருந்த இடத்

திலேயே நின்றோம். டைரக்டர் எழுதிமுடித்து மூக்குக் கண்ணாடியை எடுத்தார்.

"உட்காருங்கள்! உட்காருங்கள்!"

நாங்கள் சோபாவுக்குச் சென்று அதன் ஓரத்தில் உட் கார்ந்துகொண்டோம். சோபாவைப் போர்த்தியிருந்த தோல் பிரகாசமாகவும் வழவழப்பாகவும் இருந்தது. பேசும் பொழுதெல்லாம் அது வழுக்கிவிட்டுக்கொண்டேயிருந்தது. ஆகவே அந்த நீண்ட பேச்சுக்குப் பிறகு, அவ்வளவு நேர மும் ஒற்றைக்காலில் நின்றிருந்தால் எப்படியிருக்குமோ அதைவிடக் களைப்பாயிருந்தது.

"சிஷ்கின்! நீ ஏன் பள்ளிக்கூடத்திற்கு வராமலிருந் தாய்?" என்று டைரக்டர் பேச்சை ஆரம்பித்தார்.

"எனக்குத் தெரியாது" என்று சிஷ்கின் முணு முணுத் தான்.

"யாருக்குத் தெரியும்?"

"......எனக்குத் தெரியாது."

"எனக்குத் தெரியுமென்று நினைக்கிறாயா?"

அவர் தமாஷ் செய்கிறாராவென்று சிஷ்கின் தன் கண் ணோரத்தால் பார்த்தான். டைரக்டர் முகத்தில் குறும்புக் குறியே தென்படவில்லை; ஆகவே "எனக்குத் தெரியாது" என்று மீண்டும் சொன்னான்.

"என் கேள்விகளுக்கெல்லாம் இதே பதில்கொடுப்பதா யிருந்தால், நாம் பேசுவதில் பயனில்லை. நாம் பேசுவதா யிருந்தால், அதைப்பற்றி அக்கறைகாட்டவேண்டும். நீ ஏன் பள்ளிக்கூடத்திற்கு வரவில்லையென்று நான் விளையாட்டுக் காகவோ பொழுதுபோக்குக்காகவோ கேட்கவில்லை."

"பயமாயிருந்தது" என்று சிஷ்கின் குழறினான்.

"என்ன பயம்?"

"எனக்கு டிக்டேஷனைக் கண்டால் பயம்; அதனால் அன்றைக்குப் பள்ளிக்கூடத்திற்கு வரவில்லை. அதற்காக அம்மாவிடம் கடிதம் வாங்கிவரும்படி ஆல்கா நிகோலிவ்னா கூறுவாள்; அதனால் அதற்குப் பிறகு வரவேயில்லை."

"டிக்டேஷனைக் கண்டு உனக்கு ஏன் பயம்? அது அவ்வளவு பயங்கரமானதா?"

"2 மார்க் வாங்குவேனென்று பயம்."

"ருஷிய மொழியில் பின் தங்கிவிட்டாயா?"

"ஆம்."

"ஏன்?"

"கஷ்டமாயிருக்கிறது."

"இதர பாடங்கள் கடினமாயில்லையா?"

"அவை சுலபமாயிருக்கின்றன."

"ருஷிய மொழி மட்டும் கடினமாயிருப்பதேன்?"

"எனக்குப் பதங்களுக்கு எழுத்துக்கூட்டத் தெரியாது."

"கொஞ்சம் பாடுபட்டால், எழுத்துக் கூட்டுவதும் இலக்கணம் கற்பதும் கஷ்டமல்ல. நீ கவனம் செலுத்துவதில்லையா?"

"கவனமாகப் படிக்கவில்லை."

"ஏன்?"

"அது ஏறமாட்டேனென்கிறது. சரித்திரப் பாடமோ பூகோளப் பாடமோ ஒரு தடவை படித்தால் புரிந்துவிடுகிறது. ஆனால் ஏதாவது எழுத உட்கார்ந்தால் பல பல தவறுகளைச் செய்கிறேன்."

"அப்படியானால் ருஷிய மொழிக்கு அதிக நேரத்தை ஒதுக்கவேண்டும். சுலபமாக வருவதை மட்டும் செய்வது நல்லதல்ல. கடினமான காரியங்களையும் செய்வதற்கு நாம் அறியவேண்டும். கஷ்டங்கள் மீது வெற்றிக்கொள்ளும் மார்க்-

கம் அது. நீ எதை கற்றுக்கொள்ள விரும்பினாலும், அதைப் பற்றி விடாமுயற்சி தேவை.'' என்று கூறிவிட்டு டைரக்டர் என்னை நோக்கினார்.

''மாலியேவ்! நீ ஒரு சமயம் கணக்கில் பின்தங்கியிருந்தாயல்லவா?''

''ஆம்.''

''இப்பொழுது திருந்திவிட்டாயல்லவா?''

''ஆம்.''

''அது எப்படிச் சாத்தியமாயிற்று?''

''கணக்கில் குறைவான மார்க் வாங்கியதைப்பற்றி எனக்கு வெறுப்பாயிருந்தது. சிரமப்பட்டுப் படித்தால் நான் முன்னுக்கு வரமுடியுமென்று டீச்சர் கூறினாள். நானும் முயன்றேன்.''

''வெற்றி அடைந்தாயா?''

''அடைந்தேன்.''

''அது சுலபமாகவிருந்ததா?''

''இல்லை. முதலில் மிகவும் கடினமாகவிருந்தது. இப்பொழுது, சுலபமாகிவிட்டது.''

''இதைக் கேட்டாயா, சிஷ்கின்? மாலியேவ் உதாரணத்தை நீ பின்பற்றவேண்டும். முதலில் கடினமாக இருக்கும்; ஆனால் முதல் தடையைத் தாண்டிவிட்டால் சுலபமாகிவிடும். ஆகவே, கஷ்டப்பட்டு வேலை செய்வதென்று நீ தீர்மானிக்க வேண்டுமென்பதே என் யோசனை. அப்படிச் செய்தால், வெற்றியடைவாய்.''

''சரி. நான் முயல்கிறேன்.''

''முயற்சிமட்டும் போதாது. எதிரேயுள்ள சிரமத்தை முன்னேறித் தாக்கவேண்டும். உடனே வேலையில் இறங்குவாயா?''

"இயன்றதனைத்தும் செய்வேன்" என்ருன் சிஷ்கின்.

"அதுவும் திட்டவட்டமாகயில்லை. உனக்கு என்ன பயம்? உன் வகுப்பு மாணவர்கள் உதவமாட்டார்களா? மாலியேவ், நீ சிஷ்கின் நண்பனல்லவா?"

"ஆம்." என்றேன் நான்.

"அப்படியானுல் அவனுக்கு ருஷிய பாடத்தில் உதவ வேண்டும். பின்தங்கியுள்ள அவன் பிறருக்கு இணையாக முன்னுக்கு வரவேண்டும்."

"நான் உதவுகிறேன். எப்படி உதவுவதென்று நான் அறிவேன். நானே ஒரு சமயம் பின்தங்கியிருந்தவன்; அந்தக் கூனலை எப்படிப் போக்குவதென்று எனக்குத் தெரியும்."

"நல்லது? முயல்வாயா?" என்று சொல்லி, ஐகார் அலெக்ஸாண்ட்ரோவிச் முறுவலித்தார்.

"முயல்வதில்லை. உடனே அவனுக்கு சொல்லிக் கொடுக்கத் தொடங்குவேன்."

"பேஷ்! அதுதான் எனக்குப் பிடித்தமானது. உனக்குப் பள்ளிக்கூடத்தில் ஏதாவது பொது வேலை உண்டா?" என்ருர் டைரக்டர்.

"இல்லை," என்றேன் நான்.

"சரி. ஆரம்பத்துக்கு இது உன் வேலையாக இருக்கட்டும். நான் ஆல்கா நிகோலிவ்னுவிடம் பேசினேன். நீ நிச்சயமாகச் சிஷ்கினுக்கு உதவ முடியுமென்று அவள் கூறுகிருள். தனக்குத்தானே உதவிக்கொள்ளக் கூடியவன் இன்னெருவருக்கும் உதவமுடியும். ஆனுல் உன் வேலையைக் கவனமாகச் செய்யவேண்டும்."

"கவனமாகவும் கருத்தோடும் செய்வேன்" என்றேன் நான்.

"அவன் தன் கடமைகளைக் காலாகாலத்தில் செய்கிறனு வென்று பார். எதையும் செய்யாமல் விடவில்லை என்பதை உறுதி செய்துகொள். அவனுக்காக எதையும் செய்யாதே. அது அவனுக்கு உதவி புரிவதாகாது அவன் சுயேச்சை யாக எழுதிப் படித்துக் கற்றுக்கொண்டால், தன்னம்பிக்கை ஏற்படும்; அதன்பின், உதவியும் கோரமாட்டான். புரி கிறதா?"

"புரிகிறது, ஐகார் அலெக்ஸாண்ட்ரோவிட்ச்."

"சிஷ்கின்! நீ ஓர் உண்மையை கிரகித்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் தன் தேலையை நேர்மையாக மனச்சாட்சிப்படி செய்யவேண்டும்."

"ஆனல்...... ஆனல் நான் பள்ளிப் பையன்தானே?" என்று சிஷ்கின் உளறினன்.

"படிப்பது பள்ளிப்பையனின் பணி. நன்ருகப் படிக்க விரும்பினல், படிப்பில் கண்ணும் கருத்துமாக ஈடுபட வேண் டும். வயது வந்தவர்கள் பாக்டரிகளிலும் கூட்டுப்பண்ணை களிலும் பாடுபடுகிருர்கள். அவர்கள் மின்சார நிலையங்களைக் கட்டுகிருர்கள்; நதிகளையும் கடல்களையும் கால்வாய்களால் இணைக்கிருர்கள்; பாலைவனங்களுக்குப் பாசன வசதி செய் கிருர்கள்; காடுகளைப் பயிர் செய்கிருர்கள். வயது வந்த வுடன் நாட்டுக்கு பயனுள்ளவராயிருப்பதெப்படி என்பதைக் கற்றுக்கொள்ள, சிறுவர் சிறுமிகள் பள்ளிக்கூடம் போகிருர் கள். நீ தேசத்துக்குப் பயன்பட விரும்புகிருயா?"

"நிச்சயம் விரும்புகிறேன்."

"இதுதான் விஷயம். ஆனல் விருப்பம் மட்டும் போதாது. விடாமுயற்சியும் வைராக்கியமும் தேவை. விடா முயற்சியில்லாமல் எதையும் சாதிக்க முடியாது."

"இனி உறுதியாகப் பாடுபடுவேன்."

"நல்லது. விடாமுயற்சியோடு நீ உண்மையாகவும் நடந்துகொள்ள வேண்டும். நீ நேர்மையாக நடக்கவில்லை

யென்று நினைக்கிறேன். நேர்மையாக நடந்திருந்தால், உன் தாயார், உன் ஆசிரியர், உன் வகுப்பு மாணவர்கள் அனை வரையும் ஏமாற்றியிருக்கமாட்டாய்.''

"இனி நேர்மையாக நடந்துகொள்கிறேன்.''

"அது சரி. அது மட்டுமல்ல. உன் வகுப்புத் தோழர்களை மதித்து நடக்கவேண்டும்; அவர்களை உதாசீனம் செய்யக் கூடாது.''

"வகுப்புத் தோழர்களை புறக்கணித்தேனா? உதாசீனம் செய்தேனா?'' என்று சிஷ்கின் தடுத்துப்பேசினான்.

"ஆம். அவர்களைப் புறக்கணித்தாய்; அவர்களில்லாமல் முன்னேறலாமென்று நினைத்தாய்.''

"அவர்களில்லாமல் நான் தனிமையில் பட்ட துன்பம் எனக்கல்லவா தெரியும்?'' என்று சிஷ்கின் கத்தினான். அவன் விம்மி விம்மி அழுவான் போலிருந்தது.

"நல்லது! அது ஒரு நல்ல அறிகுறி. ஆனால் அவர்களை உதாசீனம் செய்தால், அவர்களுடைய நட்பைப் பெறமுடியா தென்பதை நீ தெரிந்திருந்தால் நன்றாயிருக்கும்.''

"இனி அவர்களைப் புறக்கணிக்கமாட்டேன்.''

"பள்ளிக்கூடம் வராத நாட்களில் என்ன செய்தாய்?'' என்று டைரக்டர் கேட்டார்.

லாப்ஸிக்குக்கு எண்ணுவதற்கு கற்றுக்கொடுத்த விவ ரத்தை நாங்கள் சொன்னோம். அவர் அக்கறையோடு கேட்டுக்கொண்டிருந்தார்; முழு விவரத்தையும் சொல்ல வைத்தார்.

"மனிதன் மாதிரி எண்ணுவதற்கு நாய்க்குப் போதிக்க முடியுமென்று நீங்கள் நிஜமாக நினைக்கிறீர்களா?'' என்று நாங்கள் முடித்தவுடன் அவர் கேட்டார்.

"சர்க்கஸ் நாய் செய்ததே?''

டைரக்டர் சிரித்தார்.

"அதற்கு எண்ணத் தெரியாது. சைகைகளைக்காட்டி வேண்டிய மட்டும் குரைக்கச் செய்வதற்கு அந்த நாயைப்

பழக்கியிருக்கிறுர்கள். எத்தனை தடவைகள் தேவையோ அத்தனை தடவைகள் குரைத்தவுடன், அது நிறுத்தவேண்டு மென்பதற்கு சர்க்கஸ்காரன் சைகைகாட்டுகிறுன். ஜனங்கள் சைகையைப் பார்ப்பதில்லை; நாய்க்கு எண்ணத் தெரியு மென்று நினைக்கிறுர்கள்.''

''அவன் என்ன சைகை காட்டுகிறுன்?'' என்று சிஷ்கின் கேட்டான்.

''அதுவா? கொஞ்சம் தலையை அசைப்பான், அல்லது கையை அசைப்பான், அல்லது விரல்களை நொடிப்பதுபோல் வளைப்பான்.''

''ஆனுல் எங்கள் லாப்ஸிக் சைகையில்லாமலேயே பிச கின்றி எண்ணுகிறுனே?'' என்று சிஷ்கின் கூறினுன்.

''நாய் மிகவும் சிரத்தையாக கவனிக்கக்கூடிய பிராணி. லாப்ஸிக் பிசகில்லாமல் குரைக்கும்பொழுது, நீ உனக்கே தெரியாமல் தலையை ஆட்டலாம் அல்லது வேறு வகையில் உன் உடலை நெளிக்கலாம். அந்த அசைவை அது கவனித் துக்கொள்கிறது; அதிலிருந்து உன் விருப்பத்தை ஊகிக்க முயல்கிறது. ஆனுல் உன் அசைவுகளைக் கிரகிப்பதற்குக் கஷ்டமாக இருந்தால், அது அடிக்கடி தவறுசெய்கிறது. அது பிசகில்லாமல் பதில் கொடுக்கவேண்டுமானுல், திட்ட மான சைகைக்கு அதைப் பழக்கவேண்டும், விரல்களைச் சொடுக்குவது மாதிரி!''

''நிச்சயமாய் முயன்று பார்க்கிறேன். ஆனுல் ருஷ்ய மொழியில் அபிவிருத்தி அடைந்த பிறகுதான் அதில் சிரத்தை காட்டுவேன்.''

''அதுதான் சரி. பள்ளிக்கூடத்தில் கலா நிகழ்ச்சி நடக் கும்பொழுது, நீங்கள் இருவரும் லாப்ஸிக்கைக்கொண்டு வந்து அதன் வித்தைகளைக் காட்டலாம்.''

டைரக்டர் எங்களை தண்டிப்பாரென்று பயந்தோம்; ஆனுல் அவர் அம்மாதிரி எண்ணவேயில்லை. முறையாகப் படிப்பது முக்கியமென்பதை எங்களுக்கு உணர்த்தவே அவர் விரும்பினுர்.

## 17. பாலர் சங்கம் கைகொடுக்கிறது

டைரக்டரின் அலுவலகத்திலிருந்து வெளியே வந்தோம். வாலட்யாவும் வகுப்புப் பையன்களும் தாழ்வாரத்தில் காத்திருப்பதைப் பார்த்தோம். அவர்கள் எங்களைச் சூழ்ந்து கொண்டு சரமாரியாகக் கேள்விகளைத் தொடுத்தார்கள்.

"என்ன நடந்தது? ஐகார் அலெக்ஸாண்ட்ரோவிட்ச் என்ன கூறினர்? செம்மையாகக் கிடைத்ததா?"

"இல்லை. டைரக்டர் எங்களை மன்னித்துவிட்டார்" என்றேன் நான்.

"நல்லது, நல்லது. நாம் பாலர்சங்க அறைக்குச்சென்று பேசுவோம். இதில் ஒரு முடிவுகாணவேண்டும்" என்ருன் டோல்யா.

நாங்கள் சிறுவர் சங்க அறைக்குச் சென்றோம். சிஷ்கின் தயங்கினன்.

"ஒன்றுமில்லை, சிஷ்கின். கிலியடையாதே! நாங்கள் உன்னைப்பற்றி பிரசங்கமடிக்கப்போவதில்லை" என்ருன் யுரா.

எல்லோரும் மேஜையைச் சுற்றி அமர்ந்தவுடன், வாலட்யா பேசினர்:

"சிஷ்கினுக்கு உதவுவது எப்படி என்று நாம் யோசிக்க வேண்டும். குறைந்த மார்க் வாங்கி வந்ததால் படிப்பையே திருத்த முற்பட்டான். அவன் செய்தது தவறு என்பது மெய். ஆனல் நம்பேரிலும் குற்றமிருக்கிறது. அவனுடைய குறைந்த மார்க் சம்பந்தமாக நாம் போதுமான சிரத்தை எடுக்க வில்லை; அவனுக்குக் காலா காலத்தில் உதவவில்லை."

"நாமும் பொறுப்பு என்பது உண்மை. ஆனல் சிஷ்கின் சுயமுயற்சியின் அவசியத்தை உணரவேண்டும். இப்பொழு

தும் அவன் சிரத்தையோடு முனையாவிட்டால் மீண்டும் அதே கதையாகவிருக்கும்'' என்ருன் வான்யா.

''வான்யா சொல்லுவது சரி. நீ ஆத்திரப்படக்கூடாது. கண்காணிப்பாய் நடந்துகொள். நாங்கள் உதவுவோம். நிஜமாக, எங்களுக்கு அதில் மகிழ்ச்சி'' என்ருன் யுரா.

''எப்படிச் சொல்கிருய்? அலிக் அவனுக்கு உதவ வேண்டுமென்று நிச்சயித்தோம். என்ன நடந்தது?''

''அவனேடு எப்பொழுதாவது படித்தாயா?'' என்று வாலட்யா அலிக்கைக் கேட்டார்.

''ஓ! செய்தேன்'' என்ருன் அலிக்.

''எத்தனை தடவைகள்?''

''சரியாக ஞாபகமில்லை. இரண்டு அல்லது மூன்று தடவைகளென்று நினைக்கிறேன்.''

''இரண்டு அல்லது மூன்று தடவைகள்! தினந்தோறும் சேர்ந்து படிக்கவேண்டுமென்று உனக்குத் தெரியாதா? இரண்டு அல்லது மூன்று தடவைகள்! சபாஷ்! கூட்டத்தில் அளித்த வாக்குறுதியை நிறைவேற்றும் அழகு! ஒரு வேலை செய்வதற்கு உன்னை நம்பினேம்; என்ன செய்திருக்கிருயென்று பார்!'' என்று யுரா கோபமாகப் பேசினுன்.

''நான் என்ன செய்யமுடியும்? அவன் வீட்டுக்குப் போனுல் அவன் இருப்பதுகிடையாது. இருந்தாலும் இன்றைக்குப் படிக்கிறமாதிரியே மனது இல்லை என்பான்! ஆகவே நான் விட்டுவிட்டேன்'' என்று அலிக் விளக்கினுன். ''அம்மாதிரி விட்டுவிடுவதற்கு உனக்கு உரிமையில்லை. இந்தப் பிரச்சினையை பாலர் சங்கக் குழுவில்வைத்து, மற்றவர் உதவியைப் பெற்றிருக்கவேண்டும். சிஷ்கினுக்குத் தன் நேரத்தை திட்டமிட்டுப் பயன்படுத்தத் தெரியவில்லை. நீ என்ன செய்கிருய்? உனக்கு நல்ல மார்க் கிடைப்பதற்கு உத்திரவாதம் தேடுகிருய். உன் வகுப்புத் தோழர்கள் எக்கேடுகெட்டாலும் உனக்குக் கவலையில்லை. உன் பேரிலும் தப்பு இருக்கிறது;

உன் வேலையை முறையாகக் கண்காணித்திருக்கவேண்டும்'' என்றான் யுரா.

''இனிமேல் அவனுக்கு முறையாக உதவுவேனென்று உறுதி கூறுகிறேன். சதுரங்கத்தில் அதிக நேரம் செலவு செய்தேன்; அதன் விளைவு இது?'' என்றான் அலிக்.

''வேண்டாம். உன்னால் சரியான வழியில் செய்யமுடியு மென்று எனக்குத் தோன்றவில்லை'' என்றார் வாலட்யா.

''நான் சிஷ்கினோடு படிக்கப்போகிறேன். ஐகார் அலெக்ஸாண்ட்ரோவிட்ச் என்னிடம் சொல்லியிருக்கிறார்'' என்றேன் நான்.

''ஐகார் அலெக்ஸாண்ட்ரோவிட்ச் அந்த வேலையை உனக்கு இட்டிருந்தால், நாங்கள் தடைசொல்லோம். சரி தானா?''

''ஆம். அவன் செய்யட்டும்'' என்று எல்லோரும் ஒத்துக் கொண்டார்கள்.

கூட்டம் முடிந்து, நாங்கள் வெளியேறினோம். வழி யெல்லாம் சிஷ்கின் மௌனமாயிருந்தான்; யோசனையில் ஆழ்ந்தவன் மாதிரித் தோன்றியது. இறுதியில், ''நான் வெறும் வற்றல்! வைராக்கியமில்லை, திறமையில்லை, எதுவு மில்லை!'' என்றான்.

''அறியாதவன்போலப் பேசாதே. நீ வற்றலுமில்லை, வறுவலுமில்லை!'' என்று அவனுக்கு ஆறுதல் சொல்ல முயன்றேன்.

''எனக்குத் தெரியும், நான் வெறும் வற்றலென்று. ஆனால் எப்பொழுதும் இப்படியிருக்கப்போவதில்லை. என்னைத் திருத்திக் கொள்கிறேன், பார். வித்யா, நீ கைகொடுக்க வேண்டும். டைரக்டரே உன்னிடம் சொல்லியிருக்கிறார். இப்பொழுது மறுக்கத் துணியமாட்டாய்!''

"மறுக்கப்போவதில்லே. ஆனுல் நான் சொல்வது மாதிரி நீ செய்யவேண்டும். இன்றே நாம் தொடங்குவோம். பிற்பகலில் நேராக உன் வீட்டுக்கு வருவேன்; நாம் தொடங்குவோம்."

நான் பிற்பகலில் சிஷ்கின் வீட்டுக்குச் சென்றேன். மாடிப்படி ஏறும்பொழுது, லாப்ஸிக் குரைக்கும் சத்தம் காதில் விழுந்தது. அறைக்குள் போனுல், லாப்ஸிக் நாற்காலியில் அமர்ந்து குரைத்துக்கொண்டிருந்தது; சிஷ்கின் அதன் வாய்க்கு முன் விரல்களே முறித்துக்கொண்டிருந்தான். "டைரக்டர் சொன்னமாதிரி, சைகைக்கிணங்க குரைப்பதற்குக் கற்றுக்கொடுக்கிறேன். இன்னும் கொஞ்சநேரம் சொல்லிக்கொடுப்போம். பிறகு நாம் படிக்கலாம்" என்ருன் சிஷ்கின்.

"கோஸ்ட்யா சிஷ்கின்! ருஷியப் பாடத்தில் அபிவிருத்தி அடையும்வரை நாய்க்கு சொல்லிக்கொடுக்கப் போவதில்லே யென்று நீ வாக்களிக்கவில்லேயா? மறந்துவிட்டாயா?" என்று நான் கடுமையாகக் கூறினேன்.

"தப்பு, தப்பு! லாப்ஸிக், வெளியில்போ! ருஷியப் பாடத்தில் தேர்ச்சி அடையும்வரை உன்னேப் பார்க்கவும்மாட்டேன்! வித்யா, மீண்டும் இப்படிச் செய்தால் முதுகெலும்பில்லாதவனென்று சொல்லு! எந்தப் பாடத்துடன் ஆரம்பிக்கலாம்?" என்று சிஷ்கின் கத்தினுன்.

"ருஷிய மொழியுடன் ஆரம்பிப்போம்" என்றேன் நான்.

"பூகோளம் அல்லது கணக்குடன் தொடங்கினுல்?"

"கூடாது. எதில் ஆரம்பிப்பதென்பதை நான் சொந்த அனுபவத்தில் அறிவேன். உனக்கு என்ன வீட்டுப்பாடம், ருஷிய மொழியில்?"

"அந்த பொல்லாத விகுதிகள்தான்! எழுத்துக் கூட்டுவதின் விதிகளில் ஒன்றை கற்றுவரும்படியும் டீச்சர் சொல்லியிருக்கிருர்கள். தவிர, ஒரு அப்பியாசம் எழுதவேண்டும்."

"சரி, முதலில் அப்பியாசத்தை எழுது."

"நான் தயார்."

"அப்படியா? பின் ஏன் தொடங்கவில்லை? உனக்காக நான் செய்யவேண்டுமென்று நினைக்கிருயா? அது நடக்காது. நீயாகத்தான் செய்யவேண்டும். சுயமாக எழுதப்படிக்கக் கற்றுக்கொள்."

"சரி" என்ருன், பெருமூச்சு விட்டுக்கொண்டே.

விதியை ஓரிரண்டு தடவை படித்தான்; அப்பியாசத்தை எழுதத் தொடங்கினுன். அது மிகவும் சுலபமானது. ஆனுல் நான் பூகோளபாடத்தை முடிக்கும்பொழுதே, அவன் அதை முடித்தான்.

ஆனுல் அவன் எழுதியிருப்பதைப் பார்த்தவுடன் பிரமித்துவிட்டேன். தவறுகளாகவிருந்தது.

"அருமையாகச் செய்துவிட்டாய்!"

"ஏன்? தப்பும் தவறுமாயிருக்கிறதா?"

"அப்படியில்லை; எனினும் மோசம்தான்."

"எனக்குத் தெரியும். நான் உதவாக்கரை; உருப்படமாட்டேன்" என்று சிஷ்கின் புலம்பினுன்.

"அட கழுதை! கை பட்டவுடன் படிப்பு வந்துவிடுமா? முயற்சிவேண்டாமா? அது சரி. 'புத்தகம்' என்பதற்கு 'கள்' சேர்த்து, 'புத்தகம்கள்' என்று பன்மை எழுதுவது சரியல்லவென்று உனக்குத் தெரியாதா?"

"தெரிந்திருக்கவேண்டும், மறந்துவிட்டேன்."

"அதற்குள்ளாகவா?"

அவன் எழுதிய விகுதியை மீண்டும் படிக்கச் சொன்னேன்; அது சம்பந்தமாகப் பல உதாரணங்களைக்கொடுத்து விளக்கினேன். "இனி நீயே அந்த அப்பியாசத்தை எழுது; தவறு செய்யாமல் எழுது" என்றேன்.

"வித்யா, இதுபோதும். அடுத்த தடவை அதிக கவனத்தோடு எழுதுகிறேன்."

"அது கூடாது. என் சொற்படி கேட்பதாகக் கூறினுயே, மறந்துவிட்டாயா?"

பெருமூச்சு விட்டுக்கொண்டே சிஷ்கின் அந்த அப்பியாசத்தை மீண்டும் எழுதினுன். ஆனல் இந்தத் தடவை அவசரப்பட்டான். அவனுடைய எழுத்துக்கள் நாலு திசைகளிலும் பரப்பிக்கொண்டிருந்தன; சில பக்கவாட்டில் பெருத்திருந்தன; சில வரிக்குமேல் தூங்கி வழிந்தபடி தொங்கிக்கொண்டிருந்தன; சில வரிக்குக் கீழ் வழுக்கி விழுந்திருந்தன. அவனுக்கு ஏற்கெனவேயே படிப்பு அலுத்துவிட்டதென்பதை அவை பிரகடனஞ்செய்தன.

அப்பொழுதுதான் யுரா வந்தான். நாங்கள் சுறு சுறுப்பாகப் படித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தான்.

"படிக்கிறீர்களா? பலே! பலே! என்ன பாடம்?"

"ருஷிய மொழி; ஆல்கா நிகோலிவ்னு அவனுக்கு தனிப் பயிற்சி கொடுத்திருக்கிருள்," என்றேன் நான்.

சிஷ்கின் எழுதிக்கொண்டிருப்பதை யுரா பார்த்தான்.

"இது என்ன? இதோ ஒரு தப்பு, இதுவும் தப்பு, இதுவும் கூடத்தான்," என்ருன் அவன்.

"அவர்கள் ஏன் இவ்வளவு கஷ்டமான பயிற்சியைக் கொடுக்கவேண்டும்?" என்று சிஷ்கின் கேட்டான்.

அப்பொழுது வான்யா வந்தான். "படிக்கிறீர்களா?" என்று கேட்டான். 'ஆம்' என்ருேம்.

"நல்லது. உங்களுக்கு வகுப்பு முழுவதும் கடமைப் பட்டிருக்கிறது."

"என் பாடங்களை நான் படிப்பதற்காக வகுப்பு என்னை ஏன் வாழ்த்தவேண்டும்? கற்றுக்கொள்வதற்காகத்தான் நாம் படிக்கிருேம்; வாழ்த்துக்கோ வந்தனத்துக்கோ அல்ல" என்ருன் சிஷ்கின்.

"அந்தப் பொருளில் நான் சொல்லவில்லை. நீ நன்றாகப் படித்து நல்ல மார்க் வாங்கவேண்டுமென்று வகுப்பு முழுவதும் ஆசைப்படுகிறது. அதனால் நீங்கள் இருவரும் முனைந்து படிப்பதைப் பார்த்து நான் மகிழ்ச்சியடைந்தேன்."

கதவுதிறந்தது; வாஸ்யா வந்தான். "ஓ! படிக்கிறீர்களா?" என்று அவன் கேட்டான்.

"இது என்ன விஷயம்? நாங்கள் எங்களுடைய வாழ்க்கையிலேயே படித்ததில்லை மாதிரி நடந்துகொள்கிறீர்களே!"

"நாங்கள் படிப்பதும் ஒரு அதிசயமா?" என்று கேட்டேன்.

"உன்னைச் சொல்லவில்லை; சிஷ்கினைக் குறித்துப் பேசினேன்," என்றான் வாஸ்யா.

"சிஷ்கின் மட்டும் என்ன? அவன் படிப்பதில்லையா? ருஷிய மொழியில் மட்டும்தான் அவன் பின் தங்கினான். இதர பாடங்களில் அவன் நல்ல மார்க் வாங்கவில்லையா?"

"சரி, சரி! கோபித்துக்கொள்ளாதே! நான் தப்பாக ஒன்றும் சொல்லவில்லை. அவன் படிக்கமாட்டானென்று நினைத்துவந்தேன்; அவன் படிப்பதைக் கண்டவுடன் அந்த வார்த்தைகள் தாமாக வந்தன."

"வேறுவகையில் பேசமுடியாதா?"

"நீ ஆத்திரப்படுவாயென்று எனக்குத் தெரியுமா? இதில் கோபத்துக்கு என்னவிருக்கிறது?"

அப்பொழுது மீண்டும் கதவு திறந்தது; அலிக் வந்தான்.

"படிக்கிறீர்களா? என்று அவன் கேட்பான், பார்!" என்று சிஷ்கின் முணுமுணுத்தான்.

"படிக்கிறீர்களா?" என்று அலிக் புன்சிரிப்புடன் கூறினான்.

நாங்கள் அனைவரும் சிரித்தோம். அவன் முகம் மாறியது. "என்ன தமாஷ்?" என்று கேட்டான்.

"ஒன்றுமில்லை; உன்னைக் கேலிசெய்யவில்லை. எதற்காக வந்தாய்?" என்று நான் கேட்டேன்.

"உதவி தேவையா என்று அறிவதற்காகத் தலையை நீட்டினேன்."

"சதுரங்கப் பலகையைக்கொண்டு வரவில்லையா?" என்றேன்.

"ஓ! மறந்துவிட்டேன்! நல்ல ஆட்டம் போட்டிருக் கலாம்."

"நீயும் உன் சதுரங்கமும் இந்த வீட்டுக்கு அருகில் வர வேண்டாம்! சரி, நாமெல்லோரும் போவோம்! அவன் படிப் புக்கு இடையூருகத்தான் இருக்கிரும்" என்ருன் யுரா. வந்த பையன்கள் போய்விட்டார்கள்.

"நாம் என்ன செய்கிருமென்று பார்க்க வந்தார்கள்," என்ருன் சிஷ்கின்.

"அதனுலென்ன ஒரு தவறுமில்லை" என்றேன் நான்.

"தவறென்று நான் சொன்னேனு? அவர்கள் இவ்வளவு சிரத்தை காட்டுவதைப் போற்றவேண்டும்."

"நீ பள்ளிக்கு வராமலிருந்த விவரத்தை ஆல்கா நிகோ லிவ்னு உன் தாயாரிடம் சொன்னுளா?" என்று நான் கேட்டேன்.

"ஆம். அத்தையிடம்கூடச் சொல்லிவிட்டாள். அதற் காக எனக்குக் கிடைத்த அர்ச்சனையை நீ கேட்டிருக்க வேண்டும்! வாழ்நாள் முழுவதும் அதை மறக்கமாட்டேன்."

"அது போகட்டும்! எல்லாம் முடிந்தவரையில் நல்லது. பள்ளிக்குப் போகாமலிருந்தது எனக்குக் கொஞ்சமும் பிடிக்க வில்லை. வித்யா, நிஜமாகச் சொல்கிறேன், அது பயங்கரமா யிருந்தது. என்னைப்போல நகரைச்சுற்றி பதுங்கிப் பதுங்கித் திரியாமல், பள்ளிக்குப் போகமுடிந்த உன் போன்றவர்களைப் பார்த்து, நான் பொருமைப்பட்டேன். வீடு வாசலில்லாத

நிராதரவான பிஞ்சுக் குழந்தை மாதிரி நான் தவித்தேன். அம்மாவை எண்ணி எண்ணித் துயருற்றேன். அவளை ஏமாற்றுவதில் எனக்குப் பிரியமிருந்ததென்று எண்ணு கிருயா? ஆனல் ஆரம்பித்த பிறகு நிறுத்தமுடியவில்லை. மற்ற தாயார்கள் தத்தம் புதல்வர்களைப்பற்றி பெருமைப்படு கிருர்கள். என்னைப்போன்ற உதவாக்கரையைப்பற்றி என் தாயார் எப்படிப் பெருமைப்படுவாள்? இந்தக் கேவலமான நிலையின் மோசமான அம்சமென்னவென்ருல், மீட்சிக்கு மார்க்கமே புலப்படவில்லை. மேன்மேலும் கேடான பாதை யில் சென்றேன். அப்பா! அதை நினைக்கவும் பயமாயிருக் கிறது; நினைத்தால் உள்ளமும் உடலும் நடுங்குகிறது.''

''நீ இவ்வளவு கஷ்டப்பட்டதை நான் கவனிக்கவே யில்லை'' என்றேன்.

''நிஜம், வித்யா. ஆனல் நான் வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை. கவலைப்படாதவன் மாதிரி பாசாங்கு செய் தேன். ஆனல் எப்பொழுதும் என் இதயம் ஈயக்கட்டி மாதிரி அழுத்திக்கொண்டேயிருந்தது.''

''கவலையில்லாதவன் மாதிரி ஏன் நடித்தாய்?''

''எனக்கே புரியவில்லை. நீவந்து பேச்சுக்கொடுப்பாய், வாதிப்பாய், வாதிப்பாய். என்னைப்பற்றி நானே வெட்கப் படுவேன். ஆனல் எல்லாம் நன்ருகயிருப்பதுமாதிரிப் பாசாங்கு செய்வேன். சரி; அதெல்லாம் முடிவுற்றது. இனி அதுமாதிரி ஒருகாலும் நடக்கமாட்டேன். ஏதோ பயங்கர மான சூருவளிக் காற்று அடித்து ஓய்ந்தமாதிரியிருக்கிறது; அமைதியும் தெளிவும் நிலவுகின்றன. இனிக் கஷ்டப்பட்டு படித்தால்போதும்.''

''அதுதான் சரியான முடிவு; முயற்சிசெய்!'' என்றேன்.

''நிச்சயம். முயற்சியைத்தான் தொடங்கிவிட்டேனே!''

# 18. அவசரத்தின் அந்தரங்கம்

மறுநாள், ஆல்கா நிகோலிவ்னு சிஷ்கின் வீட்டுப் பாடத்தைப் பார்த்தாள்; நான் கவனித்திராத தவறுகளை சுட்டிக்காட்டினுள். இலக்கண விதிகளை அவன் புரிந்து கிரகித்துக்கொண்டதை நான் பார்த்தேன். ஆனல் அப்பியாசத்தை நோட்புத்தகத்தில் பிரதி செய்துகொள்ளும் பொழுது, புதிய எழுத்துத் தவறுகளை செய்திருந்தான். எழுத்துக்களை சாப்பிட்டிருந்தான் அல்லது தவருன எழுத்துக்களைச் சேர்த்திருந்தான்.

“கவனக்குறைவின் விளைவு இது. படிப்பில் ஆர்வமில்லையென்பதைத்தான் இது காட்டுகிறது. அவசர அவசரமாக வீட்டுப்பாடத்தை முடிப்பதில்தான் உன் அக்கறையெல்லாம்!” என்ருள் ஆல்கா நிகோலிவ்னு.

“நான் அவ்வளவு அவசரப்படுவதில்லை” என்ருன் சிஷ்கின்.

“அப்படியானல் உன் எழுத்துக்கள் ஏன் அஷ்டகோணலாயிருக்கின்றன? அவை வளைந்து நெளிந்து ஆடுகின்றனவே? முயற்சி செய்தால் உன்னல் திருத்தமாக எழுத முடியும். சிரத்தையுள்ள பையன் பிசகில்லாமல் எழுதுவதுடன் சுத்தமாகவும் எழுதுவதற்குப் பிராயாசை எடுத்துக்கொள்வான். போதுமான கவனம் எடுக்கவில்லையென்பதை நீ ஒப்புக்கொண்டுவிடு.”

“முயற்சிதான் செய்கிறேன், ஆல்கா நிகோலிவ்னு. ஆனல் தேவையுள்ள நேரம் படிப்பதற்கு வைராக்கியமில்லை. சட்டுப்புட்டென்று முடிக்கத்தான் தோன்றுகிறது. ஏனென்று எனக்குத் தெரியவில்லை.”

“ஏனென்று நான் சொல்கிறேன். சிரமமில்லாமல் எதையும் சாதிக்க முடியாதென்பதை நீ உணரவில்லை. உன் வேலை

யில் சிரத்தை எடுக்காவிட்டால், நீ உறுதியடையமாட்டாய்; எதிலும் வெற்றியடையமாட்டாய்'' என்ருள் ஆல் கா நிகோலிவ்ன.

அன்றிலிருந்து, சிஷ்கின் நோட்புத்தகத்தைப் பார்த்தால்போதும், அவன் தன் சஞ்சல குணத்தை எதிர்த்து எப்படிப் போராடுகிருனென்று தெரிந்துகொள்ளலாம். சில தடவைகளில், அப்பியாசத்தின் ஆரம்பத்தில் கையெழுத்தைப் பார்ப்பதற்கே இன்பமாகவிருக்கும்; மணி மணியான எழுத்துக்களைப் பார்த்து மகிழ்ச்சியடைவோம். நன்ருக எழுதவேண்டுமென்று தீர்மானித்துவிட்டு அவன் வேலையில் இறங்கியிருக்கிருனென்பதை அது காட்டியது. ஆனல் இத்த ஆரம்ப சூரத்தனம் நீடிக்கவில்லை. சில வரிகளைப் படித்த பின், அவனுடைய உறுதி குலைந்துவிட்டதைப் பார்க்கலாம்; எழுத்துக்கள சதிராடும்; ஒன்றன் மீதொன்று தவழும்; ஒன்றையொன்று தழுவிக்கொள்ளும்; குடிகாரன் மாதிரி அந்தப் பக்கம் அல்லது இந்தப் பக்கம் சாய்ந்தாடும். சில சமயங்களில், வேறு விதமான எழுத்தையும் பார்க்கலாம்; அதாவது அப்பியாசம் ஆரம்பிக்கும்பொழுது, விகாரமான கிறுக்கலாகவிருக்கும்; இந்தத் தொந்தரவை முடித்துத் தொலைக்கவேண்டுமென்ற அவசரத்தை அது எடுத்துக் காட்டும். ஆனல் சில வரிகள் எழுதியபின், அவனுடைய உறுதிப்பாடு செயலாற்றத் தொடங்கும்; எழுத்துக்கள் மென்மேலும் சுத்தமாகவும் நேராகவுமிருக்கும்; கடைசி வரிகளைப் படிக்கும்பொழுது, இவற்றை எழுதியவன்தான் ஆரம்ப வரிகளை எழுதினனென்று நம்பமுடியாது.

ஆனல் முக்கிய பிரச்சினை கையெழுத்தல்ல, எழுத்துப் பிசகுதான். ஏராளமான எழுத்துப் பிசகுகளைசெய்தான். அடுத்த தடவை வகுப்பில் டிக்டேஷன் நடந்தபொழுது அவனுக்கு 2-தான் கிடைத்தது. இந்தத் தடவை 3 வாங்குவானென்று சகல பையன்களும் எதிர்ப்பார்த்தார்கள். எல்லோருக்கும் ஏமாற்றம்.

இடைவேளையில் யுரா என்னிடம் பேசினான். "வித்யா நீ சிஷ்கினுக்கு ஒத்தாசை செய்வதில்லையா?"

"செய்கிறேன். நாங்கள் நன்றாகப் படித்துவருகிறோம்."

"அப்படியானால், அவனிடம் அபிவிருத்தி இல்லையே ஏன்?"

"அது என் தவறு அல்ல; நான் அவனோடு தினசரி வேலைசெய்கிறேன்."

"அது சரி. அவன் ஏன் முன்னேறவில்லை?"

"எனக்கு எப்படித் தெரியும்? ஒருவேளை, மேலும் நாளாகலாம்."

"இரண்டு வாரங்களுக்கு மேலாகிவிட்டது; ஒரு பலனையும் காணோமே! அவனை முறைப் படுத்துவதற்கு உனக்குத் தெரியவில்லை. வேறு யாராவது அவனுக்கு உதவவேண்டும். உனக்குப் பதிலாக வான்யாவை நிச்சயிக்குமாறு ஆல்கா நிகோலிவ்னாவிடம் கூறவேண்டும். அவன் சிஷ்கினைப் படிக்கச்செய்வான்."

"கூடாது. டைரக்டரே எனக்கு இந்த வேலையைக் கொடுத்தார். அதைப்பறிக்க உனக்கு உரிமையில்லை" என்றேன் நான்.

"அதைப்பற்றி யோசிப்போம். நாளைக்கு டீச்சரிடம் பேசுவோம். டைரக்டரே சொல்லியிருந்தால், நீ உன் இஷ்டப்படி செய்யலாமென்று நினைக்கிறாயா?" என்றான் யுரா.

லோன்யா தலையிட்டு, "மாலியேவ், விட்டுக்கொடுத்துவிடு. எப்படியும் டீச்சர் உன்னை இந்த வேலையிலிருந்து நீக்கிவிடுவாள். நீ அந்த வேலைக்கு ஏற்றவனல்லன். உன்னைவிட நன்றாக வான்யா செய்வான்" என்றான்.

"அவன் செய்யமாட்டானென்று பந்தயம் கட்டுகிறாயா?" என்றான் யுரா.

"போகப் போகத் தெரியும்" என்றேன் நான்.

“ஏன் இப்படி விதண்டாவாதம் செய்கிருய்? உன் போதனையால் பலனில்லை என்பது உனக்குப் புரியவில்லை?”

வேறு சில பைன்களும் சேர்ந்துகொண்டார்கள்; நான் இந்தப் பொறுப்பை விட்டுவிடவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். ஆனல் நான் விடாப்பிடியாயிருந்தேன்.

“முடியாது; டீச்சர் விரும்பினல் என்னை நீக்கிவிடட்டும். நாளுக விடமாட்டேன்” என்றேன்.

“சரி, டீச்சரே செய்யப்போகிருள். உனக்குத்தான் அது கேவலம்” என்று பையன்கள் கூறினர்கள்.

என் பிடிவாதத்தின் மர்மம் எனக்கே புரியவில்லை. சிஷ்கின் டிக்டேஷனில் 2 வாங்கிய பிறகும் நான் வற்புறுத்துவது தவறு என்பதை அறிவேன். வேறு யாராவது அவனுக்கு உதவியிருந்தால், அவன் அதிக மார்க் வாங்கியிருக்கலாம். இனி அதைப்பற்றிப் பேசிப்பயனென்ன?

அன்று சிஷ்கினும் நானும் நிரம்ப வேதனைப்பட்டோம்.

“அநேகமாக இது நாம் கூட்டாகப் படிக்கும் கடைசி நாளாக இருக்கலாம். நாளைக்கு வேறு யாரையாவது ஆல்கா நிகோலிவ்ன நிச்சயித்துவிடலாம்” என்றேன்.

“அநேகமாக அவள் செய்யமாட்டாள்” என்ருன் சிஷ்கின்.

“அவள் செய்வாளென்றுதான் நான் பயப்படுகிறேன். எப்படியிருந்தாலும், என்னல் உருவான ஓத்தாசை செய்ய முடியவில்லை. எனக்குச் சொல்லிக்கொடுக்கத் தெரியவில்லை போலிருக்கிறது. எனக்கு வருத்தமாகத்தானிருக்கிறது. ஏனென்ருல் டைரக்டர் வருத்தப்படுவார். நீ நல்ல மார்க் வாங்குவதற்கு உதவுவேனென்று நான் வாக்களித்தேன்; என்ன பலன்? இது ஒரு பாலர் சங்கக் கடமையென்றும் அவர் கூறினர். நான் கெடுத்துவிட்டேன். இனி எவரும் என்னை நம்பி ஒரு காரியம் சொல்லமாட்டார்கள்.”

"தவறு உன்னுடையதல்ல; பழி என்னைத்தான் சேரும். நான் மேலும் அதிக சிரத்தையோடு படித்திருக்கவேண்டும். தவிர, வித்யா, உனக்கு ஒரு ரகசியம் சொல்லப்போகிறேன். இது என் தவறுதான். வீட்டுப்பாடங்களை அவசரப்பட்டு செய்ததால்தான் பல பிழைகளைச் செய்தேன். அம்மாதிரி அவசரப்படாவிட்டால், அதிகமாகக் கற்றிருப்பேன்" என்றான் சிஷ்கின்.

"ஏன் அவசரப் பட்டாய்?"

"அதுதான் ரகசியம். சீக்கிரத்தில் முடித்துவிட்டு லாப்ஸிக்குக்கு பயிற்சி அளிப்பதில் கருத்தாயிருந்தேன்."

"ஆ! அப்படிச் செய்தாயா!"

"ஆமாம்."

"அதனால்தான் கிறுக்கலாய் எழுதுகிறாய்! படிப்பில் சிந்தனையில்லை. லாப்ஸிக் நினைவாகவேயிருந்திருக்கிறாய்!"

"அப்படித்தான். உண்மையில் படிப்பு, நாய் இரண்டையும்பற்றி சிந்திப்பதுண்டு. அதனால்தான் படிப்பில் ஓட்டை விழுந்துவிட்டது."

"ஒரே காலத்தில் இரண்டு காரியங்களைச் செய்ய முயல்வதின் விளைவு இதுதான். ஒரு சமயத்தில் ஒரு காரியத்தில் முழுக் கவனத்தையும் செலுத்தவேண்டும்."

"சரி. ஒரு காரியத்தை முடித்துவிட்டேன்."

"எதை?"

"லாப்ஸிக்குக்கு சொல்லிக் கொடுத்துவிட்டேன். ஒரு நிமிஷம் இரு, காட்டுகிறேன். லாப்ஸிக், இங்கே வா."

லாப்ஸிக் அவனிடம் ஓடிவந்தது. அவன், 3 எழுதிய அட்டையைக் காட்டினான். அது மூன்றுதடவை குரைத்தது.

எழுதிய அட்டையை சிஷ்கின் காட்டியதும் அது ஐந்து தடவை குரைத்தது.

"பார்த்தாயா? நான் ரகசியமாக விரல்களை நொடிக்கச் செய்வேன்; எப்பொழுது குரைப்பதை நிறுத்தவேண்டு மென்று அதற்குத் தெரியும்."

"நீ எப்படிக் கற்றுக்கொடுத்தாய்?" என்று நான் கேட்டேன்.

"முதலில் அது எந்தச் சைகையையும் புரிந்துகொள்ள வில்லை. பிறகு நான் ஒரு யுக்தி செய்தேன்; அது எத்தனை தடவைகள் குரைக்கவேண்டுமோ, அத்தனை தடவைகள் குரைத்தவுடன் ஒரு சீனிக்கட்டியை எறிவேன் அல்லது இறைச்சித்துண்டை எறிவேன்; அதே சமயத்தில் என் விரல் களையும் சொடுக்குவேன். அது குரைப்பதை நிறுத்திவிட்டு பண்டத்தைத் தின்னப் பாயும். இதே மாதிரிப் பல நாட்கள் செய்தேன். பிறகு, எந்தப் பண்டத்தையும் போடாமல், விரல்களைச் சொடுக்கிக் குரைப்பதை நிறுத்தினேன். விரல் கள் நொடித்த சப்தம் கேட்டபொழுதெல்லாம் தின்பண்டம் பெற்றுப் பழகிவிட்டபடியால், அந்த சைகைக்கு இணங்க அது குரைப்பதை நிறுத்தியது. முதலில், நல்ல ஒலி உண் டாகும் வகையில் விரல்களை நொடித்தேன். பிறகு, லேசான ஒலியிருந்தால்கூட, அந்த நொடியைப் புரிந்துகொள்வதற்கு அது கற்றுக்கொண்டுவிட்டது."

"ஆகவே, நீ படிக்காமல் உன் நாயை படிப்பித்தாய்."

"ஆம்! நான் எதையும் தலைகீழாகத்தான் செய்கிறேன். எனக்கு உறுதிகிடையாது. ஆனால் நாயைப் பழக்கிவிட்ட படியால், இனி நான் தங்குதடையில்லாமல் படிக்கமுடியும். நீயே பார்" என்றான் சிஷ்கின்.

"நான் பார்க்கமாட்டேன்; வான்யா வருவான்" என்றேன்.

மறுநாள், சிஷ்கின் பள்ளிக்கு வரும்பொழுது, தனக்கு வீட்டுப் பயிற்சிக்காக ஆல்கா நிகோலவ்னா கொடுத்த அப் பியாசங்கள், அவன் அரைகுறையாக எழுதியவை, திருத்த

மாகவும் பூர்த்தியாகவும் எழுதியவை, எல்லாவற்றையும் கொண்டுவந்தான்.

ஆல்கா நிகோலிவ்னுவிடம் அவற்றைக் காட்டிப் "பாருங்கள்! நீங்கள் கொடுத்த அப்பியாசங்கள் இவை; சரியாக எழுதப்பட்டவை இவை. தப்பாக எழுதப்பட்டவை இவை; இந்தப் புத்தகத்தைப் பாத்தால், வித்யா பிழைபட எழுதியவற்றை எத்தனை தடவை திரும்பத் திரும்ப எழுதச் சொல்லியிருக்கிருன் என்பது புலனுகும். அவன் என் படிப்பில் சிரத்தை காட்டவில்லையென்று சொல்வீர்களா?" என்று சிஷ்கின் கேட்டான்.

"வித்யா தன்னுலியன்றதைச் செய்திருக்கிருனென்பது திண்ணம். நீ சுயமாக உதவிக்கொள்ளாவிட்டால், மற்றவர் எப்படி உதவமுடியும்? உனக்குப்போதுமான சிரத்தையில்லை. உனக்காக வித்யா கற்றுக்கொள்ளமுடியுமா? நீ கற்றுக்கொள்ளவேண்டாமா?" என்ருள் ஆல்கா நிகோலிவ்னு.

"கற்றுக் கொள்கிறேன், ஆல்கா நிகோலிவ்னு; இது புனிதமான வாக்குறுதி; வித்யா எனக்கு ஒத்தாசை செய்வதை அனுமதியுங்கள். எனக்காக எவ்வளவு நேரத்தைப் பயன்படுத்தியிருக்கிருன்!"

"சரி. அவனே உனக்குத் துணைபுரியலாம். அவன் மனப்பூர்வமாக உழைத்திருக்கிருன். கார்கால விடுமுறை நெருங்கிவிட்டது. அந்த லீவில் செய்வதற்குச் சில அப்பியாசங்களைத் தருகிறேன். வித்யாவின் போதனை நற்பயன் அளிப்பதை அவனும் பார்ப்பான்."

நானும் சிஷ்கினும் சேர்ந்து படிப்பதை அவள் அனுமதித்ததால் நாங்கள் ஆனந்தமடைந்தோம்.

"ஆல்கா நிகோலிவ்னு, எங்களிடம் வித்தைகள்செய்யக் கூடிய ஒரு நாய் இருக்கிறது. அதன் பெயர் லாப்ஸிக். புதிய வருஷப்பிறப்பு நாளில் நாங்கள் அதன் வித்தைகளைக் காட்டுகிருேம். அனுமதிப்பீர்களா?" என்று சிஷ்கின் கேட்டான்.

"என்ன வித்தை செய்யும்?"

"கணக்குப்போடும். சர்க்களில் பார்த்த நாய் மாதிரி எண்ணும்."

"அப்படியா? சொல்லிக் கொடுத்தது யார்?"

"நாங்கள்தான்."

"சரி. வருஷப் பிறப்பு நாளில் கொண்டுவாருங்கள். இவ்வளவு சாமர்த்தியமான நாயைப் பார்ப்பதற்கு பையன்கள் ஆசைப்படுவார்கள்!"

# 19. நாய்வித்தை அரங்கேற்றம்

**நா**னில்லாதபொழுது, சிஷ்கின் லாப்ஸிக்குக்கு சொல்லிக்கொடுத்தது, எனக்குப் பிடிக்கவில்லை; நானும் அதில் பங்குகொள்ள விரும்பினேன். இனி அதைப்பற்றி பேசிப் பயனில்லை.

"கவலைப்படாதே! வீடு வாசலில்லாத நாய் ஒன்றை வீதியில் சந்திக்காமலா போகிறோம்? அதை நீயே பழக்கிக் கொள்."

"நான் தனியாகப் பழக்கமாட்டேன். சேர்ந்து காரியம் செய்வதுதான் எனக்குப் பிடித்தம். நான் மட்டும் போயிருந்தால் சிரத்தை எடுக்கவேமாட்டேன்" என்றேன் நான்.

"நான் உதவிசெய்வேன். இருவருமாக அதைப் பழக்குவோம். பிறகு, உனக்கும் ஒரு பயிற்சியான நாய் இருக்கும்."

"வேண்டாம். புதிய நாய் கிடைத்துவிட்டால், அதன் பயிற்சியில் மெய்ம்மறந்துவிடுவாய்; படிப்பெல்லாம் மூட்டை கட்டிவைத்துவிடுவாய். புதிய நாய்க்குப் பயிற்சி கொடுப்பதை கோடைவரை தள்ளிவைப்போம்."

"சரி. ஒத்திவைப்போம். இருவருமாக லாப்ஸிக்கைப் பழக்கினோமென்றே பையன்களிடம் சொல்வோம். இருவருமாகத்தானே ஆரம்பித்தோம்? வருஷப் பிறப்பு நாளிலும் நாமிருவருமாக வித்தை காட்டுவோம்."

"அதற்கு மேடைக்கூச்சம் வந்துவிட்டால்? ஜனங்களைக் கண்டு அது பயப்படக்கூடாது; அதற்கு அது பழக வேண்டும்" என்றேன் நான்.

"எப்படிச் செய்வது?"

"அதிகம் பேர் உள்ள இடத்துக்கு அதை அழைத்துப் போகவேண்டும். வீட்டுப் பாடங்களை முடித்தபின், என் வீட்டுக்குக் கொண்டுபோவோம். அது எண்ணுவதை என் குடும்பத்தினருக்குக் காட்டுவோம்."

பாடங்களை முடித்தவுடன், சிஷ்கின் நாய்க்குக் கழுத்துப் பட்டையைப் போட்டான்; தோல் வாரைக் கட்டினன்; என் வீட்டுக்கு நாயைக் கொண்டுசென்றோம். அன்று என் அத்தை நாடியாவும் மாமா செர்யோஷாவும் வந்திருந்தனர்.

"எண்ணத் தெரிந்த நாய் ஒன்றை நாங்கள் காட்டுவோம். சர்க்கஸ் கொட்டகையிலிருப்பதாகப் பாவித்துக் கொள்ளுங்கள். ஜாக்கிரதையாகக் கவனியுங்கள்" என்றேன் நான்.

ஒரு உயர்வான மணைமீது லாப்ஸிக்கை அமர்த்தினோம். சிஷ்கின் அட்டைகளில் எழுதிய எண்களைக் காட்டிவந்தான். ஒவ்வொரு தடவையும் நாய் சரியாகப் பதில்கொடுத்தது. அப்பொழுது எனக்கு ஒரு யோசனை உதித்தது. நாய்க்கு எண்களைக் காட்டுவதற்குப் பதிலாக, "லாப்ஸிக், 2-ஐ 2-ஆல் பெருக்கினுல் எத்தனை?" என்று கேட்டேன்.

அது நான்கு தடவைகள் குரைத்தது. சரியான சமயத்தில் நான் சைகை காட்டினேன் என்பதைக் குறிப்பிட வேண்டுமா?

லிக்காவுக்கு குஷி. "அட! நாய்க்குப் பெருக்கல் கூடத் தெரிகிறதே!"

இவ்வளவு நன்ருகப் பயிற்சி அளித்திருப்பதற்காக எல்லோரும் எங்களைப் புகழ்ந்தார்கள். வருஷப் பிறப்பு நாளில் பள்ளிக்கூட விழாவில் வித்தைசெய்து காட்டப்போவதாகச் சொன்னோம்.

"நீங்கள் நடிப்பதற்கு ஆடைகளைத் தயாரித்துவிட்டீர்களா?" என்று லிக்கா கேட்டாள்.

"ஆடைகள் எதற்கு?"

"அவையில்லாவிட்டால் சுவை குன்றிவிடும். சர்க்கஸ் கோமாளிகள் அணிந்துகொள்ளும் விசித்திரமான தொப்பி களை நான் செய்து தருகிறேன்" என்று லிக்கா கூறினுள்.

"எதில் செய்வாய்?"

"என்னிடம் கலர் காகிதம் இருக்கிறது. புதிய வருஷ மரத்துக்காக வாங்கினேன்."

"சரி. தொப்பிகளிருந்தால் நல்லதுதான்" என்றேன் நான்.

"நாய்க்கும் ஒரு தொப்பி செய்வாயா?" என்றுன் சிஷ்கின்.

"வேண்டாம். அதற்குத் தொப்பிபோட்டால் கோமாளித் தனமாகவிருக்கும். அதற்கு ஜிகினுவில் கழுத்துப்பட்டை செய்து தருகிறேன்."

"சரி; உன்னிஷ்டப்படி செய்" என்றேன் நான்.

"கிளெப்பிடம் சென்று, லாப்ஸிக் வித்தை செய்வதைக் காட்டலாம்" என்றுன் சிஷ்கின்.

நாங்கள் கிளெப் வீட்டுக்குப் போனேம். அங்கிருந்து யுரா வீட்டுக்கும் அங்கிருந்து டோல்யா வீட்டுக்கும் போனேம். ஒவ்வொரு இடத்திலும் லாப்ஸிக் வித்தைகளைக் காட்டினேம். அதற்கு நிறையத் தின்பண்டங்கள் பரிசாகக் கிடைத்தன. வான்யா வீட்டில் எங்கள் திட்டத்தை முடித்தோம். வான்யாவின் பெற்றேர்களுக்கு விருந்தாளிகள் வந்திருந்தனர். எங்களுக்குப் பேரானந்தம். இது உண்மை யான ஒத்திகையாக இருக்குமென்று நினைத்தோம். ஆனல் பெருந்தோல்வியாக முடிந்தது. லாப்ஸிக் ஒரு வினுவுக்குக் கூட சரியான விடை தரவில்லை. அதற்கு ஒரே குழப்பமாகி விட்டது; குரைப்பதையே நிறுத்திவிட்டது. எங்களுக்கு அவமானம்; தலை நிமிர்ந்து பார்க்கமுடியவில்லை. எங் களுடைய அதிசயமான நாயைப்பற்றியும் அதன் கணித இயல் மூளையைப்பற்றியும் பெருமை பேசியபின் இப்படி யானல், என்ன செய்வது?"

"நாய்க்கு என்ன கோளாறு?" என்று சிஷ்கின் கேட்டான்.

நாய் முன் ஒரு சீனிக்கட்டியைபோட்டான்; அது அதைத் துப்பிவிட்டது.

"இதுதான் விஷயம்; அது மிதமிஞ்சிய உணவை உட்கொண்டுவிட்டது. அதனால்தான் சரியாகப் பதில் சொல்ல முயலவில்லை" என்றேன் நான்.

"பள்ளிக்கூடப் பல்சுவை நிகழ்ச்சியிலும் இப்படிச் செய்தால்? பள்ளி மாணவர்கள் அனைவருக்கும் முன், நமது முகங்களில் கரி பூசிவிடுமே! வித்தை காட்டவேண்டாம், வாபஸ் வாங்கிவிடுவோம்" என்றான் சிஷ்கின்.

"அதெல்லாம் செய்யாது. இனிமேல் பின்வாங்கவும் முடியாது. வாக்களித்த பிறகு, செய்துகாட்ட வேண்டியது தான். பொறுப்புக்குப் பயப்படக்கூடாது" என்றேன் நான்.

வருஷப் பிறப்பு நாளுக்குமுன் தினம், சிஷ்கினுக்கு ஒரே கவலை; அமைதியே கிடையாது. லாப்ஸிக்கையும் அமைதியாயிருக்க அனுமதிக்கமாட்டான்.

"அதை தொந்தரவு செய்யாதே. மாலையாவதற்குள் அது களைத்துவிட்டால், குரைக்காது" என்றேன் நான்.

"சரி. இனி அதற்கு தொல்லைகொடுக்கமாட்டேன். லாப்ஸிக், போ, ஓய்வு எடுத்துக்கொள்."

லாப்ஸிக்கை விட்டுவிட்டு நாங்கள் ஆட்டத்துக்குத் தயாரானோம். லிக்கா எங்களுக்குத் தொப்பிகளைச் செய்து கொடுத்திருந்தாள். எனக்கு சின்னஞ்சிறு ஜிகினா நட்சத்திரங்களுடன் கூடிய நீலத்தொப்பி; சிஷ்கினுக்கு ஜிகினா நட்சத்திரங்களுடன் கூடிய பச்சைத்தொப்பி. ஜிகினா காலர்களும் ஜிகினாவில் செய்த முன்கை உடுப்புக்களும் கொடுத்தாள். அவற்றையெல்லாம் போட்டுக்கொண்டோம். சர்க்கஸ்காரர்கள் மாதிரியே காட்சியளித்தோம். லாப்ஸிக் கழுத்திலும் ஒரு வெண்ணிறக் 'காலர்' இருந்தது.

கடைசியாகப் பள்ளிக்கூடம்போகும் நேரம் வந்தது. பல்சுவை நிகழ்ச்சியின் முற்பாதியில் நாங்கள் கூட்டத்தில் உட்கார்ந்திருந்தோம், லாப்ஸிக் கூட்டத்தைப் பார்த்துப் பழகுவதற்காக. பிறகு நாங்கள் மேடைக்குப் பின் சென்று, எங்களுடைய ஆடைகளை அணிந்துகொண்டோம். நாய்க்குக் கழுத்துப் பட்டையைப் போட்டோம்; திரையைத் தூக்கினார்கள். சிஷ்கினும் நானும் பிரகாசமான தொப்பிகளை அணிந்து மேடையில் நடைபோடுவதை எல்லோரும் பார்த்தனர். லாப்ஸிக்கின் தோல்வாருடன் சிஷ்கின் முன்னால் சென்றான். வித்தைக்குவேண்டிய பொருட்களைக்கொண்ட சிறு கைப்பெட்டியுடன் நான் பின் தொடர்ந்தேன். சிஷ்கின், மேடையின் மத்தியில் ஒரு முக்காலிமீது லாப்ஸிக்கை அமர்த்தினான்; கூட்டத்தை நோக்கித் திரும்பினான்.

“எல்லோருக்கும் வணக்கம். கணித இயல் மூளையை உடைய நாயான லாப்ஸிக்கை நாங்கள் மகிழ்ச்சியுடன் அறிமுகம் செய்கிறோம். இதுவரை, அது பத்து முடிய எண்ணுவதற்குக் கற்றிருக்கிறது; மேலும் பயிற்சி பெற்றுவருகிறது. அடுத்ததடவை இன்னும் சிறப்பாகக் கணக்குப்போடும். லாப்ஸிக் முதன் முதலாக மேடைக்கு வருவதால், இரைச்சலாயிருந்தால் அது கூச்சப்படலாம்; ஆகவே அமைதியாயிருக்கக் கோருகிறோம்” என்று சிஷ்கின் பேசினான்.

அவனுக்கு ஒரே பீதி; அதனால் அவன் குரல் தடுமாறியது. எனக்கும் கொஞ்சம் கிலிதான். என்னைப் பேசச் சொல்லியிருந்தால், ஒரு வார்த்தைகூடப் பேசியிருக்க மாட்டேன்.

“ஆரம்பிப்போம்” என்றான் சிஷ்கின்.

நான் மூன்று மரக்கட்டைகளை அடுத்தடுத்து மேஜைமீது வைத்தேன். எல்லோரும் அவற்றைப் பார்த்தனர்.

“மேஜைமீது எத்தனை மரக்கட்டைகளிருக்கின்றன வென்று லாப்ஸிக் சொல்லப்போகிறது; லாப்ஸிக்! சொல்லு” என்றான் சிஷ்கின்.

லாப்ஸிக் மூன்று தடவைகள் குரைத்தது.

பையன்கள் உற்சாகத்தில் கை கொட்டினார்கள், கத்தினார்கள். லாப்ஸிக் பீதியுற்றுப் பாய்ந்தது; ஓடிப்போக முயன்றது. சிஷ்கின் அதைப் பிடித்துச் சீனிக்கட்டியைக் கொடுத்து, உட்கார்த்தி வைத்தான். லாப்ஸிக் சீனிக் கட்டியை மென்று கொண்டிருந்தபொழுது மண்டபத்தின் இரைச்சலும் அடங்கியது. நான் இன்னொரு மரக்கட்டையை எடுத்து மேஜையில் வைத்தேன்.

"இப்பொழுது எத்தனை கட்டைகள் உள்ளன?" என்று சிஷ்கின் கேட்டான்.

லாப்ஸிக் நான்கு தடவைகள் குரைத்தது.

மீண்டும் பையன்கள் உற்சாகமாகக் கை தட்டினர். லாப்ஸிக் ஓட முயன்றது; சிஷ்கின் அதைப் பிடித்து அதன் வாயில் ஒரு சீனிக்கட்டியைப் போட்டான்.

நான் மேஜைமீது மேலும் மூன்று கட்டைகளை வைத்தேன்.

லாப்ஸிக் ஏழு தடவைகள் குரைத்தது.

பிறகு, '2' எழுதிய அட்டையை எடுத்துக் கூட்டத்துக்குக் காட்டினேன். "அது என்ன" என்று சிஷ்கின் நாயைக் கேட்டான். அது இரண்டு தடவைகள் குரைத்தது.

நாங்கள் பல எண்களைக் காட்டினோம்; ஒவ்வொரு தடவையும் அது சரியாக விடை தந்தது.

பிறகு சிஷ்கின் "2-ஐ 2-ஆல் பெருக்கினால்?......2-ஐ 3-ஆல் பெருக்கினால்?...... 3-ஐயும் 4-ஐயும் கூட்டினால் என்ன?" என்றெல்லாம் கேட்டான்.

ஒவ்வொரு கேள்விக்கும் லாப்ஸிக் பிசகில்லாமல் விடை தந்தது. கூட்டம் கை கொட்டிக்கொண்டேயிருந்தது. ஆனால் லாப்ஸிக் பழகிவிட்டதால் மிரளவில்லை; எனக்கும் பீதி பயமெல்லாம் போய்விட்டது. லாப்ஸிக் நன்றாகக்

கணக்குப்போடுமென்றும் பையன்களும் 10-க்கு மேற்படாத எண்களுடன் கணக்குப்போடலாமென்றும் நான் கூறினேன்.

முன் வரிசையிலிருந்து ஒரு பையன் எழுந்து இந்தக் கணக்கைப்போட்டான்: "ஒரு குப்பியும் அதன் அடைப்பும் பத்து கோபெக்; குப்பியின் விலை அடைப்பின் விலையைவிட எட்டு கோபெக் அதிகம். குப்பியின் விலை என்ன? அடைப்பின் விலை என்ன?"

"லாப்ஸிக்! உன் சிந்தனைக்குல்லாயைத் தரித்துக் கொள்! இந்தக் கணக்குக்கு விடைகொடு!" என்றேன் நான்.

ஆனால் நான்தான் சிந்திக்க வேண்டும். யோசித்தேன். அடைப்பு 2 கோபெக், குப்பி 8 கோபெக், இரண்டுமாக, 10 கேபெக் என்று மனதில் போட்டேன்.

"சரி, லாப்ஸிக்! அடைப்பு என்ன விலை?"

அது இருமுறைக் குரைத்தது.

"குப்பி விலை?" அது எட்டு தடவைகள் குரைத்தது.

மண்டபத்தில் ஒரே ரகளை!

"தப்பு! தப்பு! நாய் தவருகப் பதில் தருகிறது!" என்று அவர்கள் இரைந்து பேசினுர்கள்.

"என்ன தவறு? குப்பியும் அடைப்பும் 10 கோபெக் எனில் குப்பி 8 கோபெக், அடைப்பு 2 கோபெக் என்பது சரிதானே?" என்று நான் கேட்டேன்.

"ஆனுல் அடைப்பு விலையைவிடக் குப்பி விலை எட்டு கோபெக் அதிகமென்று கணக்கு சொல்கிறது. அடைப்பு இரண்டு கோபெக் எனில், குப்பி விலை பத்து கோபெக் ஆக இருக்கவேண்டும். ஆனுல் இரண்டுமே 10 கோபெக் தான்" என்று பையன்கள் விளக்கினுர்கள்.

தவறு செய்துவிட்டேனென்று நான் புரிந்துகொண்டேன்.

"அதைக் கேட்டாயா லாப்ஸிக்? நீ போட்டது தப்பு. சிந்தித்து சரியாகப் பதில் சொல்லு" என்றேன்.

ஆனல் லாப்ஸிக் நேராக உட்கார்ந்திருந்தது; நான் தான் மண்டையை உடைத்துக்கொள்ள வேண்டியிருந்தது.

"ஒரு நிமிஷம் பொறுத்துக்கொள்ளுங்கள்" என்றேன்.

"அது சரி. அவசரமில்லை. நாய்க்கு இது கொஞ்சம் கடுமையான கணக்குத்தான்" என்று பையன்கள் கூறினர்கள்.

கொஞ்சம் கடினமென்று எண்ணிக்கொண்டே கணக்கைப் போட முயன்றேன். "குப்பி விலை அடைப்பு விலையை விட எட்டு கோபெக் அதிகமென்ருல், அடைப்பு விலை இரண்டு கோபெக், குப்பி விலை பத்து கோபெக் ஆக இருக்க வேண்டும். ஆனல் மொத்தம் பன்னிரண்டு கோபெக் ஆகிறது. கணக்கோ பத்து என்று சொல்கிறது. அடைப்பு இரண்டு கோபெக், குப்பி எட்டு கோபெக் என்ருல், வித்தியாசம் ஆறு கோபெக்தான்! எப்படிப் போடுவது? நான் சுற்றிச் சுற்றி வருகிறேன்!

"நாய்க்கு இன்னும் இரண்டு நிமிஷம் கொடுங்கள்!" என்றேன் நான்.

"வேண்டிய நேரம் கொடுப்போம்; இந்த மாதிரிக் கணக்கை அது பந்தடிப்பது மாதிரிப் போடமுடியுமா?"

"நாய் மட்டுமா? எந்தப் பையன்தான் இதைப் பந்தடிக்கும் நேரத்தில் போடமுடியும்?" என்று எனக்குள் பேசிக்கொண்டேன்.

மீண்டும் என் மூளை வேலை செய்தது.

"அட மட்டி! அடைப்பு விலை ஒரு கோபெக், இரண்டு அல்ல" என்று சிஷ்கின் சீறினன் மெல்லிய குரலில்.

தவறு எது என்பது எனக்கு விளங்கிவிட்டது. அடைப்பு விலை ஒரு கோபெக் எனில், குப்பி விலை எட்டு கோபெக்

அதிகம், ஒன்பது கோபெக் ஆகும்; இரண்டுமாகப் பத்து கோபெக் ஆகும்.

"நாய் கணக்கைப் போட்டுவிட்டது! கவனியுங்கள்! பதில் சொல்லப் போகிறது!" என்று நான் அறிவித்தேன்.

பையன்கள் அமைதியாகவிருந்தனர்.

"லாப்ஸிக்! அடைப்பு விலை என்ன?"

அது ஒரு தடவை குரைத்தது.

பையன்கள் இரைந்தார்கள், கைகொட்டினார்கள்.

அமைதியாயிருங்கள். குப்பி விலையையும் கேட்போம்."

லாப்ஸிக் ஒன்பது தடவைகள் குரைத்தது.

மண்டபமே இடிந்து விழும்போல், பையன்கள் கை கொட்டினார்கள், கூச்சல் போட்டார்கள், எழுந்து நின்று பாதங்களால் தரையைப் புடைத்தார்கள்! ஒரே உற்சாகம்!

"அருமையான அறிவாளி நாய்! தவறு செய்தபோதும், கடைசியில் சரியான பதிலைக் கொடுத்துவிட்டது" என்று அவர்கள் கூறினார்கள்.

# 20. வகுப்புக்கு ஒரு நூல்நிலையம்

இவ்வாறு புத்தாண்டு பிறந்தது; கார்கால விடுமுறை வந்தது. எல்லோரும் உல்லாசமாயிருந்தனர். சிஷ்கினும் நானும்கூட உல்லாசமாகப் பொழுதுபோக்க விரும்பினோம்; ஆனால் தினந்தோறும் படிப்பதற்குத் தடை கூடாதென்று தீர்மானித்தோம். டீச்சர் எங்களுக்கு விசேஷ வேலை கொடுத்திருக்கிருள். நாள் முழுவதும் படிப்பதற்குக்கூட சிஷ்கின் ஆவலாயிருந்தான். தினம் இரண்டு மணிநேரம் பாடங்களைப் படித்தால் போதுமென்று நான் கருதினேன், மீதிநேரத்தில் விளையாடலாம் அல்லது புத்தகங்களைப் படிக்கலாம். இவ்வாறே நாங்கள் செயலாற்றினோம்; சிஷ்கினும் அபிவிருத்தி அடைந்தான்.

விடுமுறை முடிந்தவுடன், டிக்டேஷன் நடந்தது; சிஷ்கினுக்கு 3 மார்க் கிடைத்தது. 5-க்கு மேல் வாங்கியவன் மாதிரி அவன் ஆனந்தமடைந்தான்.

"உனக்கு ஏன் இந்தப் பரபரப்பு? 3 வாங்குவது அதிசயமா?" என்று நான் கேட்டேன்.

"அதிசயமில்லை. இப்பிறவியில் நான் ருஷிய மொழியில் 3 வாங்கவில்லை. இத்துடன் நிற்கமாட்டேன். அடுத்த தடவை 4 வாங்குவேன்; பிறகு 5 கூட வாங்குவேன்."

"பலே! 4 வாங்குவதற்கு முயற்சிசெய். நீயும் 4 வாங்கிவிட்டால், நம் வகுப்பில் ஒரு 3 கூட இருக்காது. இதர குழுக்களில் எல்லோரும் 4 அல்லது 5 தான் வாங்குகிருர்கள்" என்ருன் யுரா.

"கவலைப்படாதே! நான் விருத்தியடைவேன்! இனி வகுப்பு மாணவர்கள் எனக்காக வெட்கப்படவேண்டாம். நாம் எல்லோருமாக வகுப்பின் நன்மதிப்புக்காகப் போராடவேண்டுமென்பதை அறிவேன். இனி, இதரருக்கு இணையாக முன்னேற முடியும் என்ருல்" என்ருன் சிஷ்கின்.

சிஷ்கினின் முன்னேற்றம் கண்டு, ஆசிரியருக்கும் மகிழ்ச்சிதான்.

“நீங்கள் இருவரும் ஏதாவது பொது வேலை செய்ய வேண்டும். மற்றவர்கள் ஏதாவது பயனுள்ள வேலை செய்கிறார்கள். உங்களுக்கு ஒரு பொறுப்புமில்லை” என்று ஆல்கா நிகோலிவ்னா எங்களிடம் ஒரு நாள் கூறினாள்.

“எங்களுக்கு விருப்பம்தான்” என்றோம்.

“ஆம்! எங்களுக்கு ஆசைதான். சுவரொட்டிப் பத்திரிகையில் வேலை செய்ய எனக்கு நீண்ட நாட்களாக ஆசையுண்டு. ஆனால் எவரும் என்னை ஆசிரியர் குழுவுக்குத் தேர்ந்தெடுப்பதில்லை” என்றான் சிஷ்கின்.

“ஆம்! எங்களை ஆசிரியர் குழுவுக்குத் தேர்ந்தெடுக்கட்டும்!” என்றேன் நான்.

“அதெல்லாம் இவ்வளவு சீக்கிரத்தில் சாத்தியமில்லை. படிப்பில் உயர்ந்த பையன்கள்தான் பத்திரிகாசிரியர் குழுவுக்கு தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆனால் உங்களுக்கு ஒரு சுவையான வேலையிருக்கிறது. அதுதான் நம் வகுப்புக்கு நூல் நிலையம் நடத்துவது. நீங்கள் விரும்பினால், அதற்குப் பொறுப்பேற்கலாம்” என்றாள் ஆல்கா நிகோலிவ்னா.

“புத்தகங்கள் எங்கிருந்து கிடைக்கும்?” என்று நான் கேட்டேன்.

“பள்ளிக்கூட நூல் நிலையத்திலிருந்து உங்களுக்கு ஒரு புத்தக பீரோவும் தருகிறேன்.”

“எனக்குப் பிடிக்கிறது. புத்தகங்களிடம் எனக்கு அலாதியான பற்றுதல்” என்றான் சிஷ்கின்.

“எனக்கும்தான்” என்றேன் நான்.

“நல்லது. இருவரும் நல்ல முறையில் நூல் நிலையத்தை நடத்தவேண்டும். அதாவது புத்தகங்களைக் கவனமாகப் பாதுகாக்கவேண்டும்; பையன்களையும் அதே மாதிரி செய்யச் சொல்லவேண்டும்.”

பள்ளிக்கூட நூல் நிலையக் காப்பாளரான ஸோபியா இவானேவ்னவிடம் சென்றோம். நான்காவது வகுப்பு நூல் நிலையத்துக்கு பொறுப்பாக்கப் பட்டிருப்பதைக் கூறி புத்தகங்கள் கேட்டோம்.

“நல்லது! நான்காவது வகுப்புக்கு என்னிடம் சில நூல்கள் உள்ளன. இப்பொழுதே எடுத்துப் போகிறீர்களா?”

அவள் நிறையப் புத்தகங்களைக் கொடுத்தாள். அவற்றை வகுப்பறைக்குக் கொண்டுவரப் பல நடைகள் நடந்தோம். ஏறக்குறைய நூறு புத்தகங்களிருந்தன. ஆனால் அவற்றைப் பீரோவில் அடுக்கியபின், அதிகமில்லைப்போலத் தோன்றியது; மூன்று தட்டுக்கள் அவற்றைக் கொண்டுவிட்டன; இதர தட்டுக்கள் காலியாகவிருந்தன.

“வீட்டிலிருந்து புத்தகங்களைக் கொண்டுவந்து நிரப்புவோமா? நான் ஐந்து அல்லது ஆறு புத்தகங்களைக்கொண்டு வருகிறேன்” என்றான் சிஷ்கின்.

“நானும் ஐந்து புத்தகங்களைக் கொண்டுவர முடியும்; ஆனல் மூன்று தட்டுக்களை நிரப்புவதற்கு அவைபோதுமா?”

“வகுப்புப் பையன்கள் அனைவரையும் கேட்டால்? வீட்டிலுள்ள பழைய புத்தகங்களைக் கொடுக்கச்சொன்னலென்ன?”

தட்டுக்களை நிரப்புவதற்கு நாங்கள் வகுத்துள்ள திட்டத்தை ஆல்கா நிகோலிவ்னவிடம் தெரிவித்தோம்.

“சரி சரி. பையன்களிடம் கூறுங்கள்; அவர்கள் ஒத்தாசை செய்வார்கள்” என்று அவள் சொன்னள்.

நமது வகுப்புக்கு நூல்நிலையம் அமைக்கப்போகிறேமென்று மறுநாள் மாணவர்களிடம் கூறினேம். நம்மிடம் புத்தகங்கள் அதிகமில்லையென்றும் உதவக் கூடியவர்கள் புத்தகங்கள் தரவேண்டுமென்றும் தெரிவித்தோம். பையன்கள் ஒத்துக் கொண்டார்கள்; புத்தகங்களும் வரத்தொடங்கின. ஒன்றும் இரண்டுமாக சிலர் கொடுத்தார்கள். அதற்கு மேலும் சிலர் கொடுத்தார்கள். சீக்கிரத்தில் புத்தக பீரோ நிரம்பிவிட்டது.

உடனேயே புத்தகங்களைப் படிப்பதற்கு வினியோகிக்க விரும்பினோம். ஆனால் முதலில் அவற்றின் பட்டியல் எடுக்க வேண்டுமென்று டீச்சர் கூறினாள். நாங்களே ஒரு பெரிய நோட்டைக் கொண்டுவந்து சகல புத்தகங்களின் பெயர்களையும் குறித்துக்கொண்டோம். ஒவ்வொன்றுக்கும் ஒரு இலக்கம் கொடுத்தோம். இனிமேல், ஒரு புத்தகம் தேவையென்றால், பீரோ முழுவதும் தேடவேண்டாம்; நோட்புத்தகத்தைப் பார்த்தால் போதும்.

நூல் நிலையத்தின் ஒழுங்கைப்பார்த்துச் சிஷ்கின் திருப்தியடைந்தான். தட்டுக்களில் புத்தகங்கள் நிரம்பியிருப்பதைக் கண்டு மகிழ்ந்தான்.

"ஒரு குறையில்லை; இண்டு இடுக்கு இல்லாமல் புத்தகங்களை அடுக்கிவிட்டோம்" என்றான் சிஷ்கின்.

கதவைத் திறந்து புத்தகங்களைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். அவற்றில் சில பழசாகி அழுக்கடைந்திருந்தன; அட்டைகள் கந்தலாகியிருந்தன; தையல் அறுந்து, புத்தகத் தாள்கள் தனித்தனியாகவிருந்தன. அந்தக் கந்தல் புத்தகங்களை வீட்டுக்குக் கொண்டுபோய் திருந்தம்செய்தோம்; விக்காவும் எங்களுக்கு உதவினாள்.

புத்தகங்களுக்கு அட்டையிட்டு ஒட்டுவதுதான் அதிகமாகத் தொல்லைகொடுத்தது. சிஷ்கின் முணு முணுத்துக் கொண்டேயிருந்தான்.

"இதைப் பார்! இந்தப் பையன்கள் இப்புத்தகங்களை என்ன செய்தார்கள்? ஒருவர் தலையில் ஒருவர் எறிந்து அடிப்பதற்கு இந்தப் புத்தகங்களை பயன்படுத்தினார்களா?" என்று கேட்டான்.

"அப்படிச் செய்வார்களா? நான் நம்பமாட்டேன்" என்றாள் விக்கா.

"பின்னர், அட்டைகளெல்லாம் பிய்ந்துபோவதேன்? அமைதியாக அமர்ந்து படிக்கும்பொழுது, அட்டை பிரிந்துவிடுமா?"

"பிரியாது."

"அதைத்தான் சொல்கிறேன். இதைப்பார்! ஒரு பக்கமே கிழிந்திருக்கிறது. ஏன்? அதைப் படிப்பதற்குப் பதிலாக கிழித்திருக்கிருன் ஒரு மேதாவி! இம்மாதிரி செய்கிறவன் தலைமயிரைப் பிடித்திழுத்தாலென்ன? இந்தப் பக்கம் தவறிப் போயிருக்கும். புத்தகங்களைப் பராமரிக்கும் முறை இதுவா?"

"அது தப்பு" என்று லிக்காவும் நானும் ஒத்துக் கொண்டோம்.

சிஷ்கினுக்குக் கோபம் அதிகமாகிக் கொண்டேயிருந்தது. "இதற்கு என்ன சொல்கிருய்? ஒரு பக்கத்தின் ஓரத்தில் ஆறு கால்களையுடைய நாயை ஒருவன் வரைந்திருக்கிருன். இதுசரியா?"

"தப்பு. நாய்களுக்கு ஆறு கால்களில்லை; நான்கு கால்கள்தான்" என்ருள் லிக்கா.

"நான் அதைச் சொல்லவில்லை, அறியாப் பெண்ணே! புத்தகங்களில் நாய்களை வரைவது சரியாவென்று கேட்டேன்."

"தப்பு! தப்பு! வரையக்கூடாது" என்ருள் லிக்கா.

"ஆறு கால்களோ, நான்கு கால்களோ, புத்தகங்களில் எந்தச் சித்திரமும் வரையக்கூடாது. ஒவ்வொருவரும் இஷ்டப்பட்டதையெல்லாம் புத்தகங்களில் வரைந்தால், அவை எப்படியிருக்கும்! வெறுக்கத்தக்க வழக்கம் இது!" இவ்வாறு கூறிக்கொண்டே சிஷ்கின் ரப்பரை எடுத்து நாய்ச் சித்திரத்தை அழித்தான். சில நிமிஷங்களில் அவன் மீண்டும் வளையிட்டான்.

"இதோபார்! யாரோ ஒரு முகத்தை வரைந்திருக்கிருன்! அதுவும் மசியில்!"

அந்த முகத்தை அழிக்கமுயன்ருன்; ஆனல் மசி காகிதத்தில் ஊறிவிட்டது; ஆகவே அவன் அழிக்க முயன்று, அந்த இடம் பொத்தலாகிவிட்டது.

"இதைச் செய்தவன் யாரென்று அறிந்தால், அவனிடம் என் கை வரிசையைக் காட்டுவேன்; இந்தப் புத்தகத் தாலேயே அவன் மண்டையில் ஓங்கியடிப்பேன்!" என்றான் ஆத்திரத்தோடு.

"ஆனால் சற்று முன்னால் நீயே சொன்னாயே, ஒருவர் மண்டையி லடிக்கும் ஆயுதமாகப் புத்தகத்தைப் பயன் படுத்தக் கூடாதென்று? அப்படிச்செய்தால் அட்டை கிழிந்து விடுமென்றாயே?" என்று லிக்கா கேட்டாள்.

சிஷ்கின் புத்தகத்தை. ஆராய்ச்சிக் கண்ணோடு பார்த் தான்.

"பரவாயில்லை; இந்தப் புத்தகம் அதைத்தாங்கும். அட்டை நன்றாயிருக்கிறது, பலமாயிருக்கிறது."

"சரி சரி ! எல்லா நூல் நிலையக் காப்பாளரும் தமது வாசகர்களின் தலைகளில் புத்தகங்களால் தாங்கினால், அட்டைகளுக்கு எப்பொழுதும் நெருக்கடிதான் !"என்றேன் நான்.

"ஆனால் அவர்களுக்குப் புத்தி புகட்டவேண்டும்! இப்படிப்பட்ட பொறுப்பற்ற வாசகர்களிருந்தால் நாமென்ன செய்யமுடியும்? அவர்கள் அரசாங்கச் சொத்தை வீண் செய் வதற்கும் அழிப்பதற்கும் நான் இடங்கொடுக்க மாட்டேன்."

"ஜாக்கிரதையாயிருக்கும்படி அவர்களிடம் சொல்ல வேண்டும்" என்று கூறினேன்.

"ஏதாவது ஒரு குறிப்பு எழுதினால் என்ன?" என்று லிக்கா யோசனை கேட்டாள்.

"நல்ல யோசனை! என்ன எழுதலாம்?"என்று சிஷ்கின் கூச்சலிட்டான்.

"புத்தகங்கள் ஜாக்கிரதை. அவை இரும்பால் செய்தவை யல்ல" என்று லிக்கா யோசனை கூறினாள்.

"அந்தமாதிரி எங்கு எழுதியிருந்தது, நீ பார்த்தாய்?" என்று நான் கேட்டேன்.

“எங்குமில்லை; என் சொந்தக் கற்பனை இது” என்றான் அவள்.

“சரி, அதில் ஒரு சாமர்த்தியமுமில்லை. புத்தகங்கள் இரும்பால்செய்தவையல்ல வென்பதை எல்லோரும் அறிவார்கள்” என்று நான் கூறினேன்.

“இதற்கென்ன சொல்கிறாய்? ‘புத்தகங்களை நீங்கள் பராமரித்தால் அவை உங்களைப் பராமரிக்கும்.’ நன்றாயில்லையா?” என்று சிஷ்கின் கேட்டான்.

“ஒலி மட்டும் நன்றாயிருக்கிறது. புத்தகம் உனக்கு அறிவு தரும்; ஆனால் அதனால் உன்னைப் பராமரிக்க முடியாது” என்று நான் விமரிசித்தேன்.

“இது எப்படி? ‘புத்தகங்கள், கவனம்! பணம் போட்டு வாங்கியவை’ ” என்று சிஷ்கின் இன்னொரு யோசனை கூறினான்.

“இதுவும் சரியில்லை. சில புத்தகங்கள் மிக மிக மலிவாகக் கிடைக்கின்றன; அதனால் அவற்றைக் கிழிக்கலாமா?” என்றேன்.

“இப்படிச் சொல்வோம்: புத்தகங்கள் உன் நண்பர்கள்; அவற்றைப் பாதுகாப்பது உன் பணி” என்று லிக்கா யோசனை கூறினாள்.

அதைப்பற்றிச் சிந்தித்தோம்; அது போதுமென்று ஏற்றுக்கொண்டோம். காகிதமும் வர்ணங்களும் வாங்கி, இந்தக் குறிப்பை எழுதினோம்.

மறுநாள், புத்தக பீரோவுக்குப் பக்கத்தில் சுவர்மீது இந்தக் குறிப்பைத் தொங்கவிட்டபின் புத்தகங்களை விநியோகிக்கத் தொடங்கினோம்.

எப்பொழுது ஒரு புத்தகத்தைக் கொடுத்தாலும், சிஷ்கின் கூறுவான். “நாய்கள், பேய்கள், வேடிக்கை முகங்கள் முதலியவற்றை வரையாதே!”

“எதற்காக நான் வரையப்போகிறேன்!” என்று கேட்பான் புத்தகம் எடுப்பவன்.

“அது எனக்குத் தெரியாது. உன்னை எச்சரிப்பது என் கடமை. இந்தப் புத்தகம் இப்பொழுது பொதுச்சொத்து. எந்தப் புத்தகத்தையும் கெடுக்கக் கூடாதென்றாலும் உன் சொந்தப் புத்தகங்களை நீ என்னவேண்டுமானாலும் செய்துகொள். நூல் நிலையப் புத்தகங்களைப்பற்றி ஜாக்கிரதையாக விரு.”

“சரி! எச்சரித்துக்கொள்.”

ஆனால் சிஷ்கின் அத்துடன் திருப்தி அடையவில்லை. நமது நூல் நிலையத்தில் புத்தகம் கடன் வாங்கிய ஒவ்வொரு பையனும் புத்தகப் பராமரிப்பைப்பற்றி சிஷ்கினிடம் ஒரு பிரசங்கமே கேட்கவேண்டும்.

அன்று பாடங்கள் முடிந்த பின், சிஷ்கின் பீரோவுக்கருகில் அமர்ந்துகொண்டு, தட்டுக்களின் காலியிடங்களை துக்கத்துடன், பார்த்துக்கொண்டிருந்தான், என்னைக் கண்டதும்...

“இது மிக மோசம். பல புத்தகங்கள் போய்விட்டன. தட்டுக்களெல்லாம் நிறைந்திருந்தபொழுது நன்றாயிருந்தது” என்றான்.

“ஏன்? பையன்கள் படித்தபின் திரும்பக் கொடுத்துவிடுவார்கள்” என்றேன்.

“ஆம். ஆனால் வேறு புத்தகங்களை எடுத்துப்போவார்கள், நிறைந்த பீரோவாக இனி இருக்காது.”

“பீரோ ஏன் நிறைந்திருக்க வேண்டும்? புத்தகங்களை அச்சடிப்பது எதற்காக? படிப்பதற்கா, பீரோவில் உறங்க வைப்பதற்கா?”

நான் வீட்டில் படிப்பதற்காக ஒரு புத்தகத்தை எடுத்தேன்.

“நீயுமா? முன்பே சில புத்தகங்கள் தான் உள்ளன” என்று கடிந்து கொண்டான்.

"சீக்கிரத்தில் படித்து விட்டுக் கொண்டு வருகிறேன்" என்று உறுதி கூறினேன்.

பிறகு, அவனும் ஒரு புத்தகத்தை எடுத்துக்கொண்டான். "ஒரு புத்தகம்கூடவோ குறையவோ இருப்பதால் நஷ்ட மில்லை. எப்படியும் சில புத்தகங்களே மிஞ்சியுள்ளன" என்று அவனே ஆறுதல் கூறிக்கொண்டான்.

புத்தகங்கள் நினைத்த மாத்திரத்தில் கிடைத்ததால், சிஷ்கினும் படிப்பில் ஏற்பட்ட சிரத்தை காரணமாக வீதியில் கூடப் படித்தான். ஒருநாள் விளக்குக்கம்பத்தில் முட்டிக் கொண்டான்; நெற்றியில் கட்டி மாதிரி வீங்கி விட்டது. அதன் பிறகு, அவன் வீட்டில் படித்தான்.

நூல் நிலைய வேலையில் அவன் மிகவும் சிரத்தையுள்ளவ னாயிருந்தான். அவனுடைய குணம்கூட மாறிவிட்டது; மிகவும் சுத்தமாக விருந்தான்; திட்டமிட்டுக் காரியம் செய் தான்; சுய உணர்வில்லாமல் மனோராஜ்யம் செய்யும் பழக்க மும் குறைந்தது. பையன்களிடம் மிகவும் கருராகவிருந் தான். யாராவது அழுக்கடைந்த கரங்களுடன் புத்தகம் எடுக்கவந்தால், அவனைக் கேலிசெய்து குத்திக்காட்டி அழ வைப்பான்.

"நீயே வெட்கப்படவேண்டும்! உன் கைகளால் என்ன செய்தாய்?"

"தெரியாது. அதைப்பற்றி உனக்கென்ன?"

"எனக்கென்னவா? நீ புத்தகம் எடுக்கவரவில்லையா?"

"ஆம்"

"இந்தமாதிரி அழுக்குக் கைகளையுடையவனுக்குப் புத்தகம் கொடுக்க மாட்டேன். அதைக் கெடுத்துவிடுவாய்."

"வீட்டுக்குப் போனவுடன் கைகளைக் கழுவிக்கொள் வேன்."

"அது முடியாது. இங்கேயே கழுவிக்கொண்டு வா; புத்தகம் தருகிறேன். அடுத்த தடவை, புத்தகம் எடுக்கவரும் பொழுது சுத்தமாக வா."

யாராவது எடுத்த புத்தகத்தைக் கொடுக்காமல் தாமதம் செய்தால் சிஷ்கினுக்குப் பிடிக்காது.

"எவ்வளவு நாட்களாய் இந்தப்புத்தகத்தை வைத்திருக்கிருய்? வேறு ஒருவரும் அதைப்படிக்க வேண்டாமா? உனக்கு படிக்கப் பிரியமில்லாவிட்டால், கொண்டுவந்துவிடு; வேறு ஒருவர் படிக்கலாம்."

"இன்னும் முடிக்கவில்லை: முடித்ததும் தருகிறேன்."

"அதைப்படித்து முடிக்க எத்தனை வருஷங்களாகும்?"

"பத்து நாட்கள் வைத்திருக்கலாமல்லவா?"

"சரி. நீ அதை எப்பொழுது எடுத்தாய்?"

"ஒரு வாரத்துக்குமுன். பத்து நாள் கெடு முடியவில்லை"

"அந்தப் புத்தகத்தைப் படிக்கப் பத்து நாள் வேண்டுமா? தவிர, அதிகப்பட்சக் கெடுவே, பத்துநாள். பத்து நாள் வைத்திருக்க வேண்டுமென்று கட்டாயமில்லை; முன்னுலேயே கொண்டு வரலாம்."

"ஆனுல் நான் இன்னும் முடிக்கவில்லையே."

"சரி, சரி. சீக்கிரம் முடி."

மறுபுறத்தில், யாராவது சீக்கிரமாகப் புத்தகத்தைக் கொண்டு வந்தாலும் தப்பமுடியாது; சிஷ்கின் ஒரு பிரசங்க மடித்து விடுவான்.

"ரொம்ப வேகம் போலிருக்கிறது! நேற்று எடுத்த புத்தகம் இன்று திரும்புகிறது! நீ இதைப் படிக்கவே யில்லையென்று நினைக்கிறேன்" என்பான்.

"பின், எதற்காக எடுத்துக் கொண்டு போனேன்?"

"எனக்கு எப்படித் தெரியும்? படங்களைப் பார்ப்பதற் காகக் கொண்டு போனாயோ?"

"நான் என்ன, பச்சிளங் குழந்தையா?"

"சரி. இந்தப் புத்தகம் எதைப் பற்றியது?"

"இது என்ன, பரீட்சையா?"

"புத்தகத்தை நீ படித்தாயா, இல்லையா வென்பதை நான் அறிய வேண்டும்."

"அது உன் வேலையல்ல. புத்தகங்களைக் கொடுப்பது தான் உன் வேலை; வாசகர்களைப் பரீட்சை செய்வது உன் ஜோலியல்ல."

"அதுதான் தவறு. நான் நூல்நிலையக் காப்பாளன். வாசகர்களைக் கண்காணிப்பது என் பணி. நீ எடுக்கும் புத்தகங்களைப் படிக்காவிட்டால், அவற்றை உனக்கு எதற் காகக் கொடுக்கவேண்டும்? வேறு யாராவது படிப் பார்கள்!"

படித்த புத்தகங்களைப்பற்றிப் பையன்கள் சுருக்கமாக விமரிசனம் எழுதவேண்டுமென்று சிஷ்கின் யோசனை கூறினான்.

"படிப்பதோடு சரி! விமரிசனம் எழுதுவோமென்று யோசனை உங்களுக்குத் தோன்றுவதே கிடையாது" என்றான்.

"விமரிசனம் எதற்கு?"

"வகுப்புப் பத்திரிகையில் பிரசுரிக்கலாம்; நல்ல புத்தக மாயிருந்தால், இதர பையன்களுக்கு அக்கறை உண் டாகும்; படிக்க விரும்புவார்கள். நீ விமரிசனம் எழுதாவிட் டால், இனி உனக்குப் புத்தகம் தரமாட்டேன்."

இப்படித்தான் சிஷ்கின் சுருக்கமான விமரிசனங்களை எழுதச் செய்தான். பையன்கள் பல புத்தகங்களுக்கு எழுதியதால், வகுப்புப் பத்திரிகையில் இடமில்லை. ஆகவே நாங்களே ஒரு பத்திரிகை தொடங்கினோம். அதற்குப் பால வாசகர் என்று பெயரிட்டோம். பையன்கள் எழுதிய விமரிசனங்களையெல்லாம் அதில் வெளியிட்டோம். பையன்கள் தங்களால் முடிந்த அளவுக்குச் சுவையாக எழுதியதால், பத்திரிகை நன்ருயிருந்தது.

# 21. கூட்டுறவின் வெற்றி

சிஷ்கின் ருஷியப் பாடத்தில் முன்னேறியதிலிருந்து, குறிப்பாக, நாங்கள் நூல்நிலையக் காப்பாளரான பின், வகுப்பில் எங்கள் மதிப்பு உயர்ந்தது. சிஷ்கின் கூடைப்பந்து ஆடுவதற்கு அனுமதி பெற்ருன்; அவன் நன்ருக விளையாடினுன்; அவனை எங்கள் ஆட்டக்குழுவுக்குத் தலைவனுக்கினேம். அவன் எங்கள் கோஷ்டிக்கு அளித்த பயிற்சியின் பலனுகப் பள்ளிக்கூடப் பந்தயத்தில் வெற்றியடைந்தோம்; அதனுல் எங்களுடைய கௌரவம் அதிகரித்தது. எங்கள் வகுப்புக் குழுவைப்பற்றிப் பள்ளிப் பத்திரிகையில் ஒரு கட்டுரை வந்தது.

ஆனுல் எங்களுடைய கஷ்டங்களனைத்தும் தீர்ந்துபோகவில்லை. நாங்கள் எவ்வளவு தூரம் கூட்டாகக் கஷ்டப்பட்டு ருஷியப் பாடத்தை பயின்ருலும், சிஷ்கின் 3–க்கு மேல் வாங்கவில்லை. முதலில் 3 வாங்கியபொழுது, அடுத்தபடி 4 வாங்குவேன், பிறகு 5 வாங்குவேன் என்று அவன் திடமாக நம்பினுன். அது தவருக முடிந்தது. டீச்சர் 3–தான் கொடுத்து வந்தாள். ஆகவே அவன் வருந்தினுன்.

"இதைப் பார்த்தாயா? இனி நான் 3 வாங்கிக்கொண்டிருக்க முடியாது. நான் வகுப்பு நூல்நிலையத்துக்கு அதிகாரி; கூடைப்பந்துக் குழுவுக்குத் தலைவன்; பள்ளிக்கூடப் பத்திரிகையில் என்னைப்பற்றி எழுதியிருக்கிருர்கள். நான் எப்படி ருஷிய மொழியில் 3 மார்க் வாங்கமுடியும்?" என்று அவன் வாலட்யாவிடம் கூறினுன்.

"பொறுமையாயிரு. முயற்சியைக் கைவிடாதே" என்ருர் வாலட்யா.

"முயற்சியைக் கைவிடமாட்டேன். ஆனுல் ஆல்கா நிகோலிவ்னுவுக்கு 3 கொடுத்துப் பழகிவிட்டதோ? அதற்கு மேல் எனக்குக் கொடுக்கமாட்டாளென்று பயப்படுகிறேன்."

“அது தப்பு. அவள் சரியாகத்தான் மார்க் கொடுப்பாள். நீ 4 வாங்கத் தகுதியடைந்தால் நிச்சயம் 4 கொடுப்பாள்” என்றார் வாலட்யா.

“அது சீக்கிரத்தில் நடக்குமா? வகுப்பிலேயே நான் மட்டும் 3 வாங்குகிறேன். என்றால் வகுப்புக்கே களங்கம்.”

மேலும் தீவிரமாக முயற்சி செய்தோம். ஆல்கா நிகோலிவ்னவும் பாடங்கள் முடிந்தவுடன் சிஷ்கினுக்கு சொல்லிக் கொடுத்து வந்தாள். அவன் மெதுமாக முன்னேறினான்; வேகமில்லாவிட்டாலும், உருவான முன்னேற்றம் அது. டிக்டேஷனில் 3 மார்க் வாங்கி ஆறு வாரங்களான பின், ஒரு நாள் அவன் 4 வாங்கினான். அது வகுப்புக்கே ஒரு செந்தினமாயிற்று.

அன்று ஒரு வகுப்புக்கூட்டம் நடந்தது; ஆல்கா நிகோலிவ்ன வகுப்பின் முன்னேற்றத்தைப்பற்றிப் பேசினாள்.

“நமது வகுப்பில் குறைந்த மார்க் வாங்குகிறவர் எவருமில்லை. 2 மார்க்கோ 3 மார்க்கோ வாங்கும் பையன் ஒருவனுமில்லை” என்று அவள் கூறினாள்.

சிஷ்கினும் நானும் கஷ்டப்பட்டுப் படித்ததாகவும் சிஷ்கின் இனித் துரிதமாக முன்னேறுவானென்றும் அவள் கூறினாள்.

“நமது பள்ளியில் பல நல்ல வகுப்புக்களிருக்கின்றன; அவற்றில் உயர்ந்த மார்க் வாங்கும் மாணவர்கள் படிக்கிறார்கள். ஆனால் ஒவ்வொரு பையனும் 4 அல்லது 5 வாங்கும் வகுப்பு நம்முடையது மட்டும் தான். மற்ற வகுப்புகள் இந்த உதாரணத்தைப் பின்பற்றுமென்று நம்புகிறேன். ஆனால் நீங்கள் மெத்தனமாகிவிடக்கூடாது. தொடர்ந்து முன்னேற வேண்டும். படித்துக் கொண்டேயிருக்காவிட்டால், பின் தங்கி விடுவீர்கள்” என்று ஆல்கா நிகோலிவ்ன கூறினாள்.

பிறகு, வாலட்யா பேசினார்:

“உங்கள் வகுப்பைப்பற்றி நான் பள்ளிக்கூடப் பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதப் போகிறேன். உங்களைப்பற்றி பள்ளிக்கூடம் முழுவதும் அறிய வேண்டும்; அப்பொழுது தான் இதர வகுப்புகள் உங்களுடைய உதாரணத்தைப் பின்பற்ற முடியும். நீங்கள் நல்ல மார்க் வாங்குவது எப்படி என்பதை அவர்களுக்குச் சொல்ல வேண்டும்.”

“ஆல்கா நிகோலிவ்னு நல்லாசிரியராக இருப்பது தான் காரணம்” என்ருன் வான்யா.

வான்யா அதை ஆதரித்துப் பேசினுன்.

“எல்லாம் ஆசிரியரைப் பொறுத்திருக்கவில்லை. நல்ல ஆசிரியர்களின் வகுப்புகளில் நல்ல பையன்களுடன் மோசமான பையன்களும் இருக்கலாம்” என்ருள் ஆல்கா நிகோலிவ்னு.

“இன்னெரு காரணம், நாங்கள் அனைவரும் நன்ருகப் படிப்பதில் சிரத்தை காட்டினேம்” என்ருன் டோல்யா.

“அந்த சிரத்தைக்குக் காரணம்? யாராவது சொல்ல முடியுமா?” என்று வாலட்யா கேட்டார். சிஷ்கின் தன் கரத்தை உயர்த்தினுன். “வகுப்பில் நாமெல்லோரும் நல்ல நண்பர்களாயிருப்பதுதான் காரணமென்பது என் கருத்து. நாம் ஒவ்வொருவரும் தன்னைப்பற்றி மட்டுமல்ல, இதர வகுப்புத் தோழர்களைப் பற்றியும் அக்கறை கொள்கிருேம். இதை நான் அனுபவத்தில் அறிவேன். நான் படிப்பில் பின் தங்கியிருந்தபொழுது, எல்லாப் பையன்களும் என்னைப் பற்றி கவலைப்பட்டார்கள். நான்தான் அதைப் புரிந்து கொள்ளவில்லை. அவர்கள் உதவி செய்ய விரும்பியதை நான் இப்பொழுது உணர்கிறேன். அவர்கள் வகுப்பின் நன் மதிப்புக்காகப் பாடுபட்டார்கள்.”

“சிஷ்கின் சொல்வது முற்றிலும் உண்மை! உங்கள் வகுப்பின் உயர்வுக்கு உதவியது நட்பு. உண்மையான நட்பு தோழனின் குறைகளைப் பற்றி பாராமுகமாயிருப்பதல்ல

என்பதை நீங்கள் புரிந்து கொண்டீர்கள். அவனுடைய சிறந்த குணங்களை வெளிப்படுத்துவதற்கு உதவி செய்வதே தோழமை என்பதைத் தெரிந்து கொண்டீர்கள்'' என்றார் வாலட்யா.

''நான் பேசலாமா?'' நான் பேசினேன்:

''ஒருவன் தன் நண்பனை எப்படி நடத்த வேண்டுமென்பதை நான் கற்றுக் கொண்டேன். நண்பன் சரியான காரியத்தைச் செய்ய வேண்டுமென்று வற்புறுத்த வேண்டும். நண்பன் தவறு செய்தால், அதைச் சுட்டிக் காட்டுவதற்குப் பயப்படக்கூடாது. பயந்தால், உண்மையான தோழனாக மாட்டாய். நான் இதை அனுபவத்தில் படித்தேன். சிஷ்கின் பள்ளிக்கு மட்டம்போட்டபொழுது, அவனுடைய ரகசியம் வெளிவராமலிருக்க நான் உடந்தையாயிருந்தேன். அதனால் அவனுக்குத் தீங்குதான் ஏற்பட்டது. ஆனால் இப்பொழுதெல்லாம் அவனுக்கு நான் விட்டுக் கொடுப்பதில்லை. நான் அவனுடைய உண்மையான நண்பனாயிருக்கிறேன்.''

''அதுதான் சரி, வித்யா'' என்றார் வாலட்யா.

நீண்டநேரம் கூட்டத்தில் பேசினோம்; பிறகு வீட்டுக்குப் போனோம்.

சிஷ்கினும் நானும் பள்ளிக்கூடக் கட்டிடத்தை விட்டு வெளியே வந்தோம். நாங்கள் வகுப்பறையிலிருந்தபொழுது, வெளியில் வெப்பம் அதிகரித்துவிட்டது. காலையில் கடுங்குளிராக இருந்தது; ஆனால் இப்போது, கூரைகளிலிருந்து தொங்கிய பனித் திவலைகள் சூரிய ஒளியில் பிரகாசித்தன. உருகி ஒழுகின. கதகதப்பான மிருதுவான காற்று வீசியது. கோடை நாளின் ஆற்றுநீர் மணத்தைப் போலவிருந்தது இந்தக் காற்றின் மணம். தென் திசையிலிருந்து முன்பே வசந்தகாலம் வந்து விதைப்புப் பருவம் தொடங்கிவிட்ட காசாக்ஸ்தான் புல் வெளிகளிலிருந்து—வரும் காற்று மாதிரித் தோன்றியது. நான் ஆனந்தமடைந்தேன்; என் மார்புக்குள் இதயம் அகன்று விரிந்தது. காற்றில் நடப்பதுபோல்

எனக்குத் தோன்றியது. பற்பல அதிசயமான சிந்தனைகள் என் மூளையில் அரும்பின. ''ஏதாவது பிரமாதமானதாகச் செய்யவேண்டும்; எல்லோரும் என்னைப் பார்த்து அதிசயமடைந்து என்னைப் போல உணர்ச்சி பெறவேண்டும்'' என்றெல்லாம் எண்ணினேன்.

இவ்வாறு நான் சிறகுகட்டிப் பறக்கும்பொழுது, சிஷ்கின் எதையும் கவனிக்காமல் என்னுடன் வந்தான். பிறகு, அவன் நின்ருன். பையிலிருந்து மார்க்சீட்டை எடுத்தான்; 4ஐப் பார்த்துப் பரவச மடைந்தவனுய் நின்ருன்.

முப்பத்திரண்டு பற்களும் தெரியச் சிரித்துக்கொண்டு அவன் கூறினுன். ''இந்த 4க்காக நான் எவ்வளவு கனுக் கண்டேன்! 4 வாங்கி அம்மாவிடம் காட்ட வேண்டும், அவள் திருப்தியடைய வேண்டும் என்று எத்தனை தடவைகள் எண்ணியிருக்கிறேன். நான் அம்மாவின் பொருட்டுப் பள்ளிக்குப் போகவில்லை; அம்மா அதை எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருக்கிருள். இருந்தாலும் அவளுக்காகவும் நான் கொஞ்சம் கஷ்டப்படுகிறேன். தன் மகன் நல்ல மனிதனுயிருக்கவேண்டுமென்று அவள் விரும்புகிருள். நான் ஏதாவது பயனுள்ளவனுக வளர்வேன். அது நிச்சயம். ஒரு நாள் அம்மா என்னைப்பற்றிப் பெருமைப்படுவாள். கொஞ்சம் கூடுதலாகக் கஷ்டப்பட்டு 5 வாங்கி விடுவேன். அம்மாவுக்கு பெருமையாயிருக்கும். ஸினு அத்தையும் பெருமைப்படுவாள். பரவாயில்லை, அவள் அடிக்கடி என்னைத் திட்டினுலும் மோசமானவளல்ல.''

மார்க் சீட்டை மீண்டும் பையில் போட்டு விட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரு நீண்ட மூச்சுவிட்டுக் கூறினுன்:—

''இந்தக் காற்று மணத்தை நுகர்ந்தாயா? இது வசந்தகாலம், வித்யா, வசந்தகாலம். பிப்ரவரி முடிந்து விட்டது. பிப்ரவரிதான் கார் காலத்தின் கடைசி மாதம். மார்ச் வரப்போகிறது; வசந்தம் வருகிறது, வாய்க்கால்களில் தண்ணீர்

ஓடும், பசும்புல் பரப்புப் பார்ப்போரை பரவசப்படுத்தும்; முள்ளெலிகளும் மற்ற காட்டு விலங்குகளும் விழித்தெழும்; பறவை பாடும்; பூ மலரும்..........''

அவன் வசந்தத்தையும் பறவைகளையும் பற்றி பேசிக் கொண்டேயிருந்தான்; அதெல்லாம் எனக்கு ஞாபகமில்லை. ஏனெனில் அப்பொழுதுதான், எங்களுக்கு நேர்ந்ததையெல்லாம் பற்றி எழுதத் தீர்மானித்தேன். அன்றே எழுதத் தொடங்கினேன். அநேகமாக, தினசரி எழுதி வந்தேன். ஒவ்வொன்றைப்பற்றியும் எழுதியிருக்கிறேன்; ஆனால் முக்கியாம்சங்களைப் பற்றியே குறிப்பிட முயன்றிருக்கிறேன். மிக முக்கியமான அம்சமென்னவென்றால், நான்காவது வகுப்பை முடிக்கும்பொழுது, சிஷ்கினும் நானும் அதிகப்பட்சமார்க் வாங்கினோம்; அதாவது ஒவ்வொரு பாடத்திலும் 5 வாங்கினோம்; அவ்வளவுதான்.

## ஆசிரியரின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| சிறியன சிந்தியாதான் | 2 | 50 |
| கற்பின் கனலி | 3 | 50 |
| கம்பனும் மில்டனும் | 2 | 50 |
| வள்ளுவன் கண்ட வாழ்வியல் | 1 | 50 |
| கம்பன் கண்ட அரசியல் | 2 | 50 |
| இளங்கோவின் பாத்திரப் படைப்பு | 3 | 50 |
| மனம்போல் மாங்கல்யம் | 1 | 25 |
| வெனிஸ் வணிகன் | 1 | 50 |
| புயற்காற்று | 1 | 50 |

மீனுட்சி புத்தக நிலையம்
60 மேலக் கோபுரத் தெரு, மதுரை-1

## சிறுவர் நூல்

| | | | |
|---|---|---|---|
| கற்பகத் தீவு | R. வஜ்ரேஸ்வரி | 1 | 00 |
| வெறும் முரசு | 'ஆர்வி' | 1 | 00 |
| மழை | கு. ராஜாராம் | 0 | 75 |
| இந்தியாவின் ஞானச்சுடர் | " | 1 | 25 |
| சிறுவர்க்கு விஞ்ஞானம் | அரு. சோமசுந்தரம் | 1 | 50 |
| விஞ்ஞானக் கதைகள் | S. வெங்கடாச்சாரி | 1 | 00 |
| அப்பாவுக்கு பரிசு | கே. கண்ணுசாமி | 1 | 25 |
| பொங்கலோ பொங்கல் | " | 1 | 25 |
| மஞ்சள் நாய்க்குட்டி | 'ஈ ஸ்ரீ' | 1 | 00 |
| இரண்டு விரல்கள் | N. S. இராமன் | 1 | 25 |
| மிருகங்கள் நடத்தும் சர்க்கஸ் | 'மாலி' | 1 | 50 |
| சிறுவர் சோலை | இன்பவண்ணன் | 1 | 00 |
| காந்தி இல்லம் | M. சொக்கலிங்கம் | 0 | 75 |
| சிங்கத்தின் கட்டில் | " | 0 | 75 |
| நிழலோட்டம் | மா. பா. குருசாமி | 1 | 50 |

மீனாட்சி புத்தக நிலையம்
60 மேலக் கோபுரத் தெரு, மதுரை-1

